# நாள் முழுவதும்

காலை வேளையில்



# புத்துணர்ச்சி

பிற்பகலில்



# அளிக்க...

இரவில்






குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்



ஹிமாலயா புக்கே ஸ்நோ எல்லா சீதோஷ்ணநிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 42

1953 மே 17

விஜய ௵
வைகாசி ௪



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


## அகில இந்திய காதி, சுதேசி & கைத்தொழில் கண்காட்சி

(திருச்சிராப்பள்ளி நகர சபையாரால் நடத்தப்படுவது)

**16-5-1953 முதல் 14-6-1953 வரை**

16-5-53 சனிக்கிழமை மாலை 5-30 மணிக்கு சென்னை சர்க்கார் முதலமைச்சர் கனம் சி. ராஜகோபாலாச்சாரியார் அவர்களால் ஆரம்பித்து வைக்கப்படும்.

○●○

| | | | |
|---|---|---|---|
| 17-5-53 | நகைச்சுவை அரசு என். எஸ். கிருஷ்ணன் & டி. ஏ. மதுரம் பார்ட்டி—நாடகம் | ... | "பணம்" |
| 21-5-53 | குமாரி துளசி & சாந்தா | ... | பரதநாட்டியம் |
| 23-5-53 | கே. ஆர். ராமசாமி & பார்ட்டி—நாடகம் | ... | "காதல் ஜோதி" |
| 24-5-53 | கே. ஆர். ராமசாமி & பார்ட்டி—நாடகம் | ... | "ஓர் இரவு" |
| 27-5-53 | எம். எல். வசந்தகுமாரி & பார்ட்டி | ... | பாட்டு |
| 30-5-53 | கொச்சின் சகோதரிகள் | ... | பரதநாட்டியம் |
| 31-5-53 | எம். கே. தியாகராஜ பாகவதர் & பார்ட்டி | ... | பாட்டு |
| 4-6-53 | மதுரை மணி அய்யர் & பார்ட்டி | ... | பாட்டு |
| 7-6-53 | லலிதா, பத்மினி & ராகினி | ... | நடனம் |
| 12-6-53 | கே. பி. சுந்தராம்பாள் & பார்ட்டி | ... | பாட்டு |

☆☆☆ மே 15உ முதல் ☆☆☆

சென்னை: பிரபாத் · வெலிங்டன் · லக்ஷ்மி மற்றும் தென்னாடெங்கும்



பிரகாஷ் புரொடக்ஷன்ஸ்

# பெற்ற தாய்

| ஸ்டுடியோ: | விநியோகஸ்தர்கள் | டைரக்ஷன்: |
| --- | --- | --- |
| பிரகாஷ் | ஏவி எம் லிமிடெட், மதராஸ்.2. | பிரகாஷ் ராவ் |




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 42

# டி. டி. கே. விஜயம்

சென்ற சனிக்கிழமையன்று இந்திய சர்க்காரின் தொழில் மந்திரி கனம் டி. டி. கே. அவர்கள் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்து தென் ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் தொடங்கினார். இரவென்றும் பகல் என்றும் பாராமல், மண்டை வெடிக்கும் வெய்யிலையும் பொருட்படுத்தாமல், பஞ்சத்திலடிபட்ட பிரதேசங்களில் பிரயாணம் செய்து ஆங்காங்குள்ள நிலைமையை நேரில் தெரிந்து கொண்டார். அந்தந்தப் பிரதேசத்திலுள்ளவர்கள் நூற்றுக்கணக்கான மகஜர்களை அவரிடம் சமர்ப்பித்தார்கள்.

திரும்பி டில்லி சென்ற பிறகு தம்மாலியன்ற முயற்சி செய்து பஞ்சத்திலடிபட்ட மக்களுக்கு இந்திய சர்க்காரின் உதவி கணிசமாகக் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்வார் என்று நம்புகிறோம். பஞ்ச நிலைமையினால் சென்னை அரசாங்கத்தாருக்கு ஏற்பட்டிருக்கும் பொருளாதார நெருக்கடியைச் சமாளிப்பதற்கும் கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரியின் யோசனைகள் உதவியாயிருக்கும் என்று நம்புகிறோம்.

வடநாட்டார் எவ்வளவு விசால மனம் படைத்தவர்களாயிருந்தாலும், தென்னாட்டுப் பிரச்னைகளைச் சற்று அலட்சிய பாவத்துடனே பார்ப்பது வழக்கமாயிருந்து வருகிறது. தென் பாண்டிய நாட்டுக்கும் புதுடில்லிக்கும் தூரம் எவ்வளவு என்பதையும் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பாண்டிய நாட்டுப் பஞ்சப் பிரதேசங்களில் மக்கள் எழுப்பும் தீனக் குரல் புது டில்லி வரையில் போய் எட்டுவது கஷ்டமான காரியந்தானே? அப்படிப் போய் எட்டினாலும், அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் போடும் பலமான இரைச்சலில் இது அடிபட்டுப் போய் விடுகிறது!

ஆதலின், கனம் டி. டி. கே. இச் சந்தர்ப்பத்தில் இம்மாதிரி ஒரு சுற்றுப் பிரயாணம் வைத்துக் கொண்டதை நாம் பெரிதும் பாராட்ட வேண்டும். அறிவாளியும் திறமைசாலியுமான தென்னிந்தியர் ஒருவர் இந்திய சர்க்காரில் மந்திரியாயிருப்பதின் முக்கியத்தை இம்மாதிரி சந்தர்ப்பங்களிலே தான் தென்னிந்திய மக்கள் நன்கு அறிந்து கொள்ளவும் முடியும்.

டி. டி. கே. யின் சுற்றுப் பிரயாணம் ஏதோ சென்னை சர்க்காருக்கு எதிரான முயற்சி என்பதாகச் சிலர் கற்பனை செய்து கொண்டு அவஸ்தைப் படுகிறார்கள்.

இதைப் போல் அறிவீனம் வேறொன்றும் கிடையாது.

சென்ற பொதுத் தேர்தல் முடிந்தவுடனே சென்னை அரசியலில் ஏற்பட்ட நெருக்கடியைச் சமாளிக்கும் பொருட்டு ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் சென்னை முதன் மந்திரி பதவியை ஏற்க வேண்டுமென்று பலரும் விரும்பினார்கள். ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா அச்சமயம் நேருஜிக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்த மூன்று பெயர்களில் ஸ்ரீ டி. டி. கே. யின் பெயரும் ஒன்று. அப்போது ஸ்ரீ டி. டி. கே. இந்தப் பொறுப்பை ஏற்க மறுத்து விட்டார்.

இப்போதுகூட ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி சென்னை முதன் மந்திரி பதவியை ஏற்க விரும்பினால், அதற்குத் தங்குதடை எதுவும் இராது. முதன் மந்திரி பதவி என்னும் முள் கிரீடத்தை ஸ்ரீ டி. டி. கே. யின் தலையில் சூட்டி விட்டுத் தாம் விலகிக் கொள்ள ராஜாஜி எல்லாரிலும் அதிக ஆவலுடையவராக இருப்பார்.

ஆகையால் சென்னை சர்க்காருடன் டி. டி. கே. போட்டியிட்டு ஏதோ சூழ்ச்சி செய்வதாக யாரும் கற்பனை செய்து கொண்டு கஷ்டப்பட வேண்டிய அவசியமில்லை.

"இவர் சுற்றுப் பிரயாணம் செய்து என்னத்தைப் புதிதாகக் கண்டு பிடித்து விடப் போகிறார்? தென்னாட்டில் ஆறு வருஷங்களாக மழையில்லையென்பதும் பல இடங்களில் பஞ்சம் என்பதும் எல்லாருக்கும் தெரிந்த விஷயந்தானே? இரவு நேரத்தில் காரில் விழுந்தடித்து ஓடிக்கொண்டே பஞ்சத்தைப் பற்றிய ஆராய்ச்சி புதிதாக என்ன செய்துவிடப் போகிறார்? திருச்சியில் மாலை ஆறு மணிக்குக் காரில் ஏறி இரவு பன்னிரண்டு மணிக்குச் சிவகெங்கை சேர்ந்ததில் பஞ்ச நிலைமை இவருக்கு என்ன தெரிந்து விடும்?" என்றெல்லாம் கேட்டவர்களும் உண்டு.

இந்தமாதிரி கேள்விகளுக்குக் கனம் டி. டி. கே. தக்க பதில் சொல்லியிருக்கிறார். "நான் இந்திய சர்க்கார் மந்திரியாயிருந்தாலும் தமிழ் நாட்டில் வேர் ஊன்றியவன்தானே! தமிழ் மக்களின் சுக துக்கங்களில் எனக்குப் பங்கு இல்லையா! பஞ்சத்தினடிபட்ட மக்களை நேரில் பார்த்து அவர்களுடைய நிலைமையை அறிந்து கொள்வது என் கடமை இல்லையா!" என்று ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி கேட்டிருக்கிறார். நிச்சயமாக அது அவருடைய கடமையேயாகும்.

பகலில் பிரயாணம் செய்தாலும் இரவில் பிரயாணம் செய்தாலும் ஆங்காங்கே பஞ்சத்தினடிபட்ட மக்களின் முறையீடுகளைக் காதினால் கேட்பதற்கு யாதொரு தடையும் கிடையாது. ஜனங்கள் வாய் மொழியாகவும் முறையிட்டுக் கொண்டிருப்பார்கள்; எழுத்து மூலமாகவும் குறைகளைத் தெரிவித்துக் கொண்டிருப்பார்கள்.

மற்றும் தினப் பத்திரிகைகளில் வந்திருக்கும் டி. டி. கே. பிரயாணச் செய்திகளிலிருந்து, பஞ்சப் பிரதேசங்களின் பயங்கரமான நிலைமைகளையெல்லாம் ஸ்ரீ டி. டி. கே. நேரில் பார்த்து அதிசயித்துப் பிரமித்துத் தவித்துத் திணறித் தத்தளித்துப் போனதாக அறிந்து கொள்கிறோம்.

புது டில்லியிலிருந்தபடி அறிக்கைகளைப் படித்துவிட்டுச் செய்யும் சிபார்சுகளுக்கும் நேரில் பார்த்தும் கேட்டும் தெரிந்து கொண்டுபோய்ச் செய்யும் சிபார்சுகளுக்கும் வித்தியாசம் நிரம்ப உண்டு. நேரில் பார்த்து அறிந்துகொண்டு போனால், அவ்விதம் தெரிந்துகொண்ட விவரங்களைத் தம் சகாக்களிடம் அழுத்தந் திருத்தமாக அடித்துக் கூறலாம். நிதி மந்திரி தேசமுக் அவர்களுடனும் மற்ற மந்திரிகளுடனும் தீவிரமாகச் சண்டை போட்டுச் சென்னைக்கு அதிக உதவி செய்ய வேண்டுமென்று வற்புறுத்தலாம்.

டி. டி. கே. யின் தமிழ் நாட்டுச் சுற்றுப் பிரயாணம் உசிதமானது, அவசியமானது என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை. அவருடைய சுற்றுப் பிரயாணத்தினால் எதிர்பார்க்கும் பலன் விரைவில் கிட்டுமென்று நம்புகிறோம்.

# கைத்தறியாளரின் ஓலக் குரல்

தினம் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் தம் சுற்றுப் பிரயாணத்தின் போது பஞ்சநிலை சம்பந்தமான பல அம்சங்களைக் கண்டு அறிந்திருப்பார்; கேட்டும் தெரிந்து கொண்டிருப்பார்.

எல்லாருக்கும் எளிதில் புலப்படக் கூடிய ஓர் அம்சம் அவருக்கும் புலப்பட்டே இருக்கவேண்டும்.

தற்சமயம் தமிழ் நாட்டில் எந்த இடத்திலும் "அரிசி இல்லை; தானியம் இல்லை" என்ற கூக்குரலைக் கேட்க முடியாது.

யார் செய்த புண்ணியத்தினாலோ ஒரு வருஷத்துக்கு முன்னால் தானியக் கண்ட்ரோல் எடுக்கப்பட்டது. அது முதற்கொண்டு "தானியம் இல்லை" என்ற முறையீடும் இல்லையாகி விட்டது.

சிற்சில இடங்களில் "தானியங்களின் விலை ஏறுகிறது!" என்ற புகார் இடையில் இருந்து வந்தது. அதுவும் இப்போது மறைந்து விட்டது.

சென்னை நகரில் அரிசி விலை குறைந்திருக்கிறது. தஞ்சை ஜில்லாவில் நெல் விலை குறைந்து வருகிறது. பஞ்சப் பிரதேசங்களை யொட்டியுள்ள கோயமுத்தூரிலும் திருநெல்வேலியிலும் நெல் விலை தடதடவென்று இறங்கி வருகிறது.

நெல் விலை குறைந்து வருவது பற்றிய செய்திகளைச் சில நாளாகத் தினந்தோறும் தினப் பத்திரிகைகளில் காண்கிறோம்.

ஆகவே தமிழ் நாட்டில் அரிசிப் பஞ்சமோ, வேறு உணவு தானியப் பஞ்சமோ அவ்வளவாக இல்லை என்று முடிவு கட்டலாம்.

அப்படியிருந்தும், பல இடங்களில் "பஞ்சம்! பட்டினி!" என்று கூக்குரல்கள் கிளம்புவது ஏன்!

தானியப் பஞ்சம் இல்லை; ஆனால் பணப்பஞ்சம் இருக்கிறது. தானியம் வேண்டிய அளவு கிடைத்தாலும், நியாயமான விலைக்கே கிடைத்தாலும், வாங்குவதற்கு மக்களிடம் பணம் இல்லை.

பணப் பஞ்சத்துக்குக் காரணம் என்ன! செய்வதற்குத் தொழில் இல்லாத பஞ்சந்தான்!

ராமநாதபுரம், திருநெல்வேலி, கோயமுத்தூர், தென்னார்க்காடு, வடாற்காடு முதலிய ஜில்லாக்களில் பல பிரதேசங்கள் வானம் பார்த்த பூமிகள். அதாவது மழை பெய்தால்தான் அங்கேயெல்லாம் விவசாயம் நடைபெற முடியும். கால மழை இல்லாதபடியால் விவசாயம் இல்லை. விவசாயிகளை நம்பியுள்ள கைத்தொழிலாளிகள் பலருக்கும் வேலை இல்லை. இதுவே பணப் பஞ்சத்துக்கு முக்கியமான காரணம்.

ஆனால் எவ்வளவு கஷ்டமான நிலைமையிலும் விவசாயத் தொழிலாளிகள் ஒருவாறு சமாளித்துக் கொள்வார்கள். ராமநாதபுரம் ஜில்லாவில் மழை இல்லையென்றால், அந்த ஜில்லாவிலிருந்து தஞ்சை ஜில்லாவுக்குப் போய் வேலை செய்து பிழைப்பார்கள். வயலில் வேலை இல்லை என்றால், சாலைபோடும் வேலை செய்வார்கள். ஏரி குளம் வெட்டுவார்கள். கேணிகள் எடுப்பார்கள். அணைக்கட்டுத் திட்டங்கள் வேலை நடக்கும் இடங்களுக்குப் போய் வேலை செய்வார்கள். வெய்யிலில் நின்று வேலை செய்து பழக்கப்பட்டவர்களாதலால், ஊரைவிட்டு ஊர் சென்று ஏதேனும் வேலை செய்து பிழைத்துக் கொள்வார்கள்.

ஆனால் இம்மாதிரி வேறு எந்த வேலையும் செய்ய முடியாதவர்களான ஒரு பெரிய தொழிலாளி வர்க்கம் தமிழ் நாட்டில் உண்டு. இவர்கள்தான் கைத்தறித் தொழிலாளிகள். இவர்களுக்கு உள்ளூரில் வேலை இல்லை என்றால் வெளி ஊரிலும் வேலை கிடைக்காது. குடிசை நிழலில் உட்கார்ந்தே கைத்தறி வேலை செய்து பழக்கப்பட்டவர்களாதலால் வெய்யிலில் நின்று இவர்களால் வேலை செய்ய முடியாது. மண் வெட்டி பிடித்து இவர்கள் சாலைப் புறத்தில் வேலை செய்தால் அரை மணி நேரத்தில் சுருண்டு விழுந்து விடுவார்கள்.

இவர்களுக்குக் கைத்தறித் தொழில் இல்லையென்றால், வேறு வேலையே கிடையாது. பிச்சை எடுக்கப் புறப்பட வேண்டியதுதான்.

மானமாகத் தொழில் செய்து ஜீவனம் நடத்திய வர்க்கமாதலால் இவர்களில் பலர் தெரிந்த இடத்தில் பிச்சை எடுக்கக் கூச்சப் பட்டுக் கொண்டு, வேறிடங்களுக்குப் போகிறார்கள்.

சென்னை முதலிய நகர்ப்புறங்களுக்குப் போகிறார்கள். அல்லது மைசூர் முதலிய அண்டை ராஜ்யங்களுக்குப் போகிறார்கள்.

இவர்களில் சிலர் கம்யூனிஸ்டுகளின் போதனைக்கு எளிதில் இணங்கி விடுவதிலும் ஆச்சரியம் அதிகமில்லை தானே!

# அவர் வேண்டியவரா?




பட்டினிப் பட்டாளம் என்று கால் நடைப் பிரயாணம் தொடங்கி "நேரு சர்க்கார் வீழ்க!" என்று கோஷித்துக் கொண்டு போகிறார்கள்.

இன்னும் சிலர் நகரப் புறங்களில் வீதி ஓரங்களில் உட்கார்ந்து கொள்கிறார்கள். தங்களைச் சுற்றிலும் "நாங்கள் கைத்தறியாளர்; வேலை இன்மையால் பட்டினி கிடக்கிறோம்" என்று கொட்டை எழுத்தில் எழுதிக் கொள்கிறார்கள்.

உண்மையில் தற்சமயம் பஞ்சம் பட்டினியினால் பெரிதும் பீடிக்கப்பட்டிருப்பவர்கள் கைத்தறித் தொழிலாளிகளே யாவார்கள்.

ஆகையினாலேயே இன்று பல இடங்களில் கைத் தறிக்காரர்களுக்கென்றே கஞ்சி நிலையங்கள் நடத்தப்பட்டு வருகின்றன.

வடாற்காடு ஜில்லாவில் கடுமையான பஞ்சம் குடி கொண்டிருந்தது. டிசம்பர் மாதத்தில் ஒரு நல்ல மழை பெய்தது. விவசாயத் தொழிலாளிகள் உடனே வயல்களில் வேலை செய்யப் போய்விட்டார்கள். கஞ்சி நிலையங்களுக்குப் போவதையும் நிறுத்தி விட்டார்கள். ராமநாதபுரம் — திருநெல்வேலி ஜில்லாக்களில் சென்ற மாதத்தில் நல்ல கோடை மழை பெய்தது. உடனே விவசாயிகள் வயல்களுக்குப் போய்விட்டார்கள்.

மழை பெய்தாலும் பட்டினித் துயரம் தீராமலிருப்பவர்கள் கைத்தறித் தொழிலாளிகள்தான். இவர்கள் தமிழ் நாடெங்கும் பரவியிருக்கிறார்கள். குறைந்த பட்சம் பத்து லட்சம் குடும்பத்தார் இவ்விதம் வேலையில்லாக் காரணத்தால் பட்டினியால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள்.

இவர்களுடைய தீனமான ஓலக் குரல்தான் இப்போது தமிழ்நாட்டில் பற்பல இடங்களிலும் கேட்டுக் கொண்டிருக்கிறது.

கோடை மழை பெய்தாலும், கால மழை பெய்தாலும், நல்ல வெள்ளாமை கண்டாலும், தானியங்களின் விலை இறங்கினாலும், பத்து லட்சம் கைத்தறித் தொழிலாளர் குடும்பங்களின் பஞ்சமும் பட்டினியும் தீராது.

அவர்களால் வேறு வேலை செய்து பிழைக்கவும் முடியாது. கைத்தறி வேலை கொடுத்தால்தான் அவர்களுடைய பஞ்சமும் பட்டினியும் தீரும்.

இந்த உண்மையைக் கனம் டி. டி. கே. தமது சுற்றுப் பிரயாணத்தின் போது நேரில் கண்டறிந்திருப்பார் என்று நம்புகிறோம். அப்படிக் கண்டறியவில்லையென்றால், அது கைத்தறியாளரின் துரதிர்ஷ்டம், தமிழ் நாட்டின் தலைவிதி, — என்றுதான் சொல்ல வேண்டும்.

* * *

கைத்தறியாளரின் கஷ்டத்தைத் தீர்ப்பதற்குக் கனம் டி. டி. கே. ஏற்கெனவே சில முயற்சிகள் எடுத்திருக்கிறார்.

ஆலை முதலாளிகளின் கோபத்தைப் பொருட்படுத்தாமல் ஆலைத் துணி உற்பத்தியின் பேரில் கஜத்துக்குக் காலணா விதம் வரி போட்டு வசூலித்துக் கைத்தறிக்கு உதவ முன் வந்திருக்கிறார்.

இதற்காக அவரை நாம் பாராட்டுகிறோம்.

ஆனால் இதனால் ஏற்படக்கூடிய பலன்கள் நீடித்த காலத்திலேயே கிட்டும் என்பதையும், இப்போது பட்டினி கிடப்பவர்களின் பசியைத் தீர்க்காது என்பதையும் அவரே ஒப்புக்கொண்டு சொல்லி யிருக்கிறார்.

உடனே கைத்தறியாளருக்கு உதவி செய்ய வேண்டுமானால், அதற்கு வழி ஒன்றே ஒன்றுதான். சில ரகத் துணிகளைக் கைத்தறிக்கு மட்டும் என்று ஒதுக்கி வைப்பதுதான்.

இதை ஸ்ரீ டி. டி. கே. யும் ஒருவாறு ஒப்புக்கொண்டு, வேஷ்டிகளும் வர்ணச் சேலைகளும் 100-க்கு 60 வீதந்தான் ஆலைகள் உற்பத்தி செய்யலாம் என்று உத்தரவிட்டிருக்கிறார்.

இது விஷயத்தில் ஆலை முதலாளிகள் அறிவாளியான டி. டி. கே. யையும் ஏமாற்றி விட்டிருக்கிறார்கள் என்பதைச் சொல்ல வேண்டியிருக்கிறது.

சென்ற வருஷத்தில் ஆலைகளில் வேஷ்டிகளும் சேலைகளும் அளவுக்கு அதிகமாக உற்பத்தி செய்து விட்டார்கள். அந்த அதிகப்படியான உற்பத்தி தான் புது உத்தரவின் பிரகாரம் குறைக்கப்பட்டிருக்கிறது. எனவே, கைத்தறித் தொழிலுக்கு அதனால் நன்மை இல்லை.

வேஷ்டிகளையும் சேலைகளையும் கைத்தறிக்கு முழுதும் ஒதுக்கினால், அந்த நிமிஷம் முதல் தமிழ் நாட்டில் பட்டினிக் கூக்குரல் நின்று விடும்.

மழை பெய்ததும் விவசாயிகள் வயல்களுக்கு வேலை செய்யப் போவது போல், கைத்தறியாளரும் தறியடிக்குப் போய்விடுவார்கள்.

"பஞ்ச நிலைமையினால் மக்களின் வாங்கும் சக்தி குறைந்துவிட்டதுதான் கைத்தறித் துணி விற்காததின் காரணம்" என்று டி. டி. கே. ஓரிடத்தில் சொல்லி யிருக்கிறார்.

இது உண்மைதான். மக்களின் துணி வாங்கும் சக்தி குறைந்து தானிருக்கிறது. அந்தக் குறைந்த சக்தியைக் கைத்தறித் துணி வாங்குவதற்கே உபயோகிப்பது நல்லதல்லவா! அதிலும் மில்கள் போட்டிக்கு வராம லிருப்பது நல்லதல்லவா!

மற்றும், தமிழ் நாட்டில் உற்பத்தியாகும் கைத்தறித் துணிகள் தமிழ் நாட்டிலேதான் விற்க வேண்டும் என்பதில்லை. சுபிட்சமான மத்திய மாகாணம் முதலிய பிரதேசங்களில் நம் கைத்தறி ஜவுளிகள் ஏராளமாக விற்பது வழக்கம். சில ரகங்களில் ஆலை உற்பத்தியைக் கட்டுப்படுத்தினால் வட நாட்டிலும் நம் கைத்தறித் துணிகள் விற்பனையாவது சாத்தியமாகும்.

இந்த வருஷத்தில் சென்னைக்கு ஆலைத் துணி வரவு வெகுவாகக் குறைந்திருப்பதைச் சுட்டிக் காட்டுவதிலும் அர்த்தமில்லை. சென்ற வருஷத்தில் வந்து குவிந்த துணிகள் இந்த வருஷம் விற்பனையாகி வருகின்றன. கையிருப்புத் தீர்ந்ததும் மறுபடியும் ஆலைத் துணிகள் வந்து குவியத் தொடங்கும்.

வேஷ்டி சேலையை ஒதுக்க வேண்டும் என்று சென்னைச் சட்டசபை தீர்மானம் செய்தது அதிகப்பிரசங்கித்தனம் என்று ஒருவேளை டி. டி. கே. கருதி அதை அமுலுக்குக் கொண்டு வரப் பிரியப்படாமலிருக்கக் கூடும். அப்படியானால், பார்லிமெண்டு அங்கத்தினர் ஒருவர் கூறியுள்ள மாற்று யோசனையையாவது அவர் கவனிக்கலாம். அதாவது, 36 அங்குலத்துக்கு அதிகமான அகலமுள்ள துணிகளை ஆலைகள் நெய்யக் கூடாது என்று கட்டுப்படுத்தலாம்.

அல்லது இதே முறையில் கனம் டி. டி. கே. வேறொன்று கண்டு பிடிக்கட்டும். கைத்தறியாளருக்கென்று ஏதேனும் சில ரகத் துணிகளை ஒதுக்கித் தரட்டும். அந்த ரகத் துணிகளை ஆலைகள் நெய்யக்கூடாதென்று கட்டுப்படுத்தட்டும்.

இப்படி ஏதாவது செய்யாத வரையில், பத்து லட்சம் கைத்தறியாளரின் குடும்பத்தினர், — வயோதிகர்கள், ஆண்கள், பெண்கள், குழந்தைகளின் பட்டினி ஓலக்குரல், — கனம் டி. டி. கே. அவர்களைச் சுற்றிக் கொண்டே இருக்கும்.

அந்த ஓலக் குரல் நல்ல சங்கீத ரஸிகரான டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் தமக்கு மிக்க பிரியமான கர்நாடக சங்கீதத்தைக்கூடக் கேட்டு அநுபவிக்க முடியாமல் செய்து விடும்!

# மக்களுக்கும் கடமை உண்டு

கைத்தறிக் காரர்களின் நிலைமைக்குப் பரிகாரம் அளிக்கும் விஷயத்தில், டி. டி. கே. அவர்களுக்கும் மற்ற சர்க்கார் மந்திரிகளுக்கும் மட்டுந்தான் பொறுப்பு என்று எண்ணிப் பொது மக்கள் சும்மா இருந்துவிடக் கூடாது.

"இந்த உலகத்தில் எங்கேனும் ஒரு மூலையில் கடல் புகுந்து ஒரு சிறு நிலப் பகுதியைக் கரைத்து விட்டால், அதனால் இந்தப் பெரிய உலகத்தின் உருவமே மாறுதல் அடைந்து விடுகிறது. அது போலவே இப் பரந்த உலகில் எங்கேனும் ஒரு மனிதனுக்கு நேரும் துன்பமோ அநீதியோ மனித குலம் முழுவதையுமே பாதிக்கிறது" என்பது மேனாட்டுப் பேராசிரியர் ஒருவரின் அமர வாக்கு.

அப்படியிருக்க, நமது சொந்தச் செந்தமிழ் நாட்டில் பத்து லட்சம் கைத்தறியாளர் குடும்பங்கள் பாதிக்கப்பட்டால், அது தமிழர் சமூகத்தையே பாதியாமல் எப்படி இருக்க முடியும்!

ஆகையால், கைத்தறியாளரின் துன்பத்தைத் தீர்க்க நம்மில் ஒவ்வொருவரும் இயன்ற உதவி செய்ய வேண்டும். கூடுமான வரையில், கிடைக்கிற வரையில், கைத்தறித் துணிகளையே வாங்க வேண்டும். முக்கியமாக, கைத்தறியில் நெய்த வேஷ்டியையும் சேலையையுமே ஒவ்வொரு தமிழ் மகனும் தமிழ் மகளும் வாங்கி உடுத்த வேண்டும்.

கைத்தறித் தொழிலைப் பற்றி எல்லா விவரங்களையும் நன்கு அறிந்துகொள்ளவும் அத் தொழிலை ஆதரிக்கவும் சென்னை நகர வாசிகளுக்கு ஒரு சிறந்த சந்தர்ப்பம் சீக்கிரத்தில் கிடைக்கும்.

ஜூன் மீ 15உ முதல் ஆகஸ்டு மீ 2உ வரையில் சென்னை ஐலண்டு மைதானத்தில் கைத்தறி—குடிசைத் தொழில் கண்காட்சி நடத்துவதற்கு ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

இந்தக் கண்காட்சிக்கு இந்திய சர்க்காரின் ஆதரவும் பல மாகாண சர்க்கார்களின் ஆதரவும் கிடைத்திருப்பதில் வியப்பில்லை.

கண்காட்சியை நடத்தும் கமிட்டியில் டாக்டர் அளகப்பச் செட்டியார், டாக்டர் வரதராஜுலு நாயுடு, ஸ்ரீ பெருமான்சாமி ரெட்டியார் முதலிய பிரமுகர்கள் இருக்கிறார்கள். சமூகத் தொண்டில் ஆர்வம் கொண்ட சகோதர சகோதரிகள் பலரும் இருக்கிறார்கள்.

மேற்படி கைத்தறி—குடிசைத் தொழில்கள் காட்சிக்குச் சென்னை நகர வாசிகள் பரிபூரண ஆதரவு நல்க வேண்டும்.

கண்காட்சியை நடத்தப் போகும் கமிட்டியாருக்கும் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறோம்.

பெரிய அளவில் இத்தகைய கண்காட்சி நடத்துவது என்பது சாமானியமான காரியம் அல்ல. திறமைசாலிகளும் நாணயஸ்தர்களுமான பலருடைய பூரண ஒத்துழைப்பு வேண்டும்.

பிரமுகர்கள் கண்காட்சிக் கமிட்டிக்குத் தங்கள் பெயரைக் கொடுத்ததுடன் திருப்தியடைந்து இருந்துவிடக் கூடாது.

முன் ஜாக்கிரதையுடன் ஒவ்வொரு காரியத்திலும் பூரண கவனம் செலுத்திப் பரிசீலனை செய்து திறமையாக நடத்தி வைக்க வேண்டும். அப்போதுதான் கண் காட்சியைப் பூரண

வெற்றியுடன் நடத்தி நல்ல பெயர் வாங்கமுடியும். கண் காட்சியை நடத்தும் நிர்வாகிகளின் நல்ல பெயருடன் கைத்தறித் தொழிலின் நல்ல பெயரும் காப்பாற்றப்பட வேண்டும்.

கண்காட்சி நிர்வாகிகள் விழிப்புடனிருந்து, காட்சியை வெற்றியுடன் நடத்தி, கைத்தறித் தொழிலுக்கு அதனால் உண்மையில் நன்மை உண்டாகும்படி செய்வார்கள் என்று நம்புகிறோம்.

# இவர் அல்லவோ மனிதர்!

கோயமுத்தூர் ஜில்லா கலெக்டர் வீதியில் மோட்டாரில் போய்க் கொண்டிருந்தபோது வீதி ஓரத்தில் ஒரு மனிதன் மயக்கம் போட்டு விழுந்து கிடப்பதைப் பார்த்தாராம். அவனைத் தூக்கிக் காரில் போட்டுக் கொண்டு போய் ஆஸ்பத்திரியில் சேர்த்துச் சிகிச்சை பண்ணுவித்து அவன் உயிரைக் காப்பாற்றினாராம்.

இந்தச் செய்தியை ஒரு பிரபல தினசரிப் பத்திரிகை "இவர் அல்லவோ கலெக்டர்!" என்ற தலைப்புடன் வெளியிட்டிருக்கிறது.

"இவர் அல்லவோ கலெக்டர்!" என்ற தலைப்பைக் காட்டிலும் "இவர் அல்லவோ மனிதர்!" என்ற தலைப்புக் கொடுத்திருந்தால் இன்னும் அதிக பொருத்தமாயிருக்கும்.

கோயமுத்தூர் ஜில்லா கலெக்டர் செய்த காரியம் மனிதராய்ப் பிறந்து மனிதராயுள்ள ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய காரியமேயாகும்.

அப்படியின்றி, மனித வடிவில் பிறந்தும் அரக்கர்கள் இயல்பு படைத்தவர்கள் சிலர் இருக்கிறார்கள். இந்த காலிலேகூட மனிதரைக் கொன்று தின்னும் வழக்கமுள்ள காட்டுமிராண்டிகளான 'கானிபல்' (Cannibal) என்னும் இனத்தினர் ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் இருப்பதாகக் கதைகளில் படிக்கிறோமல்லவா!

அத்தகைய இயல்பு படைத்தவர்கள் வீதி ஓரத்தில் யாரேனும் மயங்கிக் கிடந்தால் உடனே ஓடிப்போய்ப் போட்டோ கருவியை எடுத்து வருவார்கள். "எப்போது உயிர் போகப் போகிறது!" என்று காத்துக் கொண்டிருப்பார்கள். காத்திருந்து அலுத்துப் போனால் இவர்களே கூட அவசரப்படுத்தி அவனை மறு உலகத்துக்கு அனுப்பிவிட்டுப் போட்டோ எடுத்துப் பத்திரிகைகளுக்கு அனுப்புவார்கள். அவர்களைப் போலவே அரக்கரியல்பு படைத்த, பேய் கழுகு இனங்களைச் சேர்ந்த பத்திரிகையாளர்கள், மேற்படி படங்களைப் "பட்டினிச் சாவு" என்ற தலைப்புடன் போட்டு மகிழ்ச்சியுறுவார்கள்!

ஆனால் தமிழ் மக்களில் மிக மிகப் பெரும்பாலோர் இத்தகைய அரக்கர் இயல்பு படைத்த பேய்க்குணம் உள்ளவர்கள் அல்லவே!

ஆதலின் வீதி ஓரத்தில் மயங்கிக் கிடக்கும் மனிதனைக் கண்டால், அவனுக்கு என்ன என்று பார்த்து, கூடுமானவரையில் அவனுடைய உயிரைப் பாதுகாப்பதற்கே பிரயத்தனம் செய்யக் கூடியவர்கள்தானே!

ஆகையினாலேயே, கோயமுத்தூர் ஜில்லா கலெக்டர் செய்த காரியத்தை "மனிதன் செய்யக் கூடிய காரியம்", "மனிதன் செய்ய வேண்டிய காரியம்" என்றும் நாம் சொல்லுகிறோம். மேற்படி கலெக்டர் மனித தர்மத்தைக் கடைப்பிடித்து நடந்ததற்காக அவரைப் பாராட்டுகிறோம்.

# விடை ஏறும் சிவபெருமான்

விடை விடாது உகந்த
விண்ணவர் கோவே!

[விடை : காளை.] — மாணிக்கவாசகர்.

நமது முன்னோர்கள் நல்ல தேக பலம் கொண்ட இளைஞனைக் 'காளை' என்பார்கள். காளையின் அழகை, அதன் கம்பீர நடையை, அதன் திமிலை அவ்வளவாக அநுபவித்து ரஸித்தார்கள். நமது பாரத குலப் பண்புக்கு ஏற்றபடி மக்களுக்குப் பிடித்ததெல்லாம் ஆண்டவனுக்கும் உகந்தது என்ற எண்ணத்துடன், எங்கும் நிறைந்த ஈசனுக்குக் காளையை வாகனமாக அளித்தார்கள்.

சிவபெருமானுக்கு ஆலயங்கள் எடுப்பித்தால், முதலில் நந்தி பகவானை பிரதிஷ்டை செய்தார்கள். பிறகு, சிவபெருமானை வணங்க ஆலயங்களுக்குச் சென்றால், முதலில் நந்தி பகவானிடம் அனுமதி பெற்றுக் கொண்டுதான் உள்ளே நுழைய வேண்டும் என்று நியமித்தார்கள். அது மட்டுமா! சிவபெருமான் யாருக்காகிலும் தரிசனம் அளிக்க வேண்டுமென்றால், நந்தி தேவரை அனுமதி கேட்டுக் கொள்ள வேண்டும் என்றும் ஆகிவிட்டது! பரம பக்தரான நந்தனார், ஆண்டவனைத் தரிசிக்கத் துடித்தபோது, நந்தி தேவர் சன்னிதானத்தை மறைத்துக் கொண்டு சண்டித்தனம் செய்தார். கடைசியில் சிவபெருமானே,

சற்றே விலகியிரும்—பிள்ளாய்
சன்னிதானம் மறைக்குதாம்!

என்று நயமாக நந்தி தேவரிடம் கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டியதாகப் போய் விட்டது!

கலையிலும், தெய்வ பக்தியிலும் மிக மிக உன்னத நிலையை அடைந்தவர்களே, மேற் கண்ட விதமான கற்பனைகளைச் செய்து அவற்றைக் குறிக்கும் அற்புத சிற்பங்களையும் சிருஷ்டிக்க முடியும்.

தஞ்சாவூர் கலைக் காட்சியில் வைக்கப்பட்டிருந்த அருமையான சிற்பங்களுக்குள்ளே சமீப காலத்தில் திருவெண்காட்டுப் பகுதியில் மண்ணில் புதைந்து கிடந்து அகப்பட்ட செப்பு விக்கிரகத் தொகுதி வெகு அற்புத அழகு வாய்ந்தவை. மணக் கோலத்துடன் திகழும் பார்வதி பரமேசுவரர், காலபைரவர், பிக்ஷாடனர் ஆகிய மூர்த்திகளுடனே ரிஷப தேவர் என்னும் மூர்த்தி ஒன்றும் அவற்றில் இருக்கிறது. தலையில் முண்டாக கட்டிய திருக்கோலத்துடன், தமது வாகனமாகிய ரிஷபத்தின் மீதிருந்து இறங்கி நின்று, அந்த ரிஷபத்தின்மீது ஒரு கையை வைத்துக்கொண்டு ஒய்யாரமாய்ச் சாய்ந்து நிற்கும் இறைவனுடைய தோற்றப் பொலிவை வர்ணிக்கவே முடியாது. ஆகையினால் நமது சித்திரக்காரர் மணியத்தைக் கொண்டு அப் பெருமானின் தோற்றத்தைச் சித்திரத்தில் தீட்டச் செய்து அட்டையில் வெளியிட்டிருக்கிறோம். கலைக் காட்சியில் வைத்திருக்கும் ரிஷப தேவருக்குப் பின்னால் ரிஷபம் இல்லை. சித்திரக்காரர் மணியம் அந்தக் குறையைத் தமது கற்பனைத் திறனைக் கொண்டு பூர்த்தி செய்திருக்கிறார்.

விடை ஏறும் சிவபெருமானின் எத்தனை எத்தனையோ தெய்வீகத் திரு வடிவங்களில், இந்த வடிவம் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத திருக்கோலமாக அல்லவா விளங்குகிறது!

# சிற்பக் கலைக்கு உயிர்ப் பிச்சை தாருங்கள்!

தமிழ் நாட்டில் விசுவ கர்ம சமூகத்தாருக்குத் தனிப்பெரும் தலைவராக விளங்கும் திரு டி. எம். தெய்வ சிகாமணி ஆச்சாரியார் எம். எல். சி. அவர்கள் எழுதியுள்ள கடிதத்தை மற்ெருரு பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். அக்கடிதம் ஒரு மூலையில் சிறிய எழுத்தில் வெளியாகியிருந்த போதிலும் அதில் அடங்கிய விஷயம் மிக முக்கியமானதாகும்.

தமிழ்நாட்டின் தெய்வீகக் கலையான சிற்பக் கலை, உலகம் வியக்கும்படியான அற்புதக் கலை, தற்போது கேட்பாரற்றுப் போய்விட்டதே என்று ஸ்ரீ ஆச்சாரியார் வருந்துகிறார். அடுத்த தலைமுறையில் சிற்பக் கலை அறிந்தவர்கள் தமிழ் நாட்டில் யாருமில்லாமல் போய்விடுவார்களே என்ற கவலையை வெளியிட்டிருக்கிறார்.

சிற்பக் கலைக்கு உயிர்ப் பிச்சையளிக்க முன் வரும்படி இந்து அறநிலையப் பாதுகாப்பு இலாகாவைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

திரு ஆச்சாரியாரின் கோரிக்கையை நாம் மனப் பூர்வமாக ஆதரிக்கிறோம்.

நம் முன்னோர்கள் வளர்த்த மகத்தான சிற்பக் கலை நம் காலத்தில் அழிந்து போகாமல் பாதுகாப்பதைக் காட்டிலும் அறநிலையப் பாதுகாப்பு இலாகா செய்யக்கூடிய உத்தம கைங்கரியம் வேறு என்ன இருக்க முடியும்! சிற்பக் கலையைப் பேணி வளர்ப்பதற்காக ஒரு பயிற்சிக் கூடத்தை அமைத்து நடத்துவதைக் காட்டிலும், தேவாலயங்களிலும் மடாலயங்களிலும் மிச்சமாகும் பணத்தை வேறு சிறந்த முறையில் செலவிடத்தான் முடியுமா!

அறநிலையப் பாதுகாப்பு இலாகா மட்டுமேயன்று: 'சர்வ கலாசாலை' யென்றும், 'பல்கலைக் கழக'மென்றும் முழு நீளப் பெயர்களைச் சூட்டிக் கொண்டிருக்கும் யூனிவர்ஸிட்டிகள் அந்தப் பெயருக்குத் தகுதியாவதற்கு ஏதேனும் காரியம் செய்வதாயிருந்தால், சிற்பக் கலையை வளர்க்கும் துறையில் கவனம் செலுத்த வேண்டும்.

சமீப காலத்தில் நமது புராதன சிற்பக் கலை அழிந்துபடாமல் அதற்கு உயிரூட்டி வளர்த்து வந்திருப்பவர்கள் செட்டிமார் நாட்டு அன்பர்கள்.

செட்டிமார் நாட்டில் தற்சமயம் நடுநாயகமான கல்வி ஸ்தாபனமாக விளங்கும் காரைக்குடி அளகப்பா கலாசாலையில் சிற்பக்கலைப் பயிற்சிக்கென்று ஒரு தனிப்பிரிவு ஏன் ஏற்படுத்தக்கூடாது!

# ஸ்ரீ சஞ்சீவிப் பிள்ளை விடை பெறுகிறார்

இரண்டு வருஷங்களுக்கு முன்பு வரையில் சென்னை நகரில் திருட்டுக்கள் அடிக்கடி நடந்து கொண்டிருந்தன. சென்னையைச் சுற்றியுள்ள சாலைகளில் வழிப்பறிகள், பள்ளை நிறுத்திக் கொள்ளை யடித்தல் முதலிய தீச்செயல்கள் நடந்து கொண்டிருந்தன. சென்னை நகர மக்கள் ஓரளவு பீதிக்கு உள்ளாகி யிருந்தார்கள் என்று சொல்வதும் மிகையாகாது.

இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீ T. G. சஞ்சீவிப் பிள்ளை புது டில்லியிலிருந்து வந்து போலீஸ் இலாகாத் தலைமைப் பொறுப்பை ஒப்புக்கொண்டதிலிருந்து மேற்படி பீதி குறையத் தொடங்கி இப்போது அடியோடு மறைந்து விட்டது. சாலைகளில் வழிப்பறிகள் நின்று விட்டன. திருட்டுக்களும் பெரிதும் குறைந்து விட்டன. இந்த மாறுதலுக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் சஞ்சீவிப் பிள்ளையின் திறமையான நிர்வாகம் பெரிதும் காரணம் என்று சொல்லுதல் மிகையாகாது.

சில மாதங்களுக்கு முன்பு சென்னையில் நேர்ந்த பெரிய தொரு நெருக்கடியை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள். போலீஸ் சேவகர்களின் வேலை நிறுத்தத்தையே குறிப்பிடுகிறோம். நாட்டில் வேறு எந்தத் தொழிலாளி வர்க்கத்தினரும் உத்தியோக வர்க்கத்தினரும் வேலை நிறுத்தம் செய்தாலும் போலீஸ்காரர்கள் மட்டும் வேலை நிறுத்தம் பற்றிக் கனவிலும் கருதக் கூடாது.

போலீஸ் கான்ஸ்டேபிள் ஒருவர் முப்பது ரூபாய் சம்பளம் வாங்குகிறவரா யிருந்தபோதிலும், அவர் மூவாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தரின் வண்டியை நிறுத்தலாம். மாதம் முப்பதினாயிரம் சம்பாதிக்கும் வர்த்தக மன்னரைத் தமது கையை அசைத்து நிறுத்தி, பதில் சொல்லி விட்டுப் போகும்படி செய்யலாம்.

இப்படிப்பட்ட அதிகாரம் உள்ள போலீஸ் வேலையைக் கேவலம் சம்பளம் ஒன்றைக் கொண்டு மட்டும் யாரும் மதிப்பிடுவது கிடையாது.

அவ்வளவு அதிகாரமும் மதிப்பும் வாய்ந்த போலீஸ்காரர்கள் வேலை நிறுத்தம் செய்தால், அவர்களுடைய அதிகாரத்துக்கும் மதிப்புக்கும் பங்கம் நேர்ந்து, சமூகமே கலகலத்துப் போய் விடும். ஆகையால், போலீஸ்காரர்கள் எந்தக் காரணத்துக்காகவும் வேலை நிறுத்தம் செய்யக் கூடாது. எப்படிப்பட்ட குறையாயிருந்தாலும் மேலதிகாரிகளுக்கு விண்ணப்பித்து விட்டு, நியாயம் பிறக்கும் என்ற நம்பிக்கையுடன் காத்திருக்க வேண்டும்.

இதை உணர்ந்து கொள்ளாமல், துர்மதியாளர்களின் துர்ப் போதனையைக் கேட்டுச் சென்னைப் போலீஸ் சேவகர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். அதை எவ்வளவு திறமையாக ராஜாஜி சர்க்கார் சமாளித்தார்கள் என்பது தேசமெல்லாம் பிரசித்தியடைந்த செய்தி.

அந்த நிலைமையைச் சமாளித்ததில் இன்ஸ்பெக்டர் ஜெனரல் சஞ்சீவிப் பிள்ளையின் சேவையை மிகைப் படுத்திச் சொல்ல முடியாது. பேச்சில் இனிமையும் சுபாவத்தில் சாந்தமும் காரியத்தில் கண்டிப்பும் கைக்கொண்டிருந்த சஞ்சீவிப் பிள்ளை போலீஸ் வேலை நிறுத்தம் வேறு விபரீத விளைவுகளுக்குப் போகாதபடி தடுப்பதில் பெரிதும் வெற்றி யடைந்தார்.

ஸ்ரீ சஞ்சீவிப் பிள்ளை அவர்கள் தமது உத்தியோகத்தை விட்டு விலகிக் கொள்வதற்குப் பூர்வாங்கமாக விடுமுறை எடுத்துக் கொள்கிறார் என்று அறிகிறோம்.

அவருடைய சேவையை மனப் பூர்வமாகப் பாராட்டுவதுடன், சென்னை வாசிகள் அவருடைய காலத்தில் போலீஸ் நிர்வாகத்தில் ஏற்பட்ட முன்னேற்றத்தை நெடுங்காலம் நினைவு கூர்ந்திருப்பார்கள் என்றும் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

அத்தியாயம் 14

## வானதியின் சபதம்

திடும் பிரவேசமாக உள்ளே புகுந்த ஆழ்வார்க்கடியானைப் பார்த்துக் குந்தவை "திருமலை! நீ எப்படி இங்கே வந்து நுழைந்தாய்? எதற்காக வந்தாய்?" என்று கேட்டாள்.

"அம்மணி! எல்லாம் இந்த ஜோசியருடைய மோசடி வார்த்தையினால்தான்! இன்று காலையில் இவரிடம் 'நான் போகும் காரியம் வெற்றிகரமாக முடியுமா?' என்று கேட்டேன். 'முடியும்' என்று சொன்னார். ஆனால் இந்த இடத்தைவிட்டுச் சிறிது தூரம் போகக்கூட முடியவில்லை. காரியம் வெற்றி பெறுவது எப்படி? ஆகையினால்தான் சற்று முன் பழுவேட்டரையர் கூறியதை நான் ஆமோதித்தேன். இவருடைய ஜோதிட சாஸ்திரமே ஏமாற்றமா அல்லது இவர்தான் வேண்டுமென்று ஏமாற்றினாரா என்று கேட்டுத் தெரிந்து கொண்டு போக வந்தேன். பழுவேட்டரையரின் குரலை இங்கே கேட்டதும் இவர் பேரிலேயே எனக்குச் சந்தேகம் ஊர்ஜிதப்பட்டது. ஆனால் தங்களை இங்கு நான் எதிர் பார்க்கவேயில்லை" என்றான்.

"என்னை நீ எதிர்பார்த்திருக்க முடியாதுதான். நீ எதற்காக வந்தாய்? என்ன காரியம் வெற்றி அடையுமா என்று ஜோதிடரைக் கேட்டாய்? இரகசியம் ஒன்றுமில்லையே?" என்றாள் இளவரசி.

"தங்களுக்குத் தெரிய முடியாத இரகசியம் என்ன இருக்க முடியும்? சக்கரவர்த்தியின் கட்டளைப்படி நேற்றிரவே முதன் மந்திரி என்னை நாகைப்பட்டினத்துக்குப் போகும்படி ஏவினார். இளவரசரைக் கையோடு அழைத்து வருவதற்காகத்தான். வழியில் செம்பியன்மாதேவியைப் பார்த்து அவரிடமும் ஓர் ஓலையைக் கொடுத்துப் போகும்படி ஏவினார்......தாங்கள் எப்போது தஞ்சையிலிருந்து கிளம்பினீர்கள், தேவி!"

"பொழுது விடிந்து சிறிது நேரத்துக்குப் பிறகு கிளம்பினோம். இதை ஏன் கேட்கிறாய், திருமலை?"

"கொடும்பாளூர்ப் படைகள் தஞ்சைக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டு விட்டனவா என்று தெரிந்து கொள்வதற்காகக் கேட்டேன்......"

"என்ன? என்ன?"

"ஆம், தேவி! தங்களுக்குத் தெரியாதா, என்ன? நேற்றிரவு சக்கரவர்த்தியைப் பார்த்து விட்டு முதன் மந்திரி அவருடைய மாளிகைக்குத் திரும்பி வந்தபோது இரண்டு செய்திகள் காத்திருந்தன. ஒன்று தான் நாகைப்பட்டினத்திலிருந்து இளவரசர் புறப்பட்டு வருகிறார், பெரும் ஜனக் கூட்டம் புடைசூழ வந்து கொண்டிருக்கிறார் என்பது......"

"அதை நானும் இன்று காலை அறிந்தேன். என் தம்பியை இங்கேயே தடுத்து நிறுத்திக் கொள்வதற்காகவே புறப்பட்டு வந்தேன். இன்னொரு செய்தி என்றாயே, அது என்ன?"

ஆழ்வார்க்கடியான் வானதியைச் சுட்டிக்காட்டி "அம்மா! இந்தக் கொடும்பா

ளூர் இளவரசியை எதற்காக அழைத்து வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"அவள் எப்போதும் வருவது போல் இப்போதும் வந்தாள்; அழைத்து வந்தேன். எதற்காகக் கேட்டாய்?"

"இரண்டாவது செய்தியை இந்த இளவரசி இருக்கும்போது சொல்லத் தயக்கமாயிருக்கிறது."

"சொல், திருமலை! இவள் எனக்கு எவ்வளவு அந்தரங்கமானவள் என்பது உனக்குத் தெரியாதா? எனக்குத் தெரியக் கூடியது எதுவும் இவளுக்கும் தெரியலாம்......"

"ஆனாலும் இந்த இளவரசிக்குச் சம்பந்தப்பட்ட காரியம் அது. தென் திசைச் சேனாதிபதி பூதி விக்கிரம கேசரி ஒரு மாபெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு தஞ்சைக் கோட்டையை நெருங்கி வந்து கொண்டிருக்கிறார் என்று நேற்றிரவு முதன் மந்திரிக்குச் செய்தி வந்தது. சேனாதிபதியிடமிருந்து ஓர் ஓலையும் முதன் மந்திரிக்கு வந்தது. சக்கரவர்த்தியைத் தஞ்சைக் கோட்டையிலும் சின்ன இளவரசரை ஏதோ ஓர் இரகசிய இடத்திலும் பழுவேட்டரையர்கள் சிறைப்படுத்தி வைத்திருப்பதாக அதில் குற்றம் சாட்டியிருந்தது. பழுவேட்டரையர்கள் தனாதிகாரி பொறுப்பையும் தஞ்சைக் காவல் பொறுப்பையும் உடனே விட்டு நீங்கவேண்டும் என்றும், இளவரசரைக் கொண்டு வந்து ஒப்புவிக்க வேண்டும் என்றும் எழுதியிருந்தது. இல்லாவிட்டால் இன்று மாலைக்குள் தஞ்சைக் கோட்டையைச் சுற்றி முற்றுகை ஆரம்பமாகி விடும் என்று எழுதியிருந்தது. அம்மணி! தஞ்சைக்குத் தெற்குத் திசையிலும் மேற்குத் திசையிலும் ஏற்கனவே கொடும்பாளூர் படைகள் நெருங்கி வந்து விட்டனவே? தங்களுக்குத் தெரியாதா?"

"தெரியாது. முதன் மந்திரி இதைப் பற்றி ஒரு வார்த்தையும் என்னிடம் சொல்லவில்லையே?"

"சொல்லியிருந்தால் நீங்கள் ஒருவேளை தஞ்சைக் கோட்டையை விட்டுப் புறப்பட்டிருக்க மாட்டீர்கள். முக்கியமாக, கொடும்பாளூர் இளவரசியை உடனே வெளியேற்றிவிட முதன் மந்திரி விரும்பியிருக்கலாம்......"

"அது ஏன்? இவள் அங்கு இருந்தால் என்ன நேர்ந்து விடும்?"

"இந்த இளவரசியைச் சின்னப் பழுவேட்டரையர் ஒருவேளை சிறைப்படுத்தினாலும் படுத்தி விடுவார்......"

"அவ்வளவு துணிச்சல் அவருக்கு வந்து விடுமா? மெய்யாகவே இதை நீ சொல்கிறாயா?"

"ஆம், தேவி! மேலும் தென்திசைச் சேனாதிபதி சொல்லி அனுப்பிய செய்தியைக் கேட்டால் தாங்களே அறிந்து கொள்வீர்கள்......"

"என்ன? மேலும் என்ன?"

"இளவரசர் அருள்மொழி வர்மருக்கும் கொடும்பாளூர் இளவரசி வானதி தேவிக்கும் உடனே திருமணம் நடத்தியாக வேண்டும், ஆதித்த கரிகாலர் தமக்கு இராஜ்யம் வேண்டாம் என்று சொல்வதால் அருள்மொழிச் சோழரையே அடுத்த பட்டத்துக்கு உரியவராக யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார். இதற்கெல்லாம் சம்மதிக்கா விட்டால் தஞ்சைக் கோட்டையை மூன்றே நாளைக்குள் தரைமட்டமாக்கி விடுவேன் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார். சோழநாட்டு மக்கள் தம்மை ஆதரிப்பதாகவும் தெரிவித்திருக்கிறார்......"

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வானதி, "அக்கா! என் பெரியப்பாவுக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டதா, என்ன?" என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

"ஏன், வானதி, அப்படிச் சொல்கிறாய்? வெகு காலமாகப் பலர் மனத்தில் இருந்த விஷயத்தையே உன் பெரியப்பா இப்போது பகிரங்கமாக அறிவித்திருக்கிறார். பழுவேட்டரையர்கள் 'மதுராந்தகனுக்குப் பட்டம் கட்ட வேண்டும்' என்று முயற்சி தொடங்கியிருப்பதினால் கொடும்பாளூர் மன்னரும் திருக்கோவலூர் மலையமானும் இவ்விதம் வெளிப்படையாகச் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள்........."

"ஆம், தாயே! திருக்கோவலூர் மலையமான்கூட இதற்குள் ஒரு பெரிய சைன்யத்துடன் கடம்பூர் கோட்டைக்குச் சமீபம் வந்திருப்பார். என்னிடம் அவர் பேசியதிலிருந்தே அவ்வாறுதான் ஊகித்தேன். முதன் மந்திரிக்கும் தகவல் கிடைத்திருக்கிறது......"

"ஆனால் இப்போது நான் அறிந்திருக்கும் செய்திகள் அவர்கள் இருவருக்கும் தெரியாது. அவர்கள் இரண்டு பேருடனும் நான் பேசி உள்நாட்டுச் சண்டை நேராமல் தடுத்தாகவேண்டும். எப்படிச் செய்யப் போகிறேனோ, தெரியவில்லை..."

"தாயே! நிலைமை இப்பொழுது மிகவும் முற்றிப்போய் விட்டது. இனிமேல் ஒரு பெரிய பாரத யுத்தம் நடந்தே தீரும் போலிருக்கிறது......"

"இதைப் பாரத யுத்தம் என்று கூறியது ரொம்ப சரி, திருமலை! இப்போது யுத்தம் மூண்டால் அது ஒரு சகோதரச் சண்டையாகத்தான் இருக்கும். உற்றார் உறவினருக்குள்ளே நிகழும் சர்வ நாச யுத்தமாக இருக்கும். வானதி! இதைக் கேள்! என் பாட்டனாரின் தகப்பனார் புகழ் பெற்ற பராந்தக சக்கரவர்த்தி பழுவேட்டரையர் குலத்தில் பெண் கொண்டார். அவருடைய மகள்,—என் சிறிய பாட்டி,—கொடும்பாளூரின் அரசரை மணந்து கொண்டார். என் பாட்டனார் அரிஞ்சயர் கொடும்பாளூர்ப் பெண்ணை மணந்து கொண்டார். என் தந்தையோ திருக்கோவலூர் மலையமான் மகளை மணந்திருக்கிறார். இப்படி இந்த மூன்று குலமன்னர்களும் எங்கள் குலத்துடன் நெருங்கிய உறவு பூண்டவர்கள். ஒன்றுக்குள் ஒன்றாகக் கலந்து போனவர்கள். ஆயினும் அவர்கள் இப்போது கச்சை கட்டிக் கொண்டு சண்டைக்கு ஆயத்தமாகி வருகிறார்கள்! இந்த விதியை என்னவென்று சொல்கிறது?— இவர்களுடைய சண்டையினால் சோழ ராச்சியமே அழிந்துவிடும் போலிருக்கிறது..."

"அக்கா! எனக்கு அதைப் பற்றியெல்லாம் கவலை இல்லை. எப்படியாவது சண்டை போட்டுக் கொண்டு சாகட்டும். ஆனால் இதில் என் பெயரை என் பெரிய தகப்பனார் எதற்காக இழுக்க வேண்டும்? உடனே திரும்பிப் போய் என் பெரியப்பாவைப் பார்த்துச் சண்டை பிடிக்க வேண்டும் என்று தோன்றுகிறது......"

"அதனால் என்ன பயன், கண்ணே! நீ சொல்வதை உன் பெரிய தகப்பனார் கேட்க மாட்டார். நீயும் நானும் சேர்ந்து மன்றாடினாலும் பயன்படாது. சிறு வயதுப் பெண்களாகிய நாம் சொல்வதை உன் பெரியப்பாவைப் போன்ற கிழவர்கள் கேட்க மாட்டார்கள். என் தம்பி அருள்மொழி வர்மன் மூலமாகத்தான் இந்தச் சண்டை நேராமல் தடுக்க முடியும். திருமலை! நீ போனவன் ஏன் திரும்பி வந்தாய்? அருள்மொழி இப்போது எங்கே இருக்கிறான்?"

"திருவாரூரிலிருந்து நேற்றிரவே புறப்பட எண்ணியதாகக் கேள்வி. ஆனால் வழியெல்லாம் ஒரே வெள்ளக் காடாக இருப்பதால் வர முடிய வில்லையாம். நானும் பழையாறைக்கு அப்பால் போகப் பார்த்து முடியாமல் திரும்பி வந்தேன். குடமுருட்டி உடைப்பெடுத்து ஒரே சமுத்திரமாகச் செய்திருக்கிறது..."

"எப்படியும் வெள்ளம் வடியும். அதற்குப் பிறகு அருள்மொழி இந்த வழியாக வந்து தானே ஆகவேண்டும்? அதுவரை காத்திருக்க வேண்டியதுதான். அதற்குள் தஞ்சையில் ஏதேனும் விபரீதம் நேர்ந்து விடப் போகிறதே என்று கவலையா யிருக்கிறது. திருமலை! நீ உடனே தஞ்சாவூர் திரும்பிப் போய்க் கொடும்பாளூர் மன்னரைக் கண்டு நான் சொல்லும் செய்தியைச் சொல்ல முடியுமா? அருள்மொழி வரும் வரையில் தஞ்சைக் கோட்டையை முற்றுகை யிடவேண்டாம் என்று தெரிவிப்பாயா?"

"அக்கா! நானும் இவருடன் தஞ்சைக்குப் போகட்டுமா?"

"நீ இந்த மனிதருடன் போய் என்ன செய்வாய், என் கண்ணே!"

"போய் என் பெரிய தகப்பனாருடன் சண்டை பிடிப்பேன்......"

"என்னவென்று சண்டை பிடிப்பாய்? உன் பேச்சை அவர் கேட்டுச் சண்டையை நிறுத்தி விடுவாரா?"

"சண்டையை நிறுத்தினால் நிறுத்தட்டும்; நிறுத்தா விட்டால் எப்படியாவது நாசமாகப் போகட்டும். என் பெயரை இதில் இழுக்க வேண்டாம் என்று வற்புறுத்துவேன்."

"உன் பெயரை இழுக்கிறார்களா? அது எதற்காக?"

"சற்று முன் இந்த வீர வைஷ்ணவர் சொன்னதை நீங்கள் கேட்க வில்லையா, அக்கா?" என்று வானதி கூறி வெட்கத்தினால் தலை குனிந்தாள்.

"உன்னைப் பற்றி யார் என்ன சொன்னார்கள்? திருமலை! நீ இந்தப் பெண்ணைப் பற்றி என்ன சொன்னாய்?"

"இவரைப் பொன்னியின் செல்வருக்கு மணம் செய்விக்க வேண்டும் என்று சேனாதிபதி வற்புறுத்துவதைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? அதைக் குறிப்பிடுகிறார் போலிருக்கிறது!"

"வானதி! அதில் என்ன உனக்கு ஆட்சேபம்? பொன்னியின் செல்வனை மணந்து கொள்வதற்கு உனக்குப் பிரியம் இல்லையா?"

"பிரியம் இருக்கிறதோ, இல்லையோ, அதைப் பற்றி இப்போது என்ன பேச்சு? கலியாணத்தையும் பட்டங் கட்டுவதையும் என் பெரிய தந்தை சேர்த்துப் பிரஸ்

தாபிப்பதைத் தான், நான் ஆட்சேபிக்கிறேன். என்னைச் சோழ சிம்மாசனத்தில் ஏற்றுவிப்பதற்காகவே என் பெரிய தந்தை இந்தச் சண்டையை ஆரம்பிக்கிறார் என்றல்லவா ஏற்படுகிறது?..."

இச்சமயத்தில் ஒரு பெண்ணின் குரல், "கொடும்பாளூர் இளவரசிக்குச் சிம்மாசனம் ஏறுவது என்றாலே ரொம்ப வெறுப்புப் போலிருக்கிறது!" என்று கூறியதைக் கேட்டு எல்லாரும் அக்குரல் வந்த இடத்தைப் பார்த்தார்கள். அங்கே ஓடக்காரப் பெண் பூங்குழலி நின்று கொண்டிருந்தாள்.

குந்தவை அவளை வியப்புடன் பார்த்து, "பெண்ணே! நீ எப்படி இங்கே வந்தாய்? இன்று காலை உன்னையும் ஈழத்து ராணியையும் காணாமல் நாங்கள் தேடி அலைந்தோமே? உன் அத்தை எங்கே?" என்று கேட்டாள்.

"தேவி! மன்னிக்க வேண்டும்! என் அத்தை என்னைப் பலவந்தமாகப் பழுவூர் அரண்மனையின் சுரங்க வழியாகப் பிடித்து இழுத்துக் கொண்டுவந்து கோட்டைக்கு வெளியே அனுப்பி விட்டாள். நான் தஞ்சை அரண்மனையில் ஒருநாள் இருப்பதுகூட என் அத்தைக்குப் பிடிக்கவில்லை! எனக்கும் அரண்மனை வாழ்வு பிடிக்கவில்லைதான்! கொடும்பாளூர் இளவரசிக்குச் சிம்மாசனமே வெறுத்துப் போயிருக்கும்போது, என்னைப் போன்றவர்களுக்கு அரண்மனையில் வசிக்க எப்படிப் பிடிக்கும்?" என்றாள் பூங்குழலி.

"பெண்ணே! எதையோ கேட்டால், எதையோ சொல்லுகிறாயே? உன் சித்தம் சரியான நிலையில் இல்லை போலிருக்கிறதே?" என்றாள் குந்தவை.

"அக்கா! அவள் சித்தம் சரியாகத்தான் இருக்கிறது. என்னைக் கேவலப் படுத்துவதற்காக வேண்டுமென்று இப்படிப் பேசுகிறாள். நான் சோழ நாட்டின் சிம்மாதனம் ஏறி மகாராணி ஆக வேண்டும் என்ற ஆசை கொண்டிருக்கிறேனாம்! அதற்காகத்தான் தங்கள் தம்பியை—பொன்னியின் செல்வரை—மணக்க விரும்புகிறேனாம்! இவளுடைய மனசு எனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிறது!" என்றாள் வானதி.

"பாம்பின் கால் பாம்பு அறியும் என்ற பழமொழி பொய்யாகப் போகுமா?" என்றாள் பூங்குழலி.

"பெண்களே! நிறுத்துங்கள்! எந்தச் சமயத்தில் என்ன பேசுவது என்றே உங்களுக்குத் தெரியவில்லை. பூங்குழலி! உன் அத்தை இப்போது எங்கே இருக்கிறாள்?" என்று குந்தவை கேட்டாள்.

"பழுவூர் மாளிகையைச் சேர்ந்த பொக்கிஷ நிலவறையில் இருக்கிறாள்..."

"எதற்காக?"

"அங்கே யாரோ ஒரு கொலைகாரன் கையில் வேலுடன் ஒளிந்து கொண்டிருக்கிறான். ஆகா! அவனை நாங்கள் இருவரும் இன்று அதிகாலையில் படுத்திவைத்த பாட்டை நினைத்தால்! எங்கள் இருவரையும் இரண்டு பெண் பேய்கள் என்று நினைத்துக் கொண்டு அவன் மிரண்டு போய் அங்குமிங்கும் ஓடியதை எண்ணினால்......!" என்று கூறிவிட்டுப் பூங்குழலி கலகலவென்று சிரித்தாள்.

இந்தப் பெண்ணுக்குச் சித்தப் பிரமைதான் என்று குந்தவை மனதில் எண்ணிக் கொண்டு, "அப்புறம் சொல்! அவன் யார்? எதற்காக அங்கே ஒளிந்திருக்கிறான்? உங்களுக்கு எப்படி அது தெரிந்தது?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. தேவி! என் அத்தைக்கு வாய் பேச முடியாவிட்டாலும் காது கேளாவிட்டாலும், நமக்கெல்லாம் தெரியாத விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் அதிசயமான சக்தி உண்டு. அரண்மனையில் உள்ள யாரோ ஒருவரைக் கொல்லுவதற்காக அவன் அங்கே காத்திருக்கிறான் என்று எப்படியோ அறிந்து கொண்டாள். தேவி! பத்துத் தலை இராவணேசுவரனுடைய கைகளை உடைப்பதற்கு என் அத்தை பிரயத்தனப் பட்டாளே? அது எதற்கு என்று தெரியுமா?"

"தெரியாது; உனக்குத் தெரிந்தால் உடனே சொல்லு!"

"என் அத்தை இராவணன் கரங்களைத் தகர்க்க முயன்றதைப் பார்த்த போது நீங்கள் எல்லாரும் அவளைப் பிச்சி—பைத்தியக்காரி என்று நினைத்தீர்கள். ஆனால் என் அத்தை பிச்சி அல்ல. அந்த இராவணன் கைகளுக்கு மத்தியிலேதான் பழுவேட்டரையரின் நிலவறைப் பொக்கிஷத்துக்குப் போகும் சுரங்கப் பாதை இருக்கிறது..."

"ஆகா! அப்படியா?" என்று குந்தவை அதிசயித்தாள்.

"ஈழத்து ஊமை ராணி சக்கரவர்த்தியின் அரண்மனைக்கு எப்படி வந்தாள் என்பதும் இப்போது தெரிகிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"இத்தனை நாளும் அரண்மனையிலிருந்த நமக்கு அப்படி ஒரு சுரங்க வழி இருப்பது தெரியாமற் போயிற்றே?




இருக்கட்டும்; நீ ஏன் உடனே அரண்மனைக்கு வந்து எங்களிடம் இதையெல்லாம் சொல்லவில்லை? உன் அத்தையைத் தனியாக விட்டு விட்டு ஏன் வந்து விட்டாய்?'' என்றாள் இளைய பிராட்டி.

"அத்தையின் பிடிவாதந்தான் காரணம். அங்கே ஒளிந்திருப்பவனைத் தான் பார்த்துக் கொள்வதாகச் சொல்லி என்னை வெளியே அனுப்பி விட்டாள்!"

"ஏன்? ஏன்? அதைவிட முக்கியமான காரியம் எதற்காகவாவது உன்னை அனுப்பினாளா?"

"ஆம், அம்மணி!"

"அது என்ன, பெண்ணே!"

"பொன்னியின் செல்வருக்கும் ஏதோ ஆபத்து வரப்போகிறது என்று என்னுடைய அத்தை தன் அதிசய சக்தியினால்

தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அவர் இருக்குமிடத்துக்குப் போகும்படி என்னை அனுப்பினான்!"

"ஆகா! பொன்னியின் செல்வன் இருக்குமிடத்தைத் தேடித்தான் நீ போய்க் கொண்டிருந்தாயா? அப்படியானால் ஏன் நின்று விட்டாய்?"

"இல்லை, தேவி! உண்மையைச் சொல்லி விடுகிறேன். அரண்மனைக் காரியங்களில் இனிமேல் தலையிடுவதில்லையென்று தீர்மானித்து விட்டேன். கோடிக் கரைக்குப் போய்க் கொண்டிருந்தேன். வழியில் இந்த வீர வைஷ்ணவன் என்னைச் சந்தித்து இங்கே அழைத்துக் கொண்டு வந்தான்!...... நீங்கள் இருப்பது தெரிந்திருந்தால் வந்திருக்க மாட்டேன்!"

"பெண்ணே! அரண்மனை உனக்கு ஏன் அவ்வளவு வெறுத்துப் போய் விட்டது? எங்களை ஏன் பிடிக்காமல் போய் விட்டது? உன்னை யார் என்ன செய்து விட்டார்கள்?" என்று இளைய பிராட்டி குந்தவை கேட்டாள்.

"என்னை யாரும் எதுவும் செய்து விடவில்லை. யார் பேரிலும் எனக்குக் குறையும் இல்லை. சில பேருக்குச் சிம்மாதனம் பிடிக்காமலிருப்பது போல் எனக்கும் அரண்மனை வாழ்வு பிடிக்கவில்லை! அவ்வளவுதான்!" என்று பூங்குழலி கூறிவிட்டு, வானதியைக் கடைக் கண்ணால் பார்த்து நகைத்தாள்.

அதைக் கவனித்த வானதி ஆவேசம் வந்தவள் போல் ஓர் அடி முன்னால் வந்து கூறினாள்:— "அக்கா! இவள் மறுபடியும் என்னைத்தான் ஏசிக் காட்டுகிறாள். நான் சொல்கிறேன், கேளுங்கள். தங்கள் திருப்பாதங்களின் ஆணையாகச் சொல்கிறேன். ஆகாசவாணி பூமாதேவி சாட்சியாகச் சபதம் செய்கிறேன். பொன்னியின் செல்வர் இந்தக் கண்டத்திலும் தப்பிப் பிழைத்தாரானால், அவர் மனமுவந்து என்னைக் கரம் பிடித்து மணந்து கொண்டாரானால், அத்தகைய பெரும் பேறு எனக்குக் கிடைத்ததானால், தஞ்சை அரண்மனைச் சிம்மாதனத்தில் நான் ஒரு நாளும் உட்காரவே மாட்டேன். இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!"

## அத்தியாயம் 15

# கூரை மிதந்தது!

அச் சந்தர்ப்பத்தில் கொடும்பாளூர் இளவரசி இம்மாதிரி ஒரு சபதத்தைச் செய்வாள் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அதைக் கேட்டு அனைவரும் திகைத்துப் போனார்கள்.

இளைய பிராட்டி கோபமும் பரிதாபமும் கலந்து பொங்கிய குரலில், "பெண்ணே! இது என்ன சபதம்? எதற்காகச் செய்தாய்? இப்படியும் ஒரு மூடத்தனம் உண்டா? ஏதோ வெறி பிடித்தவள் போல அல்லவா பிதற்றி விட்டாய்?" என்றாள்.

தோன்றியது. முதலில் கலகலவென்று சிரித்தாள். பிறகு, முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு விம்மி விம்மி அழுதாள். பின்னர் திடீரென்று அழுகையை நிறுத்தி விட்டு மெல்லிய குரலில்,

"அலைகடலும் ஓய்ந்திருக்க
அகக்கடல்தான் பொங்குவதேன்?"

என்று பாடத் தொடங்கினாள்.

குந்தவை ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "இந்த இரண்டு பெண்களும்

சம்பாதித்துக் கொடுத்தால் தள்ளிக் கொண்டு போய்த் திருவாரூர் சேர்ப்ப தாகச் சொன்னாள். அதற்காக ஜோதிட ரிடம் திரும்பி வந்தேன். கோவிலுக்குப் பக்கத்தில் தங்கள் ரதப் படகைப் பார்த்ததும் சந்தோஷமாயிற்று. தங்க ளிடம் கேட்டுப் படகு வாங்கிச் செல்ல லாம் என்று நினைத்தேன். ஆனால் பழுவேட்டரையர் ரதத்தோடு படகை யும் கொண்டு போய் விட்டார்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

"இப்போது என்ன யோசனை செய் கிறாய்? பழுவேட்டரையர் கூறியதை யெல்லாம் நீயும் கேட்டுக் கொண்டிருந் தாய் அல்லவா?'' என்றாள் குந்தவை.

"ஆம், தாயே! அதைக் கேட்ட பிறகு இங்கே வீண் போகும் ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகமாகத் தோன்று கிறது. இந்தப் பெண் சொல்வதிலிருந் தும் சக்கரவர்த்தியை உண்மையிலேயே பயங்கரமான அபாயம் நெருங்கி யிருப்ப தாகத் தெரிகிறது. அது முதன் மந்திரிக் குக்கூடத் தெரியாது. ஆகையால் தாங்கள் கொடும்பாளூர் இளவரசியை அழைத்துக் கொண்டு உடனே தஞ்சா வூருக்குச் செல்லுங்கள். கொடும்பாளூர் படைகள் ஒருவேளை கோட்டையை முற்றுகை யிட்டிருந்தால் தங்களைத் தவிர யாராலும் அப்படைகளைத் தாண் டிக்கொண்டு போக முடியாது. வானதி தேவியும் தங்களுடன் வந்தால் அதிக வசதியாகப் போய்விடும். நான் இந்த ஓடக்காரப் பெண்ணைச் சமாதானப் படுத்தி அழைத்துக் கொண்டு, ஒரு படகு சம்பாதித்துக் கொண்டு பொன்னி யின் செல்வரிடம் போகிறேன். ஜோதிட ரின் சீடனைப் படகு கொண்டு வருவதற் காக ஏற்கெனவே அனுப்பி விட்டேன்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

வானதி திடுக்கிட்டு எழுந்தவள் அவனை வெறிக்கப் பார்த்து, "முடியாது! முடி யாது! பொன்னியின் செல்வரிடந்தான் போவேன்! செத்தாலும் அவர் காலடி யிலேதான் சாவேன்!'' என்றாள்.

அதைக் கேட்ட பூங்குழலி 'கிறீச்' என்ற குரலில் "வைஷ்ணவரே! நான் உம்முடன் வர முடியாது! கோடிக் கரையில் என் காதலர்கள் என்னை அழைக்கிறார்கள்! நள்ளிரவில் நெருப் பைக் கக்கும் என் காதலர்கள் என்னை அழைக்கிறார்கள்! இளவரசி ஓலை கொடுத்து அனுப்பினாரே, அந்த வாணர் குல வீரருக்குக்கூட என் காதலர்களை நான் காட்டினேன். அவர்களிடம் நான் போக வேண்டும்!'' என்று கூவினாள்.

இதுவரையிலும் இவர்களுடைய சம் பாஷணையில் கலந்து கொள்ளாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு திகைத்து நின்ற ஜோதிடர் இப்போது குறுக்கிட்டார். "அம்மா! அம்மா! எல்லாரும் சற்றுச் சும்மா இருங்கள்!'' என்று இரைந்து கத்தினார்.

ஒரு நிமிடம் அங்கே பேச்சின் ஒலி நின்றிருந்தது. அப்போது வேறோர் ஒலி,—ரோமாஞ்சனத்தை உண்டாக்கும் படியான பேரொலி,—புயல் அடிக்கும் போது அலை கடலில் உண்டாகும் இரைச் சலை யொத்த பேரோசை,—கேட்டது.

"தாய்மார்களே! இந்தச் சந்தர்ப்பம் பார்த்து நீங்கள் இந்தப் பாவியின் குடி சைக்கு வந்தீர்களே! நான் நாட்டுக் கெல்லாம் ஜோதிடம் சொல்லி வந்தவன். உங்களுக்கு எச்சரிக்கை செய்து அனுப் பாமல் இருந்து விட்டேனே?'' என்று ஜோதிடர் புலம்பினார்.

"ஐயா! இது என்ன? புதிய அபா யம் எங்களுக்கு என்ன வருகிறது?'' என்று குந்தவை கேட்டாள்.

"தாயே! அரசலாற்றில் வெள்ளம் பெருகி வடகரையை உடைத்துக் கொள் ளும் போலிருக்கிறது என்று காலையி லேயே என் சீடன் சொன்னான். அரச லாறு உடைத்துக் கொண்டால் அந்த ஜலமெல்லாம் காவேரியில் வந்து விழும். காவேரி கரை புரண்டால் இந்த ஏழை யின் வீடு அடியோடு முழுகிப் போய் விடும். காவேரிக்கு வெகு சமீபத்தில் இந்த வீடு இருக்கிறது. வாருங்கள்! வாருங்கள்! வெளியே வாருங்கள்!'' என்று ஜோதிடர் கதறிக் கொண்டு வீட்டை விட்டு வெளியே ஓடினார்.

எல்லாரும் அவரைத் தொடர்ந்து வெளியேறினார்கள். பீதி கொண்ட முகத் தோற்றத்துடன் ஜோதிடர் "அதோ!'' என்று சுட்டிக் காட்டினார். அவர் சுட்டிக் காட்டிய தென் மேற்குத் திசையில் ஓர் அபூர்வமான காட்சி தென் பட்டது. அரைத் தென்னைமரம் உயர முடைய ஒரு பசுமையான சுவர்,—நீண்டு படர்ந்து ஓரளவு வளைந்திருந்த விசால மான சுவர்,—அந்த வீட்டை நோக்கி இரைச்சலிட்டுக் கொண்டு வந்ததைக் கண்டார்கள். காவேரியின் கரை உடைந்து நீர் வெள்ளம் அப்படிச் சுவ ரைப் போல் நகர்ந்து வருகிறது என்

பதை அங்கிருந்த அனைவரும் ஒரு நொடியில் அறிந்து கொண்டார்கள்.

"அம்மா! வாருங்கள்! எல்லாரும் ஓடி வாருங்கள்! அம்மன் கோவில் மண்டபத்தின் மீது ஏறி நிற்கலாம்! வேறு தப்ப மார்க்கம் இல்லை! திருமலை என் சிடனைப் படகு கொண்டுவர அனுப்பியதே நல்லதாய்ப் போயிற்று! ஓடி வாருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே சோதிடர் வழி காட்டினார்.

மற்றவர்களும் அவரைப் பின்பற்றினார்கள். பூங்குழலியின் வெறியெல்லாம் இப்போது போய் விட்டது. "தேவி! தாங்கள் சிறிதும் அஞ்ச வேண்டாம். இதைக் காட்டிலும் எத்தனையோ பெரிய வெள்ளங்களை நான் சமாளித்திருக்கிறேன்!" என்று கூறிக் கொண்டே அவள் ஓடினாள். எல்லாருக்கும் முன்னதாகக் கோவில் மண்டபத்தை அடைந்து அதில் தாவி ஏறினாள்.

இதற்குள் வெள்ளம் கோவில் அருகிலும் வந்து சூழ்ந்துகொண்டு விட்டது. கீழே நின்றவர்களின் முழங்கால் வரை ஏறிவிட்டது. ஜோதிடரும் ஆழ்வார்க்கடியானும் தத்தித் தடுமாறி மண்டபத்தின்மீது ஏறினார்கள்.

குந்தவையும் வானதியும் மட்டும் இன்னும் கீழே நின்றார்கள்.

இருவரும் ஏற முயன்றார்கள். மேலேயிருந்த பூங்குழலி இளைய பிராட்டியின் கைகளைப் பிடித்துத் தூக்கி விட்டாள்.

வானதி மட்டும் கீழே நின்றாள். அவள் இரண்டு தடவை ஏற முயன்று இரண்டு தடவையும் கைதவறி விட்டு விட்டாள்.

மேலே இருந்த இரு பெண்மணிகளும் அவளைப் பிடித்து மண்டபத்தில் தூக்கிவிட முயன்றார்கள்.

பூங்குழலி ஒரு கரத்தையும் இளைய பிராட்டி குந்தவை ஒரு கரத்தையும் பிடித்துத் தூக்கினார்கள்.

வானதி சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய ஒரு கரத்தைப் பூங்குழலி பிடித்துக் கொண்டிருந்தது தெரிந்தது. உடனே அந்தக் கையை உதறினாள். அவள் பிடியிலிருந்து கையை விடுவித்துக் கொண்டாள்.

அந்த வேகத்தில் குந்தவை பிடித்திருந்த கரமும் நழுவி விட்டது.

வானதி தொப்பென்று விழுந்தாள்; தண்ணீரிலேதான் விழுந்தாள். அதற்குள் தண்ணீர் அவளுடைய கழுத்து வரையில் ஏறி விட்டது. கால் நிலை கொள்ளவில்லை. வானதி தண்ணீரில் மிதந்தாள். வெள்ளம் அவளை அடித்துக்கொண்டு போயிற்று.

இவ்வளவும் ஒரு கணத்தில் நடந்து விட்டது. மண்டபத்தின் மேலேயிருந்தவர்கள் "ஆகா!" என்று பரிதாபமாகக் கதறினார்கள்.

சில கண நேரத்துக்குள் வெள்ளம் வானதியைச் சோதிடர் வீட்டுக் கூரை மேல் கொண்டு போய்ச் சேர்த்தது. அந்தக் கூரை மேல் அவள் ஏறிக்கொண்டாள். "நல்ல வேளை! அபாயம் ஒன்றுமில்லை!" என்று எண்ணினாள்.

மண்டபத்தின் மேலிருந்தவர்களும் அவளைப் பார்த்தார்கள். வீட்டுக் கூரை மீது தொத்திக் கொண்டதைப் பார்த்தார்கள். அவர்களும் "நல்ல வேளை! அபாயம் ஒன்றுமில்லை. படகு வந்ததும் அவளை எப்படியும் தப்புவிக்கலாம்!" என்று கருதினார்கள்.

"கூரையை விட்டு விடாதே! கெட்டியாகப் பிடித்துக்கொள்!" என்று பலமாகக் கத்தினார்கள்.

வானதி சோதிடர் வீட்டுக் கூரையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தக் கூரையே அசைவது போலத் தோன்றியது. அடடா! வீடு இடிந்து விழுகிறதா, என்ன?

ஆம்; சோதிடர் வீட்டுச் சுவர்கள் இடிந்து விழுந்து விட்டன. ஆனால் கூரை மட்டும் விழவில்லை!

கூரை வெள்ளத்தில் மிதக்கத் தொடங்கி விட்டது.

வானதி அந்தக் கூரையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மிதந்தாள்.

கோவில் மண்டபத்தை நோக்கித் திரும்பிப் பார்த்தாள்.

"அக்கா! நான் அவரைப் பார்க்கப் போகிறேன். பொன்னியின் செல்வரைப் பார்க்கப் போகிறேன். காவேரித் தாய் என்னை அவரிடம் கொண்டு போகிறாள்!" என்று கூவினாள்.

அவள் கூறியது அவர்கள் காதில் விழுந்திருக்கும். முக்கியமாகப் பூங்குழலியின் காதில் விழுந்திருக்கும். என்று மனப்பூர்வமாக நம்பினாள்.

ஜோதிடர் வீட்டுக் கூரை வெள்ளத்தில் மிதந்து சென்று கொண்டிருந்தது.

வானதியும் போய்க்கொண்டிருந்தாள்

# பாரதியார் சங்கத் திருப்பணி

தமிழ் நாட்டில் இலக்கிய மறுமலர்ச்சிச் சங்கங்கள் திடுதிப்பென்று தோன்றுவதும் திடீர் திடீர் என்று மறைவதும் வழக்கம்.

நீடித்து நின்று நல்ல பணி ஆற்றி வரும் சில சங்கங்களில் பாரதியார் சங்கமும் ஒன்று.

இச் சங்கத்தார் சென்ற ஆண்டில் செப்டம்பர் 11 ௳ 12 ௳களில் சென்னைமா நகரில் அமோகமாகப் பாரதியார் விழா நடத்திய விவரம் நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அந்தச் சந்தர்ப்பத்தில் பாரதியாரின் சிறந்த கவிதைகள் சிலவற்றைக் கொண்ட "ஜயபேரிகை" என்னும் அழகிய பிரசுரத்தையும் நான்கு அணா விலைக்கு வெளியிட்டார்கள். அவ்வப்போது இலக்கியக் கூட்டங்களும் நடத்தி வருகிறார்கள்.

புதிய விஜய ஆண்டில் பாரதியார் சங்கம் மிகச் சிறந்த பணி ஒன்று தொடங்கியிருக்கிறது. பாரதியாரின் தாய் மாமனாகிய ஸ்ரீ சாம்பசிவய்யர் அவர்கள் எண்பது பிராயமாகியும் 'கட்டுமாறா உடலுறுதி'யுடனும் இளம் வயதின் உற்சாகத்துடனும் நம்மிடையே வாழ்ந்து வருகிறார்கள். இன்றைக்கும் நூறு தண்டாலும் இருநூறு பஸ்கியும் போடக் கூடியவர்கள். பாரதியாரை இளம் பிராயத்தில் வளர்த்தவரும் அவருக்குத் தேச பக்தியாகிய அமுதத்தை ஊட்டியவரும் இவர்தான். பாரதியார் பாடிய அதே பாணியில் பாரதியாரின் தேசிய கீதங்களையும் சக்திப் பாடல்களையும் வீராவேசத்துடன் கம்பீரமாக இன்றைக்கும் பாடக் கூடியவர்கள்.

"நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர் மணிப் பூண்,
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர் பெருந் தீ!"

என்று பாடினாரானால், நமது வாழ்க்கைத் துன்பங்கள் உண்மையிலேயே தீப்பற்றி எரிந்து போவதைக் காண்போம்.

"சக்தி வேல் வேல் வேல்!"

என்று பாட்டை முடிக்கும் போது, நம் எதிரே ஜகன்மாதா கையில் வேல் பிடித்து நின்று தரிசனம் தருவாள்.

ரிஷிகேசத்தில் தவமுனிவராக விளங்கும் ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் ஸ்ரீ சாம்பசிவம் அவர்களைப் பற்றி எழுதும்போது "மகாகவி பாரதியாரும் நானும் இளம் பிராயத்தில் பாரதியின் தாய் மாமனாகிய ஸ்ரீ சாம்பசிவம் அவர்களிடம் தேகாப்பியாச முறைகளைக் கற்றோம்" என்று குறிப்பிட்டிருக்கிறார். (இத்துடனுள்ள படத்தில் அவர்களிருவரும் சேர்ந்து ரிஷிகேசத்தில் கங்கைக் கரையில் எடுத்துக் கொண்ட படத்தைக் காணலாம்.)

ஸ்ரீ சாம்பசிவம் எண்பது பிராயத்து இளைஞர் என்றாலும், அவருக்கு யாரும் ஜீவனோபாயத்துக்கு வேலை கொடுக்க மாட்டார்கள் அல்லவா! இதை முன்னிட்டு அவர் ஜீவியவந்தரா யிருக்கும் காலம் வரையில் (ஸ்ரீ சாம்பசிவம் நீடூழி வாழ்க!) மாதந்தோறும் அவருக்கு ஏதேனும் பொருள் உதவி செய்தால் நலம் என்று பாரதியார் சங்கத்தின் சென்ற கூட்டத்தில் யோசனை சொல்லப்பட்டது. உடனே, யோகாசன நிபுணரான ஸ்ரீ வி. என். குமாரசாமி தாம் கடைமுதல் வருஷத்துக்கு மாதம் பதினைந்து ரூபாய் வீதம் நன்கொடை அளிப்பதாக மனமுவந்து முன்வந்தார். முதல் மாதத்துக்குரிய ரூபாய் பதினைந்தும் விஜய வருடத் தொடக்கத்தில் ஸ்ரீ சாம்பசிவத்துக்கு அனுப்பப்பட்டது.

இது மிகச் சொற்ப தொகைதான். இன்னும் சிறிது கூட்டி அனுப்பினால் எவ்வளவோ நன்றாயிருக்கும். அவ்விதம் செய்வதற்குப் பாரதியார் சங்கத்தின் பொருளாதார நிலைமை அபிவிருத்தி அடைய வேண்டும்.

பாரதியார் சங்கத்தில் தமிழ் நாட்டிலும் தமிழகத்துக்கு அப்பாலும் உள்ள பாரதி அன்பர்கள் அங்கத்தினராகச் சேரவேண்டும். அங்கத்தினர் அதிகமாகச் சேருவது சாத்தியமாகும் பொருட்டே ஆண்டுச் சந்தா ஆறு ரூபாயிலிருந்து மூன்று ரூபாயாகக் குறைக்கப் பட்டிருக்கிறது.

சந்தாத் தொகைக்குமேல் நன்கொடையாக அளிக்கப்படும் தொகைகளைப் பாரதி சங்கத்தார்



சுவாமி சிவானந்தரும், பாரதியாரின் தாய் மாமன் ஸ்ரீ சாம்பசிவம் அவர்களும்

நன்றியுடன் ஏற்றுக் கொண்டு, பாரதியார் விழா—புத்தக வெளியீடு போன்ற நல்ல கைங்கரியங்களுக்குப் பயன் படுத்துவார்கள்.

சந்தாவும் நன்கொடையும் பின்வரும் விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம்:—ஆக்கூர் அனந்தாச்சாரியார், காரியதரிசி, பாரதியார் சங்கம், கோவிந்து தெரு, தியாகராயநகர், சென்னை.

பாரதியார் சங்கத்துக்கு அங்கத்தினர் சேர்ப்பதற்காகக் காரியதரிசி ஆக்கூர் அனந்தாச்சாரியார் விரைவில் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்வார். அவருக்கு வேண்டிய உதவிகள் செய்து ஒத்துழைக்குமாறு பாரதி பக்தர்களையும் தமிழன்பர்களையும் கேட்டுக் கொள்கிறோம்.

# அவள் குற்றம்

### பிலோ இருதயநாத்

**என்** கணவரைப் பிரிந்து சரியாக எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. என் தகப்பனாரின் நண்பர் ஒருவர் எங்கள் இல்லத்திற்கு வந்தார். அவர் என் மன நிலைமையை நன்றாக அறிந்து, என் பூர்வீக சரித்திரத்தைக் கேட்க, நானும் அவரிடம் என் கதையைச் சொல்ல வேண்டியதாயிருந்தது:

"உலகம் இன்னது என்று தெரியாத நான், பள்ளிக்கூடப் படிப்பை முடித்துக் கொண்டு, பிறகு ஆசிரியைத் தொழிலுக்கு வாசித்துத் தேறினேன். பிறகு ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்ந்து வேலை பார்த்து வந்தேன்.

என் தகப்பனாருக்கு நல்ல வருவாயிருந்ததால், அவர் என் சம்பளத்தை எதிர்பார்க்காமலிருந்தார். அவருக்கு நான் கடைசிப் பெண்; நான் சந்தோஷமாயிருக்க வேண்டுமென்று அடிக்கடி சொல்லுவது வழக்கம். கடைசியில் என்னுடைய உறவினர் ஒருவருக்கே என்னைத் திருமணம் செய்து கொடுத்தார். கல்யாணமான மறுவாரமே, என் கணவர் இல்லத்திற்கு நான் சென்றேன். என் தமக்கைமாரும் கலியாணம் செய்து கொண்டு, தூர தேசத்திலிருந்ததாலும், நான் அதிக காலம் சென்று பிறந்ததாலும், என் மேல் அளவிலா ஆசை வைத்திருந்தார்கள் என் பெற்றோர்கள்.

பெரிய வீட்டில் பழகிய எனக்கு, கணவருடைய சிறிய வீட்டில் என்னமோ ஒரு மாதிரியாக இருந்தது. மின்சார விளக்கில் பழகிய எனக்கு மண்ணெண்ணெய் விளக்கு இருளாக இருந்தது. ஆகையால் சனிக்கிழமைகளிலும், ஞாயிற்றுக்கிழமைகளிலும், மற்ற ஆபீஸ் விடுமுறை நாட்களிலும், நான் என் தாயகம் செல்ல என் கணவரிடம் அனுமதி வாங்கிக் கொண்டேன். சில சமயங்களில் அவரும் என்னுடன் வந்து எங்கள் வீட்டில் தங்குவார். அந் நாட்கள் இன்பமாயிருந்தன.

இவ்விதம் ஆறு மாதங்கள் சென்றன. இரண்டு நாட்கள் பிறந்த வீட்டில் தங்குவது என்று இருந்தது, மூன்று அல்லது நான்கு நாட்கள் என்று ஆயின. இப்படியே இருந்து கடைசியில் என் கணவரிடம், "உங்கள் அம்மா அப்பாவுக்கு வேண்டிய பணம் கொடுத்து விடுங்கள்! அவர்கள் அங்கேயே இருக்கட்டும். நீங்கள் என்னுடன் என் பிறந்த வீட்டுக்கு வந்து விடுங்கள். நீங்களும் அடிக்கடி, 'பெரிய வீடு நன்றாக இருக்கிறது' என்று சொல்லுகிறீர்களே!" என்று சமயம் பார்த்து யோசனை கூறினேன்.

அவர், "தங்கமணி! நீ வேண்டுமானால் போய்க் கொஞ்ச காலம் இருந்துவிட்டு, வா! ஆனால் நான் மாத்திரம் வரமாட்டேன். மாமியார் வீட்டில் மருமகன் இருந்தால், அவன் மரியாதை குறைந்து விடும் என்று உலகம் சொல்வது வழக்கம். ஆகையால் நீ போ, நான் வாரத்திற்கு ஒரு முறை அல்லது இரு முறை வருகிறேன்" என்று சொன்னார்.

இவைகளைக் கேட்டதும் எனக்கு அளவில்லா ஆனந்தம் உண்டாயிற்று. எப்படியாவது கொஞ்ச காலமான பிறகு என் கணவரும், என் தாயகம் வருவார்—என்ற நோக்கத்தில் இருந்தேன் நான் அறியாமையால். விளையாட்டுப் போல் ஓராண்டு ஓடியது.

ஒருநாள், என் மாமியார் நோயுற்றிருக்கிறார் என்று நானும் அவருடன் சென்றேன். என் கணவரின் இல்லத்திற்குச் சென்ற எனக்கு இருப்பே கொள்ளவில்லை. ஆகவே மாமிக்குத் தேக சுகமடைந்த நான்காவது நாள் மாமியிடம் மாத்திரம் சொல்லிவிட்டு, என் இல்லம் வந்து சேர்ந்தேன்.

என் கணவர் ஆபீஸிலிருந்து வந்ததும், நான் இல்லத்தில் இல்லாததைக் கண்டு, ரொம்பவும் வருந்தினாராம். அன்று முதல் அவர் என் இல்லத்திற்கு வருவதே இல்லை. ஒரு மாதம் கழிந்த பின் நானே அவரைப் போய்ப் பார்த்தேன். அவருக்குப் பதிலாக, அன்று நானே சமைக்க ஆரம்பித்தேன். அதற்கு அவர் ஒன்றும் சொல்லவில்லை.

"நீங்கள் ஏன் வீட்டிற்கு வருவதில்லை? என் மேல் கோபமா?" என்று கேட்டேன்.

"கோபமொன்றுமில்லையே! என் பெற்றோர்கள் அடுத்தடுத்து வியாதியால் வந்து படுத்து விடுகிறார்கள். நான் வர முடியாமல் போய் விட்டது" என்று சொன்னார்.

அச்சமயத்தில் என் தாயாருக்கும் உடம்பு சுகமில்லை. ஆகையால் அன்றே என் இல்லம் வரவேண்டியதாயிருந்தது.

**என்** இல்லம் வந்து மூன்றாமாண்டு என் மாமனார் இறந்து விட்டார். அவர் இறந்த மூன்றாம் நாள் தான் எனக்கும் விஷயம் தெரியும். இது என் பெற்றோர்களுக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கியது.

என் வருத்தத்தைக் காணச் சகியாதவராய் என் தகப்பனார் திடீரென்று, மாரடைத்து இறந்து விட்டார். இத் துக்கச் செய்தியைக் கேள்விப்பட்ட என் கணவரும், ஒரு அன்னியரைப் போல், வந்தார், சென்றார். ஆம், என் கணவர் என்னைத் தன்னுடன் வருமாறு ஒரு வார்த்தை கூடக் கூறவில்லை. இப்படி உயிருடன் என் கணவரை இழந்து தன்னந்தனியளானேன்.

மறுபடியும் உபாத்திமைத் தொழிலைச் செய்யலாம் என்று எண்ணினேன். அதற்கு வேண்டிய நற்சாட்சிப் பத்திரங்கள் எல்லாம் என் கணவர் இல்லத்திலிருந்ததால் அந்த வேலைக்கு மனுச் செய்து கொள்ளக்கூட முடியாமற் போய்விட்டது.

ஆகையால் நான் கொஞ்ச காலம் என் பெரிய அக்காள் வீட்டில் இருக்கலாம் என்று சென்றேன். அக்காளுக்கு என் வயதுப் பெண் ஒருத்தி இருக்கிறாள். எனக்கும் அவளுக்கும் சதா சண்டையாகவே இருந்தது.

எனக்கு ஒரு நாளாகிலும் இன்பமோ அல்லது சாந்தியோ இருந்ததில்லை.

பெரிய தமக்கையினிடம் வருத்தத்துடன் வெளிவந்த நான், பின்பு என் சிறிய தமக்கையினிடம் சென்றேன். இவளுக்கும் இரண்டு சிறிய குழந்தைகள் இருந்தனர். அவர்களிடம் முதலாண்டு சந்தோஷமாகவே இருந்தேன்.

என் தாயார் எங்கள் சொந்த ஊரில் வீட்டு வாடகையைக் கொண்டு காலம் கழித்து வந்தாள். நான் என் கணவரின் இல்லத்திலே இருப்பதாகவே, என் தாயார் அக்கம்பக்கத்தில் கேட்பவர்களுக்குச் சொல்லி வந்தார்கள்.

பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பார்கள். அதுபோல் என் சிறிய தமக்கைக்கும் என்பால் ஒருவித அருவருப்பு ஏற்பட்டது. நான் என் சின்ன அத்தானிடம் பேசினாலும், பவுடர் போட்டுக் கொண்டாலும், சின்ன அக்காளுக்கு என்மேல் சந்தேகம் வந்து விடும்.

இந்நிலையில் அடிக்கடி 'மறுபடியும் என் கணவரிடம் போகலாமா?' என்று எனக்குத் தோன்றும். ஆனால் எனக்கிருந்த மமதை, கர்வம் அதற்கு இடங் கொடுக்கவில்லை.

இதற்கு மத்தியில் என் சிறிய தமக்கை பிரசவத்திற்காக ஆஸ்பத்திரிக்குச் சென்றாள். இனிமேல் அந்த வீட்டிலிருப்பது சரியல்ல என்று அன்றே, நானும் என் தாய் வீட்டுக்குச் சென்றேன்.

அக்கம் பக்கத்து வீட்டுப் பிள்ளைகளுக்கு, "பிரைவேட் பாடம்" சொல்லிக் கொடுத்து நானும் என் தாயாரும் காலத்தைக் கடத்தி வந்தோம். ஏன்? என் தாயாரைத் தேடி யாராவது வாலிபர்கள் வந்தால், அது பார்ப்பவர்களுக்கு ஒரு குற்றமாக இருந்தது. இவைகளை நினைத்து நினைத்து நான் வியாதியாய்ப் படுத்தேன். இனி எனக்கு......"

என்று அதற்கு மேல் சொல்ல முடியாமல் படுக்கையிலேயே நான் அழ ஆரம்பித்தேன்.

இவைகளைக் கேட்ட பெரியவர், "சிக்கல்களை அதிகமாக்கிக் கொண்டாய்! இன்று இன்பம் எங்கே என்று தேடுகிறது உள்ளம். சாந்தி கிடைத்தால், சற்று சாயலாம் என்று நாடுகிறது உள்ளம். அது இருக்குமிடம் எது என்று சொல்ல முடியாது. அது எங்கு மிருக்கிறது; அது எங்குமில்லை. சிலர் உணவில், செல்வத்தில், உடையில், டாம்பீகத்தில், கல்வியில், சுற்றுப் பிரயாணத்தில், இன்பம் இருப்பதாக எண்ணுகிறார்கள். அங்கும் இல்லை என்பதைக் கடைசியில் உணர்கிறார்கள். தாய் வீட்டில், கணவரின் வீட்டில், இன்பம் இருப்பதாக எண்ணுகிறோம், ஆனால் அங்குமில்லை.

"ஆனால் இன்பத்தின் கதிர்கள் ஆங்காங்கே வீசிக்கொண்டே தான் இருக்கின்றன. இரவு பகல் மாறுவதைப் போலவே, குடும்பத்தில் சிறிய சிறிய பூசல்கள் இல்லாவிட்டால் சுவாரஸ்யம் இருப்பதில்லை. சிறு சிறு குழப்பமும், கலகமும் ஏற்பட்டால்தான், தெளிவும் அமைதியும், இன்பமும் சாந்தமும் உண்டாகும். துன்பங்கள்தான் இறுதியில் ஏற்படும் இன்பங்களுக்கு அறிகுறிகள். தோல்விகள்தான் இறுதியில் உண்டாகும் வெற்றிக்கு அறிகுறிகள்" என்று என் தகப்பனாரின் நண்பர் கூறிவிட்டு வெளியில் சென்றார்.

நான்கு நாட்கள் சென்றன. அந்தப் பெரியவர் எங்கள் வீட்டை நோக்கி மறுபடியும் வந்து, "உன் கணவர் உன்னைக் காண வேண்டுமாம். என்னுடன் வா!" என்று கூறினார். எட்டாண்டுகளுக்குப் பின், இவ்வார்த்தைகள் எனக்குப் புதியதோர் மணக்கோலத்தை உண்டாக்கின. உடனே நானும்



● அடையாறு காந்தி நகர் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த சாந்தா ஞாபகார்த்த ஹாலில் புதிய தமிழ் ஆண்டுப் பிறப்பன்று காந்தி நகர் கிளப்பின் கலைப் பகுதி ஆரம்பிக்கப்பட்டது. ஸ்ரீமதி கல்பகம் ஸ்வாமிநாதனும் அவருடைய சகோதரியும் இனிய வீணைக் கச்சேரி செய்து சபையோரை மகிழ்வித்தார்கள்.

காந்தி நகரில் வசிக்கும் கர்னல் ரமணராவ் தம்பதிகளினால் காலஞ்சென்ற தங்கள் அருமைக் குமாரி ஸ்ரீமதி சாந்தா தேவியின் ஞாபகமாகச் 'சாந்தா ஞாபகார்த்த ஹாலை'ச் சுமார் பதினையாயிரம் ரூபாய்ச் செலவில் கட்டிக் காந்தி நகர் பள்ளிக்கூடத்துக்கு நன்கொடையாக அளித்தார்கள். ஸ்ரீ ரமணராவ் குடும்பத்தார் காந்தி நகர் காலனிக்குச் செய்து வரும் பல பொதுநலத் தொண்டுகளைக் கிளப்பின் காரியதரிசி ஸ்ரீ கே. ஆர். சம்பத் பெரிதும் பாராட்டி நன்றி கூறினார்.



ஸ்ரீமதி சாந்தா தேவி

சென்றேன். எங்கள் வண்டி என் கணவரின் வீட்டண்டை போய் நின்றது.

வாசலில் காத்திருந்த என் மாமி, "வாம்மா தங்கமணி!" என்று என்னை அழைத்தார்கள். நான் சற்று தயக்கத்துடன் உள்ளே சென்றேன். என் மாமியும், பெரியவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அங்கிருந்த ஒரு அறைதான் என் கணவரின் அறை என்று தெரிந்து, மெல்ல எட்டிப் பார்த்தேன். சுற்றும் முற்றும் பார்த்தேன். அவர் இல்லை. அவ்வறையின் எதிர்ச்சுவரில் மகாத்மா, ஜவாஹர்லால் முதலியோரின் படங்கள் இருந்தன. மற்றொரு புறத்தில் உலகத்திற்கு அஹிம்சையைப் போதித்த புத்த பகவானின் திரு உருவப் படம் இருந்தது. இவற்றுக்கு மத்தியில் கணவரை "உதாசீனம்" செய்து தள்ளிய இந்த அகங்காரப் பேயின் புகைப் படம் பெரியதாகச் செய்து மாட்டியிருந்தது.

'நான் அவரை, எவ்வளவோ உதாசீனம் செய்துங்கூட, அவர் என்மேல் இவ்வளவு அன்புடன் இருக்கிறாரே' என்று நினைக்க நினைக்க என் மூச்சுத் திணறிற்று.

ஒரு நிமிஷம் தேவதாயின் படத்தைப் பார்த்தேன்.

"அவர் ஏழை என்பதற்காக நீ அவரை உதாசீனம் செய்தாயே! மனிதர்களுக்கு வேண்டுவது அன்பு" என்று அத் தேவமாதாவின் படம் சொல்லுவது போல் தோன்றியது. அடுத்த நிமிஷம் என் கணவரின் படத்தைக் கண்ணில் ஒத்திக் கொள்வதற்காக, இரண்டடி நகர்ந்தேன். மார்பு 'படபட' வென அடித்துக் கொள்ள, அவர் படுக்கையின் மேல் 'தொப்' பென்று விழுந்து மூர்ச்சையாகிப்போனேன்.

எனக்கு நினைவு வந்தபோது, என் கணவரது மடியின்மேல் நான் தலை வைத்துப் படுத்திருப்பதைக் கண்டேன். "சட்"டென்று எழுந்திருக்க முயன்ற என்னை நோக்கி, "தங்கம்! உன் உடம்புக்கு என்ன? இப்பொழுது எழுந்திருக்க வேண்டாம். பேசாமல் படுத்துக்கொள்" என்றார் என் கணவர்.

"என்னை மன்னித்து விடுங்கள். நான் உங்களுக்கு மிகவும் அபசாரம் செய்துவிட்டேன்?" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தேன்.

"பைத்தியமே! நீ என்றும் என் தங்கம்தான். வருத்தப்படாதே. எல்லாம் அவர் செயல். நாம் என்ன செய்ய முடியும்?" என்று முகத்தோடு முகம் வைத்துச் சொன்னார்.



தஞ்சைக் கலைக் காட்சியை யொட்டி 'எக்ஸிபிஷன் தபாலாபீஸ்' ஒன்று ஏற்படுத்தி யிருந்தார்கள். இதில் தபால் தந்தி ஏற்பாடுகளின் வேலை முறை, அபிவிருத்தி ஆகியவை குறித்து ஏராளமான விவரங்கள் அழகான முறையில் அளிக்கப்பட்டிருந்தன. இந்தக் காட்சியின் நிர்வாகப் பொறுப்பை வகித்த ஸ்ரீ பி. சுந்தரேசன் அவர்கள் பலருடைய பாராட்டுதலையும் பெற்றார்.



# சிவப்பு ரோஜா

சீனு

சுந்தரியும் கமலினியும் வழக்கம் போல் அன்று மாலை நந்தவனத்தில் நுழைந்தனர். சுந்தரி ஒரு ராஜகுமாரி. கமலினி நந்தவனத்தில் வசித்து வந்த ஒரு தேவதை; சுந்தரியின் அருமைத் தோழி.

சிறிது தூரம் சென்றதும் கமலினி மெல்லிய குரலில் "இங்கே ஒரு அதிசயம் பார்த்தாயா, சுந்தரி!" என்று கேட்டது.

"என்ன அதிசயம், எனக்கு ஒன்றும் தெரியவில்லையே!" என்றாள் ராஜகுமாரி சுந்தரி. ஆம்; அவள் கண்களில் ஒன்றும் தென்படவில்லை.

"சுந்தரி, இங்கே ஒரு மூலையில் மந்திர வாதி யொருவன் ஒளிந்து கொண்டிருக்கிறான். எங்கே என்று கண்டு பிடித்துச் சொல் பார்க்கலாம்" என்றது வன தேவதையான கமலினி.

சுற்றும் முற்றும் பார்த்தாள் சுந்தரி. ஊஹூம்......கண்டு பிடிக்க முடியவில்லை அவளால்.

"சரி, என்னுடன் வா, அந்தப் பயல் இருக்கு மிடத்தை உனக்குக் காட்டுகிறேன்" என்றவாறே ஒரு மூலைக்கு அழைத்துச் சென்றது கமலினி.

அங்கே ஒரு ரோஜாச் செடி யிருந்தது. அந்தச் செடியில் ஒரே ஒரு ரோஜா-சிவப்பு ரோஜா காற்றில் உல்லாசமாகத் தவழ்ந்து ஆடியவாறு இருந்தது.

கமலினி செடியை நெருங்கி அந்த மலரை 'வெடுக்' கென்று பறிக்கப்போனாள். ஆனால் அதன் கை படு முன்பே ரோஜா மறைந்து போய் விட்டது!

சுந்தரிக்கு ஒரே வியப்பாகப் போய் விட்டது. அவள் வியப்பு அடங்குமுன், ரோஜாவுக்குப் பதில் ஒரு அழகான பசுங்கிளி அங்கு தோன்றியது. பயத்தினால் தன் சிறகுகளை யடித்துக் கொண்டு அவ் விடத்தை விட்டு வேகமாக ஓட முயற்சித்தது. அடுத்த கணம், கமலினி நின்ற விடத்தில் திடீரென்று பூனை யொன்று தோன்றிக் கிளியைக் கோபமாக விரட்டியது.

மறு கணம், பூனையின் வாயிலிருந்து தப்பும் வண்ணம் கிளி ஒரு வேட்டை நாயாக மாறிப் பூனையின் மேலே பாய வேகமாக ஓடி வந்தது.

பூனை நடு நடுங்கிப்போய், உடனே ஒரு பாம்பாக மாறியது. பாம்பைக் கண்டதும் நாய் கதி கலங்கி, கீரி உருவம் எடுத்தது.

நாகத்துக்கும் கீரிக்கும் கடுமையான சண்டை மூண்டது. தன் முன் நிகழ்ந்த அதிசயங்களை, கண் கொட்டாமல் பார்த்து வந்த சுந்தரி கீரி—பாம்பின் சண்டையைக் கண்டதும் பயந்து போனாள். சண்டையும் சிறிது நேரத்தில் பயங்கரமாக மாறியது.

"இதோ, கீரி பாம்பின் கழுத்தை நோக்கிப் பாய்கிறதே! ஐயோ! இன்னும் ஒரு கண நேரத்தில் கமலினி பிணமாகி விடுமே" என்று சுந்தரி கலங்கி நின்றாள்.

ஆனால், ஆகா என்ன ஆச்சரியம்! கீரியின் பயங்கர பாய்ச்சலிலிருந்து தப்பும் பொருட்டு, கமலினி ஒரு நொடியில் பஞ்சாக அல்லவா மாறிவிட்டது!

தன் முன் அற்பப் பஞ்சு பறந்ததும், கீரிக்கு ஆத்திரம் தாங்க வில்லை. 'இதைக் கொளுத்தித் தள்ளிவிட வேண்டும்' என்ற எண்ணத்துடன் நெருப்பாக மாறிப் பஞ்சைத் துரத்தியது.

இதற்குள் சுந்தரி அருகில் ஓடிக் கொண்டிருந்த நீர் ஓடையிலிருந்த நீரை இரு கைகளாலும் அள்ளி அள்ளி நெருப்பின் மீது வீசினாள். அவ்வளவுதான்! நீர் மேலே விழுந்ததும் வஞ்சக எண்ணங் கொண்ட மந்திர வாதி அலறிய வாறே மாண்டு மறைந்து போனான்! சற்று முன் பஸ்மமாகி இருக்க வேண்டிய பஞ்சு பிழைத்தது! சுந்தரியின் சமயோசித யுக்தியினால் கமலினியின் உயிர் தப்பியது.

விரோதி அணைந்து ஒழிந்து போனதும், கமலினி சுயஉருவத்தை அடைந்தது.

இப்பொழுது ராஜகுமாரி சுந்தரி கமலினியைக் கேட்ட முதல் கேள்வி, "ஏன் கமலினி! உனக்கு எப்படி மந்திரவாதியின் மர்மவேலை தெரிந்தது?" என்பதுதான்.

"எனக்குக் குழந்தைகள் என்றால் அளவு கடந்த பிரியம். ஆனால் இந்த மந்திரவாதிக்கோ குழந்தைகளைப் பயமுறுத்துவதே வேலை. இந்த விஷயமாகத்தான் எங்களுக்குள் தீராப் பகை. மந்திரவாதி என்னைத் தீர்த்துக் கட்ட முடிவு செய்து, பல தந்திரங்கள் செய்து வந்தான். ஏன், இன்று காலை நான் இந்த நந்தவனம் பக்கம் சுற்றி வந்தேன். இந்தச் செடியில் அப்பொழுது ஒரு பூ கூட இல்லை! அது தவிர இந்தச் செடி வெள்ளை ரோஜா ரகமல்லவா? என்றைக்காவது இதில் சிவப்புப் பூ பூக்குமா!

"காலையில் பார்த்த பொழுது இந்தச் செடியில் பூவே இல்லை. இப்பொழுது செடியில் பூவை, அதுவும் சிவப்புப் பூவைக் கண்டதும் என் மூளை வேலை செய்ய ஆரம்பித்தது. இதில் ஏதோ சூது இருக்கிறது என்று தீர்மானித்தேன். வேறு என்ன சந்தேகம்? என் விரோதி தக்க தருணம் பார்த்து என்னை ஒழித்துக் கட்டவே சூழ்ச்சி செய்து ஒளிந்திருக்கிறான் என உடனே அறிந்து கொண்டேன். நான் நினைத்தது போலவே நடந்தது.

"இது வெள்ளை ரோஜாச் செடி என்பது பாவம், என் விரோதியாகிய அந்த மந்திரவாதிக்கு எப்படித் தெரியும்? சிவப்பு நிறம் எதிர்பாராத விதமாக அவனைக் காட்டிக் கொடுத்து விட்டது" என்றது கமலினி.

இதைக் கேட்ட ராஜகுமாரி சுந்தரிக்கு எல்லாம் ஆச்சரியமாயிருந்தது.

# படித்துப் பாருங்கள்!

## ஆரோக்கிய ரகசியம்

'கல்கி' காரியாலயத்தினருக்கு, "ஆரோக்கிய ரகசியம்" புஸ்தகமாக வெளி வந்ததில் அளவு கடந்த மகிழ்ச்சி. இதற்குக் காரணம் பொழுது விடிந்தால் நமக்கு வரும் கடிதங்களில் ஒரு பகுதி, "ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளைப் படித்ததிலிருந்து ஒழுங்காக ஆசனங்கள் போட்டு வருகிறேன். நல்ல பலன் அடைந்துள்ளேன். ஆனால் என்னிடமிருந்த 'கல்கி' இதழ்களில் சில காணாமற் போய் விட்டன. ஆகவே ஆரோக்கிய ரகசியத்தின் 7, 8 அத்தியாயங்கள் உள்ள இதழ்களை அனுப்பி வைக்கவும்" என்ற ரீதியில் இருந்து வருவதுதான். "பழைய 'கல்கி' இதழ்கள் கைவசமில்லை" என்று எத்தனை நாள்தான் எத்தனை பேருக்குத்தான் பதில் எழுதுவது! ஆகவே. "ஆரோக்கிய ரகசியம்" புத்தகமாக வெளி வந்ததில் 'கல்கி' காரியாலயத்தினருக்குப் பரம சந்தோஷம். இந்த நற்செய்தியைக் கேட்டு நம்மைப் போலவே 'கல்கி' அன்பர்கள் எத்தனையோ பேர் சந்தோஷப் படுவார்கள் என்பதில் ஐயமில்லை.

"உள்ளத்தில் உண்மை யொளி யுண்டாயின் வாக்கினிலே யொளியுண்டாகும்" என்றார் பாரதியார். இந்த இலக்கணத்துக்கு இலக்கியமாகத் திகழ்கிறது இந்நூல். இந்நூலாசிரியரான ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமியவர்கள் யோகாசன சம்பந்தமாக பாரதியார் கூறியபடி உள்ளத்தில் உண்மையொளி பெற்றவர். யோகாசனங்களினால் அவரே பயன் அடைந்தவர். எத்தனையோ பேருக்குத் தீராத நோய்களை யெல்லாம் தீர்த்து யோகாசனங்களினால் பயனுறச் செய்திருக்கிறார். ஆகவே, அவர் எழுத்தில் உண்மை யொளி சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. இத்தகைய அரிய நூலுக்குக் 'கல்கி' ஆசிரியர் வழங்கியுள்ள முன்னுரையில், "இந்த அருமையான நூல் தமிழ் அறிந்த ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்க வேண்டிய ஆரோக்கிய பொக்கிஷம். இந்த நூலை இவ்வளவு மலிவான விலையில் வெளியிட்டதின் மூலம் ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி தமிழ் மக்களுக்குப் பேருபகாரம் செய்திருக்கிறார். ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமியின் யோகாசனப் பிரசாரம் மேலும் மேலும் பரவித் தமிழ் நாட்டின் ஆரோக்கியச் செல்வத்தை வளர்க்கும் என்று எதிர் பார்க்கிறேன்" என்று கூறுகிறார்.

725 பக்கங்களும், நூற்றுக்கணக்கான யோகாசனப் படங்களும் கொண்ட இந் நூலின் சாதாரணப் பதிப்பின் விலை ரூ 6; உயர்ந்த பதிப்பின் விலை ரூ. 10. கிடைக்குமிடம்: ஆரோக்கிய யோகாஸ்ரமம், 216, திருவொற்றியூர் ஹைரோடு, தண்டையார்ப் பேட்டை, சென்னை—21.

## சோர் கீ ப்ரேமிகா

(ஹிந்தியில் கள்வனின் காதலி)

"உலகத்தில் நடக்கும் நற் காரியங்களுக்கு மட்டுமே அன்பு காரணம் என்று சொல்லுகிறவர்கள் உண்மை அறியாதவர்கள். சில சமயம் மறத்திற்கும், அதாவது தீச் செயல்களுக்கும் அன்பே காரணமாகும்" என்ற பொருளை,

"அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை"

என்ற குறளுக்குத் தமிழ் நாட்டுப் பெரியார் ஒருவர் கூறினார்.

இதை அடிநாதமாகக் கொண்டு 'கல்கி' ஆசிரியர் பதினேழு ஆண்டுகளுக்கு முன் கள்வனின் காதலி என்ற நவீனத்தைப் புனைந்தார். முத்தையன் என்ற வாலிபன், தன்னுடைய ஒரே தங்கையான அபிராமியின் மீது கொண்டிருந்த பாசம் காரணமாக அடைந்த இன்னல்களையும் புரிந்த தியாகங்களையும் எடுத்துக் கூறுகிறது இந் நவீனம். அந் நாட்களில் இந்தக் கதை வெளியானபோது தமிழ் மக்கள் வாரந்தோறும் ஆவலுடன் படித்து வந்தனர். முத்தையன், அபிராமி, கல்யாணி ஆகிய மூன்று பாத்திரங்களும் கஷ்டப்படும் போது வாசகர்களும் துயரமுற்றனர்; அவர்கள் சிரிக்கும்போது தாங்களும் சிரித்தனர்.

இப்படித் தமிழர்களால் பெரிதும் ரஸிக்கப் பட்ட இப் புத்தகத்தை, வட நாட்டவர்களும் ரஸிக்கும்படியாக, ஹிந்தி மொழியில் இப்போது வெளியிட்டிருக்கிறார்கள். மூலத்தின் சுவை சிறிதும் குன்றாத வகையில், "நவ பாரத் டைம்ஸ்" பத்திரிகையின் உதவி ஆசிரியரான ஸ்ரீ சோமசுந்தரம் மொழி பெயர்த்திருக்கிறார். பொருத்தமான அழகிய சித்திரங்களுடன் புத்தகம் வெளியாகியிருக்கிறது. இவ்வளவு நல்ல முறையில் இந்தப் புஸ்தகத்தை வெளியிட்டதற்குப் பிரசுர கர்த்தாக்களைப் பெரிதும் பாராட்ட வேண்டும்.

பிரசுரம்: ஆத்மாராம் அண்ட் ஸன்ஸ்; காஷ்மீரி கேட், தில்லி—6; விலை ரூ. 4—0—0.



# எங்காயினும்

## என்று பெரிதாக்கிப் பேசுவதல்ல

இந்த வசீகரமான பிலிப்ஸ் ரேடியோப்ளேயர் ட்ரை பாட்டரியினால் வேலை செய்கிறது. வீட்டிலும், வெளியில் தோட்டத்திலும், பிரயாணம் செய்யும்பொழுது கூட—எங்கும் உபயோகிக்கலாம். அழகான காபினெட்டும் மேன்மையான இசையளிக்கும் தன்மையும், உங்களை எல்லாவிதத்திலும் எவ்விடத்திலும் திருப்திப்படுத்தும். இதை உங்கள் அருகாமையிலுள்ள அதிகாரம் பெற்ற பிலிப்ஸ் டீலரிடம் காணவும் கேட்கவும் செய்யுங்கள்.



விலை ரூ. 295/-




**BCA 316B**

**ட்ரை பாட்டரி**

ரேடியோ

# பிலிப்ஸ்

புகழ்பெற்ற உயர்ந்த ரக, விளக்குகள் தயாரிப்பவர்கள்

8CRH-10

எங்கும்... எந்நேரமும்...

# ப்ரூக் பாண்ட்

# தேயிலை



# எதிரொலியும் பேரொலியும்

ருஷ்யா முழங்கிய சமாதான சங்கநாதத்தினால் உலகில் ஏற்பட்ட எதிரொலி இன்னும் அடங்கவில்லை; அமெரிக்காவின் சமாதான முழக்கத்தினால் உண்டான எதிரொலியும் இன்னும் நிற்கவில்லை. கொரியாவில் நடைபெற்று வரும் யுத்த சமாதானப் பேச்சுகளோ காதைத் துளைத்து வருகின்றன.

இந் நிலையில் இந்தோ சீனாவிலும் அதைச் சுற்றியுள்ள சயாம், பர்மா நாடுகளிலும் எழுந்துள்ள போரின் பேரொலி, மேற்படி சமாதான முழக்கங்களை இருந்தவிடம் தெரியாமல் மறைத்து விட்டு அகில உலகத்தையும் அதிரச் செய்வதாக இருக்கிறது.

அதனால் மற்றொரு 'கொரியா' சிருஷ்டிக்கப்படலாம் என்ற பீதி உண்டாகியிருக்கிறது; அந்தக் 'கொரியா'வில் ஏற்படும் யுத்தம் உலக மகா யுத்தமாக மாறலாம் என்ற நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

*　　*　　*

இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாக இந்தோ சீனா தேசம் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் இருந்து வந்தது.

இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது அங்கு பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கம் ஒழிந்து ஜப்பானியரின் ஆட்சி ஏற்பட்டது. மேற்படி யுத்தம் முடிந்த பின் அந்த நாட்டிலிருந்து ஜப்பானியரின் ஆதிக்கம் மறைந்ததெனினும், இந்தோ சீனா மக்களுக்குச் சுதந்திரம் கிடைக்கவில்லை. அந்த நாட்டில் மறுபடியும் பிரஞ்சுக்காரர்கள், ஆங்கிலோ அமெரிக்கர்களின் உதவியால் தங்களுடைய ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொண்டு விட்டார்கள்.

எனினும், சென்ற மகா யுத்தத்துக்குப் பிறகு இந்தோ சீனர்கள் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்துக்குப் பணிந்து கிடக்க விரும்பவில்லை. சென்ற ஆறு வருஷங்களாக அவர்கள் பிரஞ்சுக்காரர்களை எதிர்த்துச் சுதந்திரப் போரை நடத்தி வருகிறார்கள்.

மேற்படி போரில் பிரஞ்சுக்காரர்களுக்குப் பிரிட்டனும் அமெரிக்காவும் ஆதரவு அளித்து வருவது போல், இந்தோ சீன தேசபக்தர்களுக்குக் கம்யூனிஸ்டுகள் ஆதரவு அளித்து வருகின்றனர்.

அந்த யுத்தத்தில் பதினாயிரக் கணக்கான பிரஞ்சு சிப்பாய்கள் பலியாயினர். பிரான்சுக்கு ஐந்நூறு கோடி ரூபாய்க்குமேல் செலவாகியிருப்பதாக அமெரிக்கப் பத்திரிகைகள் கூறுகின்றன. அப்படியிருந்தும் பிரஞ்சுக்காரர்கள் வெற்றிபெற முடியவில்லை. வியட் நாம் பிரதேசத்தின் பெரும் பகுதி, அதாவது டாங்கிங், அன்னாம் மாகாணங்களின் பெரும் பகுதி இந்தோ சீனக் குடியரசாக விளங்குகிறது. ஹோ சி மின் மேற்படி குடியரசின் ஜனாதிபதியாக இருந்து வருகிறார்.

இந்தோ சீனா முழுவதையும் குடியரசின் கீழ் கொண்டு வர வேண்டும் என்பதே அவரது நோக்கமாகும். 1946-ல் வியட் நாம் ஜனாதிபதி ஹோ சி மின்னுக்கும் இந்தோ சீனா பிரஞ்சு ஹை கமிஷனருக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி, வியட் நாம் குடியரசு பிரஞ்சு யூனியனுக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று.

இந்தோ சீனாவில் டாங்கிங், லாவோஸ், அன்னாம், கம்போடியா, கொச்சின் சீனா என ஐந்து மாகாணங்கள் இருக்கின்றன.

இவற்றில் டாங்கிங் மாகாணமும் அன்னாம் மாகாணத்தின் பெரும் பகுதியும் சேர்ந்துதான் வியட் நாம் என வழங்கப் படுகிறது. வியட்நாமில் அன்னாம் பாஷை பேசும் அன்னாமியர்கள் பெரும்பாலோராக இருப்



பதாலேயே அப்பிரதேசத்துக்கு வியட் நாம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

இந்தோ சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியும் மற்றும் சில தேசியக் கட்சிகளும் சேர்ந்தே வியட் மின் கட்சியாக உருவாகி யிருக்கிறது. இன்று வியட் நாம் குடியரசு வியட் மின் கட்சியின் ஆட்சியில்தான் இருந்து வருகிறது.

1946-ம் வருஷத்தில் பிரஞ்சு கமிஷனருக்கும் கம்போடியா பிரதம மந்திரியான மோனிரத் இளவரசருக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி கம்போடியா ஒரு மன்னரின் கீழ் பிரஞ்சு நாட்டின் பாதுகாப்பில் உள்ள பிரதேசமாக இருந்து வருகிறது.

லாவோஸ் மாகாணமோ வெனில் 1893-ம் வருஷத்திலிருந்து பிரஞ்சுக்காரர்களின் நிர்வாகத்தில் இருந்து வருகிறது. எனினும் 1946-ல் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி அப்பிரதேசம் பிரஞ்சு ஆதிக்கத்தின் கீழ் பார்லிமெண்டு ஆட்சி முறைக்கு உட்பட்ட முடியரசாக விளங்குகிறது. லாவோஸ் மன்னரான சிசாவாங் வோங் லாவோஸின் தலைநகரான லுவாங் பிரபாங்கில் வசித்து வருகிறார்.

அன்னம் மன்னர், கொச்சின் சீன மாகாணத்தை 1862-ல் பிரஞ்சுக்காரர்களுக்கு விட்டுக் கொடுத்து விட்டார். எனினும் 1946-ல் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி கொச்சின் சீன இன்று பிரஞ்சு யூனியனுக்கு உட்பட்ட குடியரசாக இருந்து வருகிறது.

அன்னம் மாகாணத்தில் வியட் நாம் குடியரசில் சேராத பகுதிகள் சேர்ந்து பிரஞ்சு சர்க்காரின் மேற்பார்வையில் ஒரு முடியரசாகத் திகழ்கிறது. அதன் மன்னரான பாவ் டாயை பிரஞ்சுக்காரர்களின் கைப்பொம்மை என்று வியட் மின்கள் கூறுகின்றனர். பாவ் டாய் மன்னரின் துருப்புகளே வியட் நாம் துருப்புகள் என்று குறிப்பிடப் படுகின்றன.

இவ்வாறாக மிகச் சிறிய தேசமான இந்தோ சீனவில் குடியரசுகளும் 'முடியரசுகளும் மலிந்து குழப்பமான நிலைமை ஏற்பட்டிருப்பதற்குப் பிரஞ்சுக்காரர்களின் திருவிளையாடல்தான் காரணம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

* * *

இதுவரையில் லாவோஸ் எல்லையைக் கடக்காமல் இருந்த வியட் மின் துருப்புகள் இப்போது லாவோஸ்மீது பெரும் படையெடுப்பை ஆரம்பித்திருப்பதே அங்கு நெருக்கடியான நிலைமையை உண்டுபண்ணி யிருக்கிறது. மேற்படி படையெடுப்பைத் தடுத்துத் தீரவேண்டும் என்று அமெரிக்க சர்க்கார் உறுதி கொண்டிருக்கின்றனர்.

வியட் மின் துருப்புகளுக்குத் தலைவராக ஜெனரல் வோ குயென் கியப் என்ற சீனத் தளபதி இருப்பதாலேயே மேற்படி படையெடுப்பைக் கம்யூனிஸ்டுகளின் படையெடுப்பாகக் கருதுகிறார்கள்.

லாவோசில் பிரஞ்சுப் படைகளுக்கு உதவியாக அமெரிக்கா அவசர அவசரமாக ஏராளமான யுத்த தளவாடங்களையும் போர் விமானங்களையும் அனுப்பி வருகிறது.

லாவோஸ் வியட் மின்களின் கையில் சிக்கி விட்டால், அரசியல் ரீதியாகமாத்திரமல்ல, பொருளாதார ரீதியாகவும் அவர்களுடைய கை பலமடைந்து விடும்.

லாவோசிலிருந்து அவர்கள் லாவோஸ் எல்லையை அடுத்துள்ள பர்மாவையும் சயாமையும் எளிதாகத் தாக்க முடியும்; எனவே ஆசியாவின் அரிசிக் களஞ்சியமான பர்மாவுக்கும் சயாமுக்கும் ஆபத்து நெருங்கி விட்டது என்று அமெரிக்கர்கள் கருதுகின்றனர்.

லாவோசில் தங்கம், ஈயம், தேக்கு, அரிசி, பருத்தி, புகையிலை, பழங்கள் முதலியன ஏராளமாக உற்பத்தியாவதால் லாவோசை ஆக்கிரமித்துக் கொள்வோர் மேற்படி பொருளாதாரச் செல்வத்தின் பலனையும் அடைவார்கள் அல்லவா?

அதனாலேயே லாவோஸ் மீது ஆரம்பமாகியுள்ள படை யெடுப்பு பிரிட்டிஷ், அமெரிக்கர்களுக்கு மிகுந்த கலக்கத்தைக் கொடுத்திருக்கிறது. அமெரிக்காவின் பசிபிக் கடற் படைத் தளபதியான அட்மிரல் ஆர்தர் ராட்போர்ட் இந்தோ சீனவில் உள்ள பிரஞ்சுத் தளபதியுடன் கலந்தாலோசிப்பதற்காக ஹனாய்க்கு விஜயம் செய்திருக்கிறார். இரு வல்லரசுகளின் தளபதிகள் மந்திராலோசனை செய்ய முற்பட்டிருப்பதிலிருந்து இந்தோ சீன நிலைமை நெருக்கடியான கட்டத்துக்கு வந்திருப்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

இந்தப் படையெடுப்பு முற்றும் பட்சத்தில் கொரியாவைப்போல் இந்தோ சீனவில் கோரமான போர் மூளக் கூடும். அந்தப் போரில் ஒருபுறம் கம்யூனிஸ்டுகளும் மற்றொரு புறம் பிரஞ்சு, பிரிட்டிஷ், அமெரிக்கர்களும் ஈடுபடும்படி நேரலாம். அத்தகைய விபரீதம் நேராமல் தடுத்தாலன்றி, கொரியாவில் நடைபெற்றுவரும் சமாதானப் பேச்சுகள் வெற்றி அடைவதற்கு வழியில்லை.

"ஓவல்டின் அமெச்சூர் நேரம்" என்று ரேடியோ சிலோன் மூலம் ஒலி பரப்பப்பட்டு வரும் ரேடியோ புரோகிராம் ஆரம்பித்து ஒரு வருஷம் ஆகிறது. அதன் மூலம் ஓவல்டின் பானத்தின் புகழ் அகில உலகமும் பரவிவிட்டது. 10-5-53ல் அந்த புரோகிராம் ஒலிபரப்பப்பட்டது. ஒவ்வொரு புரோகிராமுக்கும் ஸ்விட்சர் லாந்து, ஸ்வீடன், நார்வே, பின்லாந்து, டென்மார்க் முதலிய கடல்கடந்த பிரதேசங்களி லிருந்தெல்லாம் பாராட்டுக் கடிதங்கள் வந்து குவிந்திருக்கின்றன.




எஸ். டி. ஸ்ரீநிவாசன்

பார்வதி கேட்ட கேள்விக்குப் பரமேஸ்வரனின் இதயத்தில் இருந்து ஒரு நீண்ட பெரு மூச்சுதான் பதிலாக வெளிப்பட்டது.

"முடிவாக என்ன சொன்னான் எங்க அண்ணா" என்று மறுபடியும் அவனுடன் கேட்டாள் பார்வதி.

"உங்க அண்ணா ஒரு முடிவையும் சொல்லல்லே. அம் முடிவை நாம்தான் யூகிச்சுக்கணும்.........மொத்தத்திலே இதைத் தட்டிக் கழிக்க ஏதோ சாக்குப் போக்குச் சொல்றான்......"

"இன்னிக்குச் சாயங்காலம் நானே போய், ரெண்டிலே ஒண்ணு கேட்டுடறேன்."

"உனக்கு மாத்திரம் அவன் மனசிலே இருக்கிறதைச் சொல்லப் போறானா?...... 'காரியம் ஆகிற வரையில் காலைப்பிடி' என்கிறதுதான். அடுத்த வருஷம் ஐ. ஏ. எஸ். பரீட்சைக்குப் போறானாம் பிள்ளையாண்டான். அது முடிஞ்ச பிறகு பார்த்துக்கலாம் என்கிறானாம் நாகராஜனே!"

"போன வருஷம் கேட்டா, ஆனர்ஸ் முடியட்டும் என்றான். இப்போதான் பரீட்சை யெல்லாம் முடிஞ்சு ரிஸல்டும் வெளி வரப் போறதே! இப்போது ஐ. ஏ. எஸ். என்கிறானே...... ஆமாம். அதுவரையில், வயசான பெண்ணை நாம் வெறுமனே வீட்டிலே வச்சிண்டிருக்க முடியுமா!"

"அதையும் நான் கேட்டுட்டேனே. அதற்கு அவன், 'என்னை என்ன செய்யச் சொல்றே! பையனுடைய இஷ்டத்தையும் நாம் கவனிக்கணும் இல்லையா! அப்படி உங்களுக்கு ரொம்ப அவசரமானால், வேறு எங்காவது நீங்க பார்த்து ஏற்பாடு பண்ணுகிறதை நான் தடுக்கவில்லை. என்னால் ஆனது இருநூறோ முந்நூறோ கொடுக்கவும் நான் தயார்' என்றான் ..."

"நான் நேரே போய் நாகராஜனையே கேட்கிறேன். அவன் என்னதான் சொல்கிறான் என்று பார்த்து விடறேன்!" என்றாள் பார்வதி.

"இந்த விஷயத்திலே அம்மா, அப்பா, பிள்ளை எல்லாரும் ஒண்ணுதான். உனக்கும் இதே பதில் தான் கிடைக்கும். இவனுடைய யோக்கியதை தெரிஞ்சுதான் நான் அப்போதே படிக்கப் படிக்கச் சொன்னேன். ஜானகி நம் காலிலே விழாத குறையாக ராகவனுக்கு ராஜலக்ஷ்மியைக் கொடுத்துடும்படி கேட்டா, நீ ஒரே பிடிவாதமாக மாட்டேன் என்றாய்! கடைசியிலே ராகவனுக்கு வேறு இடம் பார்த்தாச்சு. உங்க நாகராஜன் கட்டாயம் ராஜலக்ஷ்மியைப் பண்ணிக்குவான்னு மனப்பால் குடிச்சிண்டிருந்தே. இப்போ வலிய வந்த வரனையும் விட்டு விட்டுத் திண்டாடுகிறது நாமா அண்ணாவா! என் புத்தியைச் செருப்பால் அடிக்கணும். இரண்டு வருஷத்துக்கு முந்தியே நான் கொஞ்சம் தைரியமாக நடந்து கொண்டிருந்தேனானால் இந்நேரம் ராஜலக்ஷ்மி குடியும் குடித்தனமுமாக இருப்பாள். ஜானகிக்குப் பெருத்த ஏமாற்றத்தைக் கொடுத்து, நாமும் ஏமாந்து போயாச்சு" என்று கூறி அசந்து போய் உட்கார்ந்து விட்டார் பரமேசுவரன்.

"எங்க அண்ணாவையும் நாகராஜனையும் நான் சும்மா விடப்போறதில்லை. இன்னிக்குச் சாயங்காலம் இரண்டிலே ஒண்ணு தீர்த்துக் கொண்டு வந்துடறேன்!"—பெருத்த ஏமாற்றத்தினிடையே வெளிப்பட்டன இந்த வார்த்தைகள் பார்வதியின் இதயத்தின் அடித்தலத்திலிருந்து. ஆனால் பரமேசுவரனுக்கு நம்பிக்கை போய்விட்டது.

தன் அம்மாவும், அப்பாவும் பேசிக் கொண்ட ஒவ்வொரு வார்த்தையும் மாடியில் ஏதோ ஒரு புஸ்தகத்தை வைத்துக் கொண்டு படித்துக் கொண்டிருந்த ராஜலக்ஷ்மியின் காதுகளில் விழுந்தன. நாகராஜனும் அவன் தகப்பனாரும் சொன்ன பதிலைக் கேட்டு அவள் மாத்திரம் ஏமாறவும் இல்லை. துக்கப்படவும் இல்லை. ஆனால் தன் தகப்பனாருக்கும் தாயாருக்கும் இடையே நடந்த சம்பாஷணையின் மத்தியில் அடிபட்ட அந்த இரண்டு வார்த்தைகள் — ஜானகி, ராகவன் — அவை இரண்டும் அவள் மனத்திரையில் பழைய சம்பவங்களைக் கொண்டு வந்து நிறுத்தின.

பழைய ஞாபகங்கள் அவள் எண்ணக் கடலில் அலையலையாக எழ எழ அவள் கண்களில் நீர் முத்துக்கள் கோத்து நின்றன.

## 2

ராஜலக்ஷ்மிக்கு அப்போது சுமார் ஆறு வயதிருக்கும். பார்வதியும் பரமேஸ்வரனும் ரொம்பப் பெரிய பணக்காரராய் இல்லாமற் போனாலும் தாங்கள் ஒரே பெண்ணான ராஜலக்ஷ்மியை மிகவும் செல்லமாக வளர்த்து வந்தனர்.

அந்தருணத்தில்தான் ஊரிலிருந்து படிப்பிற்காகச் சென்னைக்கு வந்து சேர்ந்தான் நாகராஜன். நாகராஜன் பார்வதியின் அண்ணா பிள்ளை. பார்வதியின் அண்ணா நாராயணன் — ஒரு குட்டி மிராசுதார். சுமார் பத்து வேலி நிலம் இருந்தது. தன் மகன் பட்டணத்தில் படிக்க வேண்டும் என்பதற்காக அவனைத் தன் தங்கை வீட்டில் கொண்டு விட்டுச் சென்றான். ராஜலக்ஷ்மி பிறந்த தினத்திலிருந்தே பார்வதியின் மனத்தில் ஒரு சபலம் ஏற்பட்டிருந்தது — அவனைத் தன் அண்ணா பிள்ளை நாகராஜனுக்கே கொடுத்து விடவேண்டும் என்று. இந்த எண்ணத்தைப் பல தடவை

களில் அவன் தன் அண்ணாவிடமும் மன்னியிடமும் சொன்னபோது அவர்கள் சிரித்துக் கொண்டே ஆமோதித்தனர். ஆகவே, பார்வதி நாகராஜனைத் தன் வீட்டில் வைத்துக் கொள்வதில் மிகவும் மகிழ்ச்சி யடைந்தாள். தன்னிடத்திலேயே வைத்துக் கொண்டு படிப்பும் சொல்லிக் கொடுத்து விட்டால், பிறகு நிச்சயம் நாகராஜனுக்கு வெளியே பெண் பார்க்க மாட்டார்கள் — தான் செய்த உதவியை நினைத்தாவது — ராஜலக்ஷ்மியை அவனுக்கு மணந்து கொள்வார்கள் என்று தீர்மானித்துக் கொண்டாள் பார்வதி. ஆனால் பரமேஸ்வரனுக்கோ இந்த ஏற்பாட்டில் அவ்வளவு விருப்பம் இல்லை.

"பார்வதி! நமக்கேன் இந்த வம்பெல்லாம்...... எப்பொழுதோ அவன் நம் பெண்ணைத் தன் பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறான் என்பதற்காக இப்பொழுது பிடித்தே பையனை நம் வீட்டில் கொண்டு வந்து வைத்துக் கொள்ள வேண்டுமா! உன் அண்ணா 'ஒரு மாதிரி' பேர்வழி. நாம் ஏழைகள். ஏதோ கண் மறைவாகக் கூழோ கஞ்சியோ குடித்துக்கொண்டிருப்போம். அந்தப் பையன் இங்கு வந்தால்..." என்று இழுத்தவாறு கூறினார்.

பார்வதி, "எங்க அண்ணாவுக்கு என்னிடம் எவ்வளவு நம்பிக்கை இருந்தால் நாகராஜனை இங்கு அனுப்ப ஒப்புக் கொள்வான்! உங்களுக்கு ஒரு கவலையும் வேண்டாம்" என்றாள்.

நாகராஜன் பார்வதியின் வீட்டிற்கு வந்து சேர்ந்தான். அவனுக்கு அப்போது வயது பன்னிரண்டு. அவனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தனர். அவன் படிக்க ஆரம்பித்தான்.

ஏனோ பரமேஸ்வரனுக்கு நாகராஜனைக் கண்டால் அவ்வளவாகப் பிடிக்கவில்லை. தன் பெண்ணை அவனுக்குக் கொடுப்பதைக்கூட அவன் விரும்பவில்லை. ராஜலக்ஷ்மிக்கும் நாகராஜனிடம் அவ்வளவாக ஒட்டுதல் ஏற்படவில்லை.

நாகராஜன் வந்து இரண்டு வருஷங்கள் ஆகி இருக்கும். திடுமென ஒரு நாள் பரமேஸ்வரனுக்கு நாகபுரியில் இருந்து ஒரு தந்தி வந்தது. நாகபுரியில் பரமேஸ்வரனின் ஒன்றுவிட்ட அக்கா ஒருத்தி யிருந்தாள். அவளுடைய கணவன் திடீர் என்று டைபாயிட் ஜுரத்தில் இறந்து விட்டான் என்று அதில் கண்டிருந்தது.

சிறு வயதில் பரமேஸ்வரன் தன் பெரியப்பா வீட்டில் இருந்து வாசித்து வந்தான். அப்போது அவனுடைய அக்கா ஜானகி அவனை மிகவும் வாத்சல்யத்துடன் நடத்தினாள். ஆகவே அவளுக்கு இப்போது இப்படிப்பட்ட கஷ்டம் வந்துவிடவே, பரமேஸ்வரன் உடனே நாகபுரிக்குச் சென்று அவளை அழைத்து வந்தான். அவளுக்குத் தாய் தந்தையர் யாரும் இல்லை. கிராமத்தில் மைத்துனன் மாத்திரம் ஒருவர் இருந்தார். ஆகவே அவளைத் தன் வீட்டிலேயே வைத்துக் கொள்ளத் திட்டமிட்டான் பரமேஸ்வரன். பரமேஸ்வரனின் பெருந்தன்மையைக் கண்டு அவள் மிகவும் அதிசயப்பட்டாள்.

அவளுக்கு ஒரே மகன் ராகவன்.

சென்னை வந்ததும் அவனையும் பள்ளிக் கூடத்தில் சேர்த்தான் பரமேஸ்வரன். நிராதரவாக விடப்பட்ட தன்னை அழைத்து வந்து தனக்கும் தன் மகனுக்கும் அடைக்கலம் அளித்த பரமேஸ்வரனின் குடும்பத்துக்குத் தன்னாலான ஒத்தாசையைச் செய்து வந்தாள் ஜானகி. பரமேஸ்வரனையும் பார்வதியையும் பலவகையில் திருப்திப் படுத்த முயன்றாள் ஜானகி. ஆனால் இத்தனை நாள் சுதந்திரமாக வாழ்ந்துவிட்டு, இப்பொழுது நாத்தனார் ஸ்தானத்தில் ஒருத்தி தன் வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டிருப்பது பார்வதிக்குப் பிடிக்கவில்லை. ஜானகியிடமும் அவள் பிள்ளை ராகவனிடமும் அவள் வெறுப்புக் கொள்ள வேறு சில காரணங்களும் முளைத்தன.

ராகவன் நாகராஜனைக் காட்டிலும் நன்றாகப் படித்தான். ராகவனின் படிப்பு, குணம், நடத்தை எல்லாவற்றையும் கண்டு பரமேஸ்வரனுக்கு அவனிடம் ஒரு அலாதி பற்று ஏற்பட்டுவிட்டது. அவன் மனத்தில் 'ராகவன் தான் ராஜலக்ஷ்மிக்கு ஏற்றவன்—நாகராஜன் அல்ல' என்ற எண்ணம் தோன்றி யிருப்பதையும் பார்வதி புரியாமல் போய்விடவில்லை. மேலும், ராஜலக்ஷ்மிக்கும் ராகவனிடமும் ஜானகியிடமும் ஏற்பட்டிருந்த அலாதி அன்பு வேறு பார்வதியின் மனக்கலக்கத்துக்குக் காரணமாக இருந்தது.

ராஜலக்ஷ்மி நாகராஜனை எவ்வளவுக் கெவ்வளவு வெறுத்தாளோ அவ்வளவுக் கவ்வளவு ராகவனை விரும்பினாள். ராஜலக்ஷ்மியின் பிஞ்சு உள்ளத்திலே ராகவன் நிரம்பி நின்று விட்டான். இது எதில் கொண்டுபோய் விடுமோ என்று அஞ்சிய பார்வதி ராஜலக்ஷ்மியை மறைவில் எவ்வளவு அடித்தும், திட்டியும் கூட ராஜலக்ஷ்மி திரும்பத் திரும்ப ராகவனுடன் தான் விளையாடுவாள், பேசுவாள்,—அவன்தான் அவளுக்குப் பிரபஞ்சமாகத் தோன்றினான்.

சென்னைக்கு வந்த புதிதில் ஜானகி—பார்வதியின் திட்டத்தை அறியாமல்—ராஜலக்ஷ்மியைக் கண்டதும் ராகவனுக்கு அவளைப் பிணைத்துவிட வேண்டும் என்று நினைத்தாள். ஆனால் பார்வதியின் திட்டத்தை அறிந்த பிறகு ஜானகி தன் விருப்பத்தை வாய்விட்டுச் சொல்லவில்லை.



தங்கள் குடும்ப வாழ்க்கையின் அமைதியையே கலைக்க வந்துவிட்டதாக, ஜானகியையும் ராகவனையும் பற்றி நினைத்தாள் பார்வதி. இதன் காரணமாக கணவன் மனைவி இருவரிடையேயும் அடிக்கடி சண்டை ஏற்பட்டது. இதையறிந்த ஜானகி மிகவும் மனம் குன்றிப்போனாள். மெதுவாகத் தான் அந்தக் குடும்பத்தில் இருந்து வெளியேறி விட வேண்டும் என்று அவள் முடிவு செய்து கொண்டாள். தன் பிள்ளையின் படிப்பை மாத்திரம் எஸ். எஸ். எல். ஸி. வரையிலாவது முடித்து வைக்கும்படி பரமேஸ்வரனை மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு அவள் தன்னுடைய மைத்துனன் வீட்டில் போய் ஒண்டிக் கொண்டாள்.

வயது ஆக ஆக ராஜலக்ஷ்மிக்கும் ராகவனுக்கும் இடையே எழுந்த பாசம் உறுதிப் பட்டது. ராகவனை விட்டு ராஜலக்ஷ்மி பிரிந்திருக்க மாட்டாள்; ராஜலக்ஷ்மி இருக்கும் இடத்தில் தான் ராகவனைப் பார்க்கலாம். ஆனால் இவர்களுடைய நேசப் பான்மை பார்வதிக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை.

ராகவன் எஸ். எஸ். எல். ஸியில் தேறினான். மைசூரில் ஒரு 'பிரைவேட்' கம்பெனியில் அவனுக்கு உத்தியோகம் கிடைத்தது. அவன் அங்கு உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டு போய்விட்டான்.

இரண்டு வருஷங்கள் ஓடிவிட்டன. ஜானகிக்கு நப்பாசை கேட்கவில்லை. ஒரு சமயம் சென்னைக்கு வந்திருந்தவள், வெட்கத்தை விட்டு, ராஜலக்ஷ்மியை ராகவனுக்குக் கொடுக்கும்படி பார்வதியையே கேட்டு விட்டாள். ஆனால் அவள் கண்டிப்பாக முடியாதென்று கூறிவிட்டாள். அவளுடைய தீர்மானத்தையறிந்த ஜானகி மிகவும் வருந்தினாள். ராஜலக்ஷ்மியின் உள்ளமே விண்டு போயிற்று.

மகனுடன் மைசூருக்குச் சென்ற ஜானகி அவனுக்கு அங்கேயே ஒரு வரன் பார்த்து ஏற்பாடு செய்தாள். பரமேஸ்வரனுக்கு முகூர்த்தப் பத்திரிகையும் வந்தது. ஆனால் பார்வதி தன் கணவன் அந்தக் கல்யாணத்திற்குக் கூடப் போகக்கூடாது என்று தடுத்து விட்டாள். பரமேஸ்வரனுக்கும் ராஜலக்ஷ்மிக்கும் இது வாழ்க்கையில் பெருத்த ஏமாற்றத்தை யளித்தது.

நாகராஜன் ஹானர்ஸில் படித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய பெற்றோர் சென்னையிலேயே வந்து குடியேறினர். அவன் ஹானர்ஸ் பரீக்ஷை முடிந்ததும் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்ய முடிவு கட்டிக் கொண்டிருந்தாள் பார்வதி. ஆனால் இப்பொழுது அவர்கள் பிடி கொடுத்துப் பதில் சொல்லவில்லை.

## 3

பெருகி வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் ராஜலக்ஷ்மி. நாகராஜன் தன்னை மணக்க மறுத்துவிட்டான் என்பது அவள் குறையல்ல. தன் அத்தான் ராகவனை மணந்து தான் எப்படியல்லாமோ வாழ்க்கை நடத்தப் போகிறோம் என்று மனக் கோட்டை கட்டி வந்தாள் அவள். இப்போது வேறு ஒரு பெண் ராகவனின் மனைவி ஸ்தானத்தை ஏற்று கொண்டு அவனுடன் இன்பம் அனுபவிப்பதை நினைக்க நினைக்க அவள் உள்ளம் குமுறியது.

மணி மூன்றடித்ததும் பார்வதி தன் அண்ணன் வீட்டுக்குச் சென்றாள். காலையில் பரமேஸ்வரனிடம் கூறிய பதிலையே தான் இப்போது அவள் அண்ணன் அவளிடமும் கூறினான்.

சோர்ந்த உள்ளத்துடன் – பெருத்த ஏமாற்றத்துடன் – வீடு திரும்பிய அவளிடம் அவளுடைய இரண்டாவது மகன் – எட்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த — கிருஷ்ணமூர்த்தி — ஓடிச் சென்று, "அம்மா! அம்மா! என் கிளாஸிலே கோபுன்னு ஒரு பையன் படிக்கிறான் அம்மா. அவனுக்கு லீலான்னு ஒரு அக்கா இருக்கா அம்மா. அவளை நம்ம நாகராஜன் அம்மாஞ்சிக்குக் கொடுக்கப் போறாளாம்.........நம்ப மாமா, அம்மாஞ்சி, மாமி எல்லாரும் நேத்து லீலாவைப் போய்ப் பார்த்தாளாம்" என்றான்.

பார்வதியின் தலை 'கிர்' ரென்று சுழன்றது. தங்கள் ராஜலக்ஷ்மியைத் தட்டிக் கழிப்பதற்குக்காரணம் இப்போது அவர்களுக்குப் புரிந்து விட்டது. 'இத்தனை நாள் அவனை வைத்துக் கொண்டு படிப்புச் சொல்லிக் கொடுத்துப் பெரியவனாக்கியதற்கு இதுதானா பலன்! நாகராஜனை நம்பி, காதில் விழாத குறையாக ஜானகி கெஞ்சிக் கேட்டபோது ராஜலக்ஷ்மியை ராகவனுக்குக் கொடுக்காமல் போய் விட்டோம்; அவனுக்கும் இப்போது மணமாகி விட்டது. இனி ராஜலக்ஷ்மிக்கு எங்கே வரன் தேடுவது!......புது இடமானால் நிறைய பணம் செலவழிக்க வேண்டுமே. அவ்வளவுக்குப் பணம்!' என்று ஒரேயடியாகக் குமுறித் தவித்தது பார்வதியின் உள்ளம். இப்படிச் சில நாட்கள் சென்றன.

அன்று சனிக்கிழமை. சமையற்கட்டில் ஏதோ வேலையாக இருந்தாள் பார்வதி.

தெருவில் மோட்டார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அம்மாவுக்கு ஒத்தாசை செய்து கொண்டிருந்த ராஜலக்ஷ்மி வாசற் பக்கம் எட்டிப்



மே மீ 2வ சனிக்கிழமை மாலை சென்னை சௌந்தர்ய மகாலில் மதராஸ் தொலை பேசும் (டெலிபோன்) ஸ்தாபன உத்தியோகச் சங்கத்தார் "புதிய பாதை" என்னும் சமூக சீர்திருத்த இலட்சியம் வாய்ந்த தமிழ் நாடகத்தைச் சிறப்பாக நடத்தினார்கள். மேற்படி நாடகத்தை எழுதியவரும், கதாநாயகனாக நடித்தவரும், நாடகப் பயிற்சி அளித்தவருமான ஸ்ரீ ராயப்பன் அவர்களை இங்கே படத்தில் காணலாம். தலைமை வகித்த "கல்கி" ஆசிரியர் நாடகக் கதையின் அமைப்பையும், வசனங்களின் விருவிருப்பையும், நடிகர்களின் நடிப்புத் திறனையும் வெகுவாகப் பாராட்டிப் பேசினார்.



பார்த்தாள். ஒரு அழகான சிறிய பச்சை நிற மோட்டாரிலிருந்து ராகவனும் ஜானகியும் இறங்கிக் கொண்டிருந்தனர். மோட்டாரை ஓட்டி வந்தவனே ராகவன்தான். நான்கு வருஷங்களுக்குப் பிறகு அவனைப் பார்த்த ராஜலக்ஷ்மிக்கு அடையாளமே தெரியவில்லை. வைத்தவிழி வாங்காமல் அவனையே பார்த்து நின்றாள் ராஜலக்ஷ்மி.

"வாங்கோ அத்தான்! வாங்கோ அத்தை!" என குழற இந்த வார்த்தைகள் அவள் வாயிலிருந்து வெளி வந்தன. அதே சமயம் தன் அத்தான் தன் மனைவியை ஏன் அழைத்து வரவில்லை என்ற கேள்வியும் அவள் மனத்தில் எழாமல் போகவில்லை.

இதற்குள் சமையற்கட்டில் இருந்து வெளியே வந்த பார்வதி, "வாங்கோ அக்கா! வாப்பா ராகவா!" என்று கூறி வரவேற்றாள். அவளுடைய இந்தச் சுமுக வரவேற்பு ஜானகி, ராகவன் இருவருக்கும் பெருத்த ஆச்சரியத்தை அளித்தது.

ராகவன் மாடிக்குச் சென்றான்.

"உன் கை நல்ல கை பார்வதி! என் பிள்ளையை வைத்துக் கொண்டு மூணு வருஷம் காப்பாற்றினாய். படிப்பு முடிஞ்ச உடனேயே அவனுக்கு உத்தியோகமும் கிடைச்சது.... இவன் உழைப்பையும் சாமர்த்தியத்தையும் கண்டு இவன் கம்பெனி முதலாளி இவன் பதவியைப் படிப்படியாக உயர்த்தி வந்து இப்போ இவனை அந்தக் கம்பெனிக்கே மானேஜராக்கியிருக்கிறார். எல்லாம் உன் கைராசிதான்......" என்றாள் ஜானகி நன்றி ததும்பும் முகத்துடன்.

இவை அத்தனையையும் கேட்ட பார்வதியின் மனம் என்னமோ செய்தது.

"ராஜலக்ஷ்மிக்கு எப்போ கல்யாணம் பண்ணப் போறே!......" என்று சற்றுத் துயரம் தோய்ந்த குரலில் கேட்டாள் ஜானகி.

"அக்கா! நான் பெருத்த அபாக்கியசாலி. ஏதோ ஒரு கோணல் எண்ணத்தை மனசிலே வச்சிண்டு அன்னிக்கு நீங்க எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக்கொண்டும் ராஜலக்ஷ்மியை ராகவனுக்குக் கொடுக்க மாட்டேன் என்றேன். எங்க அண்ணா பிள்ளை அவளைப் பண்ணிப்பான் என்று நினைத்தேன். அவன் இந்த வருஷம் ஹானர்ஸ் பரீக்ஷை எழுதி இருக்கான். இப்போ எங்க அண்ணா அவனுக்கு ஒரு பெரிய இடத்திலே, நிறைய வரதக்ஷிணையோடு கூட, ஒரு பெண்ணைப் பார்க்கிறார். செய்துக்கிறவரையில்தான் மனுஷா......என் முட்டாள் தனத்தாலே, ராஜலக்ஷ்மி எவ்வளவோ ஆசைப்பட்டும் அவளை உங்க ராகவனுக்குக் கொடுக்க மாட்டேன்னுட்டேன் ...... இப்போ என்ன பண்றது என்று புரியலை......" இவ்வாறு கண்களில் நீர் முட்டி நிற்கச் சொன்னாள் பார்வதி.

"இப்பவும் எனக்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லை. ராஜலக்ஷ்மியை ராகவனுக்கு நீ கொடுக்கிறதாக இருந்தால் நான் பண்ணிக்கத் தயார்."

பார்வதியின் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன. "என்ன சொல்றேள் நீங்க! ராகவனுக்கு ஒரு கல்யாணம் ஆகி இருக்கும் போது..." என்று இழுத்தாள்.

"ஓ! உங்களுக்கு விஷயமே தெரியாதா! அவனுக்குக் கல்யாணமே ஆகவில்லை. முன்னே மைதுரிலே ஒரு பெண்ணைப் பார்த்து, எல்லா ஏற்பாடும் பண்ணி பத்திரிகை யெல்லாம் கூடப் போட்டோம்......ஆனால் கல்யாணத்துக்கு இரண்டு நாள் முன் பெண் வீட்டில் ஏதோ அசந்தர்ப்பம் ஏற்பட்டு கல்யாணத்தை நிறுத்தும்படியாக ஆகிவிட்டது. ......விதி ராஜலக்ஷ்மியையும் ராகவனையும் சேர்த்திருக்கிறபோது, வேறு விதமாக எப்படி முடியும்! ...... செலவு எல்லாத்தையும் நானே ஏத்துக்கறேன்......பரமேஸ்வரன் வந்தவுடனே முகூர்த்தத் தேதியை வைக்கச் சொல்......" என்றாள் ஜானகி.

பார்வதிக்குத் இந்த உலகத்தில் தான் இருப்பதாகவே தோன்றவில்லை. ராஜலக்ஷ்மியின் தேகம் எல்லாம் புல்லரித்தது.

* * *

அதே சமயத்தில் கிருஷ்ணமூர்த்தி பெருமூச்சு வாங்க ஓடிவந்து, "அம்மா! அம்மா! நம்ப நாகராஜன் அம்மாஞ்சி ஹானர்ஸ் பரீட்சையிலே 'கோட்'. இன்னிக்குத்தான் ரிஸல்ட் வந்திருக்கு. பேப்பரிலே அம்மாஞ்சியினுடைய நம்பரையே காணோம்......" என்றான்.

அரை மணிக்கெல்லாம் ஆபீஸிலிருந்து வீடு திரும்பிய பரமேஸ்வரன் சமையல் அறையில் நுழைந்து கொண்டே, "பார்வதி! உங்க அண்ணா ராஜலக்ஷ்மியை நாகராஜனுக்குப் பண்ணிக்க சம்மதிச்சுட்டான்......" என்று சொல்லிக் கொண்டே வந்தவர் ஜானகியைப் பார்த்ததும் பெருத்த ஆச்சரியத்தில் ஆழ்ந்தார்.

"நான் ஒன்றும் என் ராஜலக்ஷ்மியை நாகராஜனுக்குக் கொடுக்கப் போகிறதில்லை. தன் பிள்ளை ஹானர்ஸிலே 'பெயில்' ஆகிவிட்டதும் என் பெண்ணைப் பண்ணிக்க வரான் எங்க அண்ணா. ரிஸல்ட் வராத முந்தி 'பெரிய' இடமாகப் பார்த்தான். எங்க ராஜலக்ஷ்மியை நான் ராகவனுக்குத்தான் கொடுக்கப் போகிறேன். அவனுக்காகப் பிறந்தவள்தான் அவள்" என்றாள் பார்வதி தன் குரலில் உறுதி தொனிக்க.

விஷயம் ஒன்றும் விளங்காமல் திரு திரு என்று விழித்தார் பரமேஸ்வரன்!




## மைசூர் கவர்ன்மெண்ட் சில்க் வீவிங் பாக்டரியின் பட்டு நெசவுகள்

பட்டு நூல் நெசவின் பளபளப்பும், உழைப்பும் உறுதியும் கொண்ட அவற்றின் சிறப்பும், சுத்தமான பட்டு நூல் தயாரிப்புகளுக்கு விசேஷ வனப்பை அளிக்கிறது. உண்மையில் அது உங்களிடம் இருந்தால் நீங்கள் மகிழ்ச்சியால் பூரித்துப் போவீர்கள்.

**ஜார்ஜெட், க்ரீப், ஜார்ஜெட்டும் க்ரீப்பும் கலந்த புடவைகள், ஸிப்பான், ஷர்ட்டிங்குகள் கோட்டிங்குகள் முதலியன.**

*தயாரிப்பவர்கள் :*

**கவர்ன்மெண்ட் சில்க் பாக்டரி, மைசூர்**

## தபால் மூலம் இலவசக் கல்வி போதனை

**"B Group"**

*1.* மெட்ரிகுலேஷன். *2.* S. S. L. C. *3.* தமிழ் வித்வான். *4.* E. S. L. C. (தமிழ் எட்டாம் வகுப்பு) *5.* கைத்தறி நெசவு. *6.* ஹிந்தி (53 ஆகஸ்ட்). *7.* ஹோமியோபதி *8.* விவசாயம். *9.* பேசிக் ஆங்கிலம். (ஆரம்ப ஆங்கில பாட முதல் 5-ம் பாரத்திற் குறிய பாடங்கள் வரை) முதலிய 1953-1954-ம் வருட சர்க்கார் பரீட்சைகளுக்கு தபால் மூலம் மாதக் கட்டணம், வகுப்புக் கட்டணமின்றி, "இலவசமாக" பிரதி வாரமும் பாடங்கள் அனுப்பி பயிற்சி அளிக்கப்படும். மேலும் சர்க்கார் பரீட்சையின் வெற்றிக்கும், மாணவர்களுக்கு தவறாது பாடங்கள் அனுப்பி பயிற்சி அளிக்கப்படுமென்பதற்கும் உத்திரவாதப் பத்திரம் அளிக்கப்படும். மேற்கண்டவாறு எம்மால் செய்யத் தவறின் மாணவர்களின் கஷ்ட நஷ்டங்களுக்கு நாங்கள் பொறுப்பு என்பதை இப்பத்திரம் உறுதிப் படுத்துகிறது. ஆகவே 27-5-53 முதல் ஆரம்பமாகும். (B. Group) இவ் வகுப்புகளின் முழு விவரங்களுக்கு உடன் 2 ஒரு அணா ஸ்டாம்புடன் எழுதி சேர்த்துக் கொள்ளவும்.

குறிப்பு :—*11-3-53* முதல் ஆரம்பமான "A" Group வகுப்புகளில் பல நூறு மாணவர்கள் சேர்ந்து பயிற்சி அடைந்து வருகிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் பல்லாயிர மாணவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 27-5-53-ம் தேதி முதல் "B" குரூப் ஆரம்பிக்கப்படும். மெட்ரிகுலேஷன் & ஹிந்தி பரீட்சைகளில் தேறிய மாணவர்கள் தபால் தந்தி இலாகா வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவர்.

○●○

**ஸ்ரீ முருகன் டுடோரியல் இன்ஸ்டிடியூட்**

**ரிஷிவந்தியம் P. O. :: (Via) திருக்கோவிலூர் S. A. Dt.**




This car really goes places

PLEASURE - PILGRIMAGE - PICNICS this sturdy little Fiat 500-C Convertible Saloon can take you in comfort anywhere you choose

FIAT '500-C' CONVERTIBLE SALOON

THE ONLY CAR THAT GIVES 50 MILES A GALLON

THE PREMIER AUTOMOBILES LTD.

Factory: Agra Road, Kurla.
Head Office: Construction House
Ballard Estate, Bombay.





DEALERS:

BHARAT MOTORS, MOUNT ROAD, MADRAS




# அன்பு வெள்ளம்

**பூவை**

ஆவணத்தாங் கோட்டை மணியக்காரர் வீட்டுத் திண்ணையில் தொங்கிக் கொண்டிருந்த காலண்டரில் அன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை என்று நாள் காட்டிக் கொண்டிருந்தது. அந்த ஞாயிற்றுக்கிழமையைத்தானே பூவம்மாவும் ஆசை துள்ள, ஆனந்தம் பொங்க எதிர்நோக்கிக் கொண்டிருந்தாள்! அன்றுதான் கடல் கடந்து சென்ற மருதமுத்து பிறந்த மண்ணை மிதிப்பதாகத் தபால் போட்டிருந்தான்.

தாய்க்கும் மகளுக்கும் நாளெல்லாம் வரப்போகும் மருதமுத்துவைப் பற்றிய பேச்சுத்தான் மூச்சாக இருந்தது. இருக்காதா பின்னே...!

பூவம்மாவுக்கு மகிழ்ச்சி நிலை கொள்ளவில்லை. அடிக்கொருதரம் அவள் மனம் "அண்ணாச்சி—அண்ணாச்சி" என்று பஜனை பாடிக் கொண்டிருந்தது. அவள் இதயத் திரையில் மனம் அவளது உடன் பிறந்தானைப் படமாக வரைந்து காட்டிக் கொண்டிருந்தது.

"பூவம்மா, ஓடிவா இங்கே!"

"அண்ணாச்சி வந்துடுச்சா, ஆயா!" என்று கேட்டவாறே தோட்டத்தைத் தாண்டி வெளியே வந்தாள் பூவம்மா. வாசலில் மாட்டு வண்டி நின்றது. துள்ளும் உள்ளத்துடன் ஓடினாள்.

ஆனால் அவள் தன் அண்ணனைத் தரிசிக்கவில்லை. யாரோ ஒரு இளைஞன் காட்சி அளித்தான். அவனது விழிகள் பூவம்மாவைச் சுற்றி முற்றுகை யிட்டன. அவள் பூவிழிகள் தரையை நோக்கித் தாழ்ந்தன.

"பூவம்மா, உன் அண்ணன் அடுத்த மாசம் தான் வருகிறானாம். இப்ப இவங்களோட அவன் வர முடியல்லியாம். கப்பல் பதிவுச் சீட்டுக்கு உத்தரவு ஆகல்லியாம். இவங்க கிட்ட சேதி சொல்லி அனுப்பிச்சிருக்கு......" என்று கிழவி மகளிடம் விஷயத்தை ஒருவாறு விளக்கினாள். உடனே என்ன நினைத்துக் கொண்டாளோ, "தங்கச்சி, இவங்களை உனக்கு நெனைப்பு இருக்குதா, என்ன!" என்று கேட்டாள் கிழம்.

"ஓ, தெரியுமே, இவங்களை! நம்ம மருதமுத்து அண்ணாச்சியின் உசிருக்கு உசிராச்சே இந்த மச்சான்" என்று சொல்லி விட்டு, அவள் கண்ணோட்டத்தைக் கீழே தாழ்த்திக் கொண்டாள்.

மலர் என்றால் அதன் மணம் அத்துடன் இரண்டறக் கலந்து தானே இருக்கும்! அப்படித்தான் பூவம்மாவின் இளம் மனதில் அந்தப் பழைய சம்பவங்கள் ஒன்றி விட்டிருந்தன.

அப்பொழுது பூவம்மா பருவத்தின் எல்லைக் கோட்டில் தழைத்து நின்றாள். 'பூவோ, பூவு' என்று அவள் தெருவோடு பூ விற்றுக் கொண்டு செல்லும் போது பூவின் மணத்தோடு அவள் குரலின் இனிமையும் சேர்ந்து கொள்ளும். அவள் பூச்சரம் தொடுத்துத் தந்து காதலில் வெற்றி கண்ட பூவையர்கள் பலர் உண்டு; அவள் கையில் வாங்கிய பூவைக் குழந்தைகளுக்குச் சூட்டிப் பெருகி வாழ்ந்த குடும்பங்கள் எத்தனையோ! அக்கம் பக்கத்திலுள்ள பூவத்தகுடி, நவராத்திரி, நகரம் பங்குனி உத்தரம், சிலட்டூர் மாரியம்மன் திருவிழா முதலியவற்றில் எல்லாம் அவள் பூக்களின் மணம்தான் தலைமை வகிக்கும் என்றால் பின் கேட்பானேன்!

ஒரு நாள், "தங்கச்சி, இன்றைக்கு இரவு கோவலன் நாடகம் நடக்குது. என்னோட இன்னொரு ஆளுக்கும் சேர்த்துச் சோறாக்கச் சொல்லு

"ஆயாகிட்டே" என்றான் மருதமுத்து. பூவம்மாவுக்கு 'அந்த இன்னொரு ஆள்' யாரென்று துப்புத் துலங்கவில்லை. மெள்ளக் கள்ள விழிப்பார்வையை கடைக்கண் தூது விட்டாள். வாட்ட சாட்டமான இளம் வயசு ஆண் பிள்ளை. அவன் பூபாலன்.

கையெழுத்து மறைந்த கருக்கில் தமையனுக்கும் பூபாலனுக்கும் உணவு படைத்தாள். தானும் உண்டாள். எல்லோருமாக நாடகத்துக்கு வண்டி கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள். வழியெல்லாம் 'மச்சான்' பாட்டுப்பாடி பூபாலனைக் கலாட்டா செய்தான் மருதமுத்து. ஆனால் அந்த மச்சான் தன்னைக் கணத்துக்குக் கணம் விழுங்கி விடுவதைப் போலப் பார்த்துத் தீர்த்த விஷமத்தை மட்டும் பூவம்மா ஒருகாலும் மறக்கவே மாட்டாள். நாடகம் பார்த்த போதுதான் தன் அண்ணன் 'ராஜபார்ட்' வேஷம் போட்டிருப்பது தெரிந்தது. மாதவியாக வேஷம் போட்ட பெண்ணை மாத்திரம் பூவம்மாவால் ஏனோ மறக்கக் கூட வில்லை.

நாடகம் முடிந்து வீடு திரும்புகையில், 'கோவலன்' நாடகத்தைப் பற்றிய அபிப்பிராய பரிவர்த்தனை நடந்த சமயம், மாதவியாக வந்த பெண்ணுக்குத் தான் முதல் பரிசு தந்தாள் பூவம்மா.

"பூவம்மா, சபாஷ்! அப்படிச் சொல்லு. மாதவி தானுக்கும் உனக்கு ரொம்பப் பிடிச்சது! நம்ம பூபாலன் மச்சான் அப்படின்னு யோகசாலிதான். மாதவி வேசம் போட்டது பொண்ணு இல்லே, அது நம்ப மச்சான்தான்" என்றான் மருதமுத்து.

"நெசமாவா! நம்ப மச்சானு அசல் மாதவி மாதிரியே நடிச்சாங்க! அதிசயமாத்தான் இருக்குது!" என்று சொல்லி வியப்புமேலிட நின்றாள் பூவம்மா. முன் பின் பரிச்சய மில்லாத ஒரு ஜோடி ஆண் பிள்ளையிடம் வலியப் பேச்சுக் கொடுத்ததில் நாணித் தலை குனிந்து போனாள் பூவை. பூப்போலப் புன்னகைத்த வண்ணம். அன்று பிறந்தது பூவம்மா—பூபாலன் அறிமுகம். பூபாலன் பூவம்மாவின் இதயத்தில் நிரந்தரமாக இடம் பெற்று விட்டான்.

பேச்சு மூச்சு காட்டாமல் ஒருநாள் மருதமுத்துவும் பூபாலனும் இலங்கைச் சீமையை நாடிப் புறப்பட்டார்கள். அப்பொழுது மருதமுத்து தன் தங்கையிடம் "தங்கச்சி, அக்கரைச் சீமையிலே யிருந்து திரும்பினதும் உன்னை நம்ப பூபாலன் மச்சான்கிட்டே பரிசம் போட்டுக் கண்ணாலம் கட்டிக் கொடுத்துடுறேன். அப்பாலேதான் என் கண்ணாலம்......" என்று கூறி விடை பெற்றுக் கொண்டான். தமையனின் அவ்வார்த்தைகளை அவள் எங்ஙனம் மறப்பாள்! மறக்கக்கூடிய வார்த்தைகளா அவை! அப்பொழுது விஷமப் புன்னகையினால் தன்னைப் பரிகாசம் பண்ணிய அவளது ஆசை மச்சானின் நினைவு முகத்தைத் தான் அவளால் மறக்க முடியுமா! அது மறக்கக் கூடிய முகம் அல்லவே!

"பூவம்மா!" என்று பூபாலன் அழைத்ததும் அவள் மனம் திடுக்கிட்டுப் பழைய நினைவுகளி லிருந்து மீண்டது.

"பூவம்மா. இந்தச் சாமான் எல்லாத்தையும் பத்திரமா உள்ளே எடுத்துவை. இந்தப் பணம் ஐந்நூறையும் மச்சான் மருதமுத்து உங்கிட்டே தரச் சொன்னான். இப்பவே உன் ஆயாகிட்டே பணத்தைக் கொடுத்துப் பத்திரமாக வைக்கச் சொல்லு. நான் போயிட்டு வர வெள்ளிக் கிளமை வாக்கிலே இங்கே வாரேன்..." என்றான் பூபாலன்; உதட்டில் இழையோடியது இள நகைக்



கீற்றொன்று; அவள் முகத்தில் ஆனந்தக் கனவொன்று தவம் பண்ணிக் கொண்டிருந்தது.

"நல்லா யிருக்குதுங்களே. விருந்தாளியாக வந்தவங்க கை நனைக்காம போகலாமா! நொடியிலே ஆயா சமைச்சுவிடுவாள். சாப்பிட்டு விட்டுத் தான் போகணும், மச்சான்" என்றாள் பூவம்மா குதூகலம் ஏற்றம் புரிந்த குயில் குரலில். அவள் வேண்டுதலில் உரிமை தொனித்தது.

இன்பச் சூழ்நிலையில் நாட்கள் காற்றாய்ப் பறந்தோடக் கேட்கவா வேண்டும்! பூபாலன்—பூவம்மா ஜோடிக்கு அப்பொழுது தாங்கள் இந்திர லோகத்தில் வாழ்வதாகவே பட்டது.

சூரியன் உதயம் ஆவதற்கு முன்பே எழுந்து அவன் பூஞ்செடிகளுக்கு ஏற்றத்தில் தண்ணீர் இறைப்பான்; அவள் 'பாத்தி' கட்டித் தண்ணீரைச் செடிகளுக்குப் பாய விடுவாள். களத்து மேட்டில் கதிரடிப்பான் அவன்; மாடு கட்டிப் போரடிப்பாள் அவள். சூம்பல் சேர்ந்த நெல்மணிகள் குன்றுகளாகிக் கிடக்கும்; காதலர்கள் மெய்ம் மறந்து போவார்கள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொன்மணி அல்லவா! எந்த வேலையிலும் பூபாலன் வில்லாதி வில்லன்; அவள் — பூவம்மா அவனுக்குப் பக்க பலம், உயிர்த் துணை. நிலா என்றால் அவர்களுக்கு நிலாச்சோறு உண்பது போலே. இலங்கைச் சீமையில் நூரெலியா, கந்தப்பளை முதலிய பகுதித் தேயிலைத் தோட்டங்களில் தானும் மருதமுத்துவும் உழைத்து வாழ்ந்த வாழ்வைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லுவான் அவன். அவள் திறந்த விழி மூடாமல் ஆசையாகக் கேட்டுக் கொண்டிருப்பாள்.

"பூவம்மா, நம்ம கல்யாணத்தைப் பத்தி யோசனை செஞ்சியா!"

"மச்சான், இறைத்துத் தண்ணியை வெள்ளமா கொண்டு போயிடும்! என் அண்ணாச்சி அக்கரைச் சீமையிலேருந்து வந்த கையோட நம்ப கண்ணாலத்தை முடிச்சுக்கலாம். ஊட்டி வளர்த்து



என்னை உருவாக்கின அண்ணாச்சி இல்லாம நான் கண்ணாலம் கட்டிக்க ஒப்பல்லே. பொறுத்தது பொறுத்துப்புட்டோம். அடுத்த மாசந்தான் அண்ணாச்சி வந்துடுமே. நம்ப கண்ணாலம் முடிஞ்சாத்தான் அண்ணாச்சிக்கு நல்ல மூச்சு நிலை காட்டும். ஆராருக்கும் அதுதான் செழிப்பு. என் மச்சான், சரிங்களா!...'' என்றாள் பூவம்மா.

'' பூவம்மா, உன் அண்ணாச்சிக்கு அங்கே ஏதோ தலைக்கு மேலே அவசர ஜோலியாம். சொன்ன கெடுவுக்குத் தோட்டத்திலே கங்காணி லீவு தர மாட்டேனுட்டாராம். இதோ பாரு கடுதாசியை...'' என்று சொல்லி அவளிடம் கடிதத்தைக் கொடுத்தான் பூபாலன்.

அவள் படித்தாள் :

'' அன்புள்ள தங்கச்சிக்கு.

நான் மச்சான் மூலம் சேதி சொல்லி அனுப்பின பிரகாரம் புறப்பட முடியவில்லை. லீவு கிடைக்காது போய்விட்டது. பூபாலன் மச்சானும் இங்கு புறப்படவேணும். அதற்குள் மச்சானுக்கும் உனக்கும் கல்யாணம் நடந்து முடிந்தால் சிலாக்கியம். மச்சானுக்கும் எழுதியிருக்கிறேன். நான் இல்லையென்றால் என்ன. இனி உனக்கு மச்சான் தானே சகலமும்! உங்கள் திருமணம் சிறப்பாக நடக்க நம் குலதெய்வம் காளியம்மனிடம் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன்.

மருதமுத்து ''

'' இப்ப நீ என்ன சொல்லுறே, பூவம்மா !''

'' மச்சான், நான் உங்ககிட்டே கொண்டிருக்கிற ஆசைக்கும் நோக்குக்கும் நம்ப தெய்வந்தான் சாட்சி. ஆனால், உடன் பிறந்த என் அண்ணாச்சி இல்லாம நான் கண்ணாலம் கட்டிக்கிறதுக்கு லவலேசமும் சம்மதிக்க ஏலாது. ஒரு யோசனை ஓடுது மனசிலே. நீங்க இந்தத் தடவை அக்கரைக்குப் போய்ச் சேமமாத் திரும்புங்க அண்ணாச்சியோடே. கொடியிலே நம்ப கண்ணாலம் முடிஞ்சிடும்...ஆமாங்க, அதுதான் தேவலாம்.''

என்றாள் பூவம்மா. கிழவியும் மகளுக்கு அனுசரணையாக 'ஆமாம்' போட்டாள்.

'' பூவம்மா '' என்று ஆரம்பித்த பூபாலன் பேச்சை மேலே தொடர முடியாமல் திணறினான். மறுகணம் கண்களில் நீர் வடிய அவன் நின்ற காட்சி அவளை மெய் சிலிர்க்கச் செய்தது.

'' மச்சான் ''

''............''

'' மச்சான்...''

'' பூவம்மா, உன் வைராக்கியம் இம்மியும் குறையலியே! அப்படியானா நம்ப கண்ணாலமும் நிப்பாட்டிப் போக வேண்டியதுதானுக்கும்...!''

'' என்ன மச்சான், அப்படிச் சொல்றீங்க! அண்ணாச்சியைப் புறப்படச் சொல்லி ஒரு அவசரத் தந்தி கொடுங்க. அறந்தாங்கிக்குப் போய் இப்பவே கொடுத்துவிட்டு வாங்க...''

'' பூவம்மா, உன் அண்ணாச்சியை இனி இந்தப் பிறப்பிலே காண முடியாது. எட்டு மாசங்களுக்கு முன்னாலே மருதமுத்து விஷ ஜுரம் கண்டு செத்துப் போயிடுச்சு. அந்த வேதனையைக் கௌப்பிவிட்டு உங்களையெல்லாம் வருத்தப்படுத்தி மனசு வெந்து மடியச் செய்ய எனக்கு ஒப்பாமத் தான் இத்தனை நாளாக அந்தச் சேதியைக் கமுக்கமாக மறைச்சேன். அண்ணன் மேலே இத்தனை உசிராக இருக்கிற உன் காதிலே இதை எப்படிப் போடுகிறது! புரியாமத் திகைச்சுப் போய்த்தான் ஒண்ணும் மூச்சு விடாமல் இருந்து வந்தேன். ஆனா உண்மை என்னைக்காவது தெரியத்தானே வேணும்! பூவம்மா, ஒண்ணுமட்டும் சொல்லுறேன். உன்னைக் கட்டிக்க வேணுமிங்கிற சுயநலத்தோடே நான் உன் அண்ணன் செத்ததை இதுமட்டும் மறைக்கல்லே என்கிற மட்டும் காளி ஆத்தா ஆணையாச் சொல்லுறேன்...பூவம்மா...'' என்று மேற்கொண்டு தொடர முடியாதவனாக பூபாலன் பொருமிக் கொண்டு சிலையாக நின்றான்.

'' ஐயோ மகனே, மருதமுத்து !'' என்று பெற்றவள், கிழவி புலம்பினாள் ; '' ஐயோ அண்ணாச்சி !'' என்று ஓலமிட்டாள் உடன்பிறந்தாள்.

அப்பொழுது மூன்று உள்ளங்கள் சுக்கல் சுக்கலாகச் சிதறி வெடித்துக் கொண்டிருந்தன.

'' அப்படின்னா இது பரியந்தம் எனக்கு வந்த கடுதாசி, அன்பிக்கு அண்ணாச்சி தந்ததாகச் சொல்லிக் கொடுத்த பணம் எல்லாம்...'' என்று கேட்டாள் பூவம்மா விம்மிக் கொண்டு.

'' எல்லாம் நான் அனுப்பிய கடுதாசியும் என் பணமுந்தான்...'' என்றான் பூபாலன் குமுறிப் புரண்ட சோகக் குரலில்.

என்ன எண்ணினாளோ, பூவம்மா, உள்ளே ஓடித் திரும்புகையில் அவள் கையில் அன்று பூபாலன் கொடுத்த அத்தனை பண நோட்டுக்களும், அத்தனை சாமான்களும் இருந்தன.

'' மச்சான், என்னை மன்னிச்சிடுங்க. இந்தப் பணம், சாமான் எல்லாத்தையும் நீங்க எடுத்துக்கங்க. என் கனவு சிதைஞ்சு போச்சு. என் கூடப் பிறந்த அண்ணாச்சி செத்தப்புறம் இனி எனக்கு இந்தப் பூலோகத்திலே வேறே எதுவும் கிடையாது. நீங்க என்னை மறந்துவிடுங்க. நான் உங்களுக்கு வாழ்க்கைப்படக் கொடுத்து வைக்காத பாவி ஆகிவிட்டேன்'' என்று பூவம்மா கெஞ்சலாகக் கதறினாள்.

''பூவம்மா, இந்தத் துக்க சமயத்திலே நான் உங்கிட்டே வேறே ஒண்ணையும் வேண்டல்லே. ஆனா இந்த என் கடைசி ஆசைக்காவதும் நீ இடங் கொடு. இந்தப் பணம், சாமான் எல்லாத்தையும் நீதான் வச்சுக்க வேணும். உங்கிட்டே நான் கொண்ட அன்புக்கு இது ஒண்ணுதானே இனி




பாகவதர் :—நேற்று என் கச்சேரியிலே என் பக்கத்தில் நான்குபேர்கள் ஆனந்தமாக 'அசோகா' பாக்கை வாயில் போட்டுக் கொண்டு அசோகாவின் மகிமையைப் பற்றிப் பேசிண்டு இருந்தா. பாருங்கோ, கச்சேரியை நிறுத்தி விட்டு நானும் அவர்களுடன் பேசணும்போல ஆவலாக இருந்தது. நீங்கள் பார்த்தேளோ!

ரசிகர் :— அடாடா! நான் கச்சேரியையே கவனிச்சுண்டு இருந்து விட்டேன். அது காதில் விழுவில்லே.

எனக்கு ஆறுதல்! மறுக்காம எடுத்துக் கொள். மறுத்தா நான் மனசு உடைஞ்சு பித்துப் பிடிக்கப் போயிடுவேன்..." என்று சொல்லி விட்டு பூபாலன் இமைப் பொழுதில் அங்கிருந்து மறைந்தான்.

அத்தனை சாமான்களும், அத்தனை பணமும் பூவம்மாவின் முன் சுழன்றோடின!

"காளி ஆத்தா, இதுதான் உன் சோதனையா! என் அண்ணாச்சி இறந்த சேதி காதுக்கு எட்டின மூணும் நானே என் ஆயா உசிரையும் போக்கடிச்சிட்டியே ஐயையோ! தெய்வமே......"

ஆறுடன் ஆறாக நின்றாள் பூவம்மா. அவள் மனசில் எரிமலை கனன்றது; சுழிப் புயல் மூண்டெழுந்தது; துயரப் பிரளயம் அணை மீறியது. அவள் விம்மினாள்; அழுதாள்; புரண்டாள். அவள் தனி மரமானாள். உடன் பிறந்த அண்ணன் சென்ற விதி வழியே பெற்றவளையும் பறிகொடுத்து விட்டாள் அவள். மகனின் சாவு தாயையும் சாகடித்தது. பூவம்மா சாகாமல் செத்துக் கொண்டிருந்தாள், பாவம்!

உலர்ந்த அவள் உள்ளத்தில் பூபாலனின் அன்பு முகம் ஏடு விரிந்து மலர்ந்தது. அன்று இரவு தன் மச்சான் இலங்கைச் சீமைக்குப் பயணப் படும் சேதி அவளுக்கு எட்டவே, தலைதெறிக்க விழுந்தடித்துக் கொண்டு பூவம்மா ஓடினாள்.

அங்கே அவள் கண்ட காட்சி அவளைச் சிலையாக்கி விட்டது. பூபாலன் கண்ணீரும் கம்பலையுமாகக் கையில் தாங்கிய மருதமுத்துவின் படத்தின்மீது வைத்த விழிகளை எடுக்காமல் பிரமை கொண்டாற்போல நின்றது நின்றபடி நின்று கொண்டிருந்தான். பூவம்மா சிலையானாள்.

"ஐயோ அண்ணாச்சி!" என்று கூக்குரலிட்டாள் பூவம்மா, தன் சகோதரனின் உருவத்தை முகத்துக்கு முகம் வைத்துப் பார்த்தபோது.

"பூவம்மா, அழாதே. அழுததனாலே நம்ப மருதமுத்து திரும்பவும் நமக்குக் கிடைக்கப் போறானா? விசனப்பட்டு இனி என்ன செய்யிறது? இன்றைக்கு இரவு நான் அக்கரைச் சீமைக்குப் புறப்படுறேன். உன்னிடம் சொல்லிவிட்டுப் போகத்தான் புறப்பட்டேன். அதுக்குள்ளே மருதமுத்துவின் ஞாபகம் வந்துடுச்சு. படத்தைப் பார்த்தவன் அப்படியே நின்னுவிட்டேன்..."

"மச்சான், நீங்க இம்பிட்டு உசிராக அண்ணாச்சி மேலே இருப்பீங்க என்கிறதை இப்பத்தான் என் கண் முன்னாலே கண்டறிஞ்சேன். அன்னிக்கு அண்ணனைப் பறிகொடுத்த ஆத்திர வெறியிலே சொன்னதை யெல்லாம் மனசிலே வைக்காதீங்க. என்னை மன்னிச்சிடுங்க பெரிய மனசு பண்ணி. இப்போ நான் யாருமே நாதி இல்லாத அநாதை. பெற்ற தாயாரை இழந்தேன். உயிருக்கு உயிராயிருந்த என் அருமை அண்ணனையும் இழந்து விட்டேன். அன்னிக்கு எம்மேலே உள்ள அன்புக்கு அடையாளமாகப் பணமும் சாமான்களும் தந்தீங்க. அன்னிக்கும் இன்னிக்கும் - ஏன் என்னிக்குமே என்னை உங்க பூவம்மாவா ஆக்கிப் பிடுங்க. கருகின மலரைச் சிரிக்கிற ரோஜாப் பூவாக ஆக்குங்க. இனி நீங்க தானுங்களே எனக்கு முழு ஆதாரம்...! மச்சான், முதலிலே நம்ப கண்ணாலத்துக்கு வேண்டியதைச் செய்யுங்க. அப்பாலே அக்கரைச் சீமைக்குப் போகலாம், மச்சான்!" என்று விக்கலுக்கும் விம்மலுக்கும் இடையில் வேண்டி நின்றாள் பூவம்மா.

"பூவம்மா, கண் கலங்காதே. எப்பவுமே நீ இனி என் பூவம்மாதான்! நானே வந்து உங்கிட்டே நம்ப கண்ணாலச் சங்கதியைப் பத்திப் பேசணுமின்னு நினைச்சேன். அதுக்குள்ளாற நீயே முந்திக்கிட்டே. நெசமாச் சொல்றேன், இப்பத்தான் செத்துப் போன உன் ஆயா, அண்ணாச்சி ரெண்டு பேரு ஆவியும் நிம்மதிப்படும். மச்சான் கிட்டே அவன் இறக்கும்போது நான் கையடிச்சு வாக்குக் கொடுத்தபடி உன்னை என் பூவம்மாவா ஆக்கிக்கப் போறேன். நீதான் எனக்கு உசிரு..." என்று சொல்லிப் பூபாலன் பூவம்மாவின் கண்ணீரைத் துடைத்து விட்டான். பல நாட்களுக்கப்புறம் அப்பொழுதுதான் பூவம்மாவின் கடை இதழ்களில் புன்னகை மடல் இதழவிழ்ந்தது!

அருமை நண்பன் மருதமுத்துவை இழந்த பின்பு, பூபாலனுக்கு மறுபடியும் அக்கரைச் சீமைக்குப் போவதில் விருப்பம் சிறிதும் இல்லை. அதுவும் பூவம்மாவைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு, எதிலும் முதலில் அவளுடைய விருப்பத்தைப் பெற வேண்டியதாயிருந்தது. அவளுக்கு அக்கரைச் சீமைக்குப் போக விருப்பமே இல்லை. ஆகவே பூபாலன் உள்ளூரிலேயே நிலம் வாங்கிக் கொண்டு சிரத்தையாகப் பயிர்த் தொழில் செய்ய ஆரம்பித்தான். பூவம்மா, பூபாலன் — இவர்களுடைய மனசைப் போல், பயிர்த் தொழில் நன்கு செழித்து அவர்களுக்கு நல்ல பலனைத் தந்தது.

ஆகா! ஜோடிக்காளை பூட்டிய வில் வண்டியிலிருந்தல்லவா இந்த ஜோடிக் காதல் குரல் கிளம்பி வருகின்றது! அடடே, நம் பூபாலன்—பூவம்மா ஜோடிதானா? பேஷ்! ரெங்கநாதருக்குச் சினிமாப் பார்க்கத்தான் ஆனந்தமாகப் புறப்பட்டுப் போகிறார்கள் போலும்! இந்தக் காதல் ஜோடிக்கு இதோ என் மனமார்ந்த வாழ்த்துக்கள்!

# பழங்கால நினைவுகள்....

ஆரம்பம்



1870ம் ஆண்டு டிசம்பர் மாதம் 3ம் தேதி, பல்வேறு சாதியைச் சார்ந்த பல ஊர்க்காரர்கள் ஏழு நபர்கள் சேர்ந்து, ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளும் ஒரே நோக்கத்துடன் ஏழு ரூபாய்களைச் சேகரித்தனர்.

அவர்களுடைய பாங்கி இரண்டு கால்கள்தான்! இந்தக் கால்கள் அக்கௌண்டண்டு, காரியதரிசி, காஷியர், குமாஸ்தா, பியூன் முதலிய எல்லோரையும் ஒன்றாகத் தாங்கி சென்றது. ஆனால் அவைகள், நம்பியிருக்கும் அந்த ஏழு சந்தாதாரர்களின் பரிபூரண நம்பிக்கை, மதிப்பு என்ற ஆதாரத்தைப் பெற்ற திடமான கால்கள்.




1871ம் வருஷம் தொழிற் சங்கங்களுக்கு அரசாங்க அங்கீகாரம் ஏற்பட்டது. அதன் காரணமாக அகில உலகத் தொழிலாளர்கள் மகிழ்ச்சியுடன் ஒன்று பட்டுத் தங்கள் வேலைக்குப் பாதுகாப்பு ஏற்பட்டது குறித்துச் சந்தோஷமடைந்தனர். அதே வருஷம் பம்பாய் மியூச்சுவல் லைப் அஷ்யூரன்ஸ் சொஸைட்டி நிறுவப்பட்டு எல்லோருக்கும் நிதி பாதுகாப்பு அளித்தது. மேற்படி சொஸைட்டிக்கு அப்போது விலாசம் கிடையாது!

ஆனால் அந்தப் புராதன இன்ஷ்யூரன்ஸ் ஆதரவாளர்களின் உற்சாகம் மிகவும் பயனுள்ளதாயிருந்தது. அங்கத்தினர்கள் தங்கள் நண்பர்களிடம் இது குறித்துச் சொன்னார்கள்; நண்பர்கள் தங்கள் குடும்பத்தினர்களிடம் சொன்னார்கள்; குடும்பத்தினர் அண்டை அயல் வீட்டாருடன் இது பற்றிப் பேசினார்கள். ஒரு வாரத்திற்குள், புதிதாக ஆரம்பிக்கப்பட்ட சொஸைட்டி, ஒரு லட்ச ரூபாய் பெறும் பாலிஸிகளை இன்ஷ்யூர் செய்தது. சொஸைட்டிக்குக் குறிப்பிட்ட விலாசம் இல்லாதது ஆதரவாளர்களுக்கு மிகவும் சங்கடமாயிருந்தது.







பிறகு, 1895ம் ஆண்டு—இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு—பாலிஸிதாரர்களின் மொத்தப் பிரீமியத்தில் 15 சத விகிதம் போனஸாக வழங்கப்பட்டது. பாலிஸிதாரர்களுக்கே இது மிக அதிசயமாயிருந்தது!

இன்று, அந்த ஏழு பேர்கள் ஏழு லட்சம் பேர்களாக மாறினர்; அந்த ஏழு ரூபாய் சுமார் 40 கோடி ரூபாயாகிவிட்டது; முன்பு சிறு ஆதாரமாயிருந்த கால்கள் பெரிய அன

இல்லை, எல்லா விஷயங்களும் மாறவில்லை. சொஸைட்டி ஆரம்பிக்கும்போது ஒற்றுமைபட்டிருந்த அந்த ஏழுவரின் நல்ல நோக்கம் இன்னும் அப்படியே உள்ளது. பம்பாய் மியூச்சுவலின்




தங்கம்மாள் சகோதரிகள் அறுவர். ஆறே பேர்தான். ஒருவேளை இவர்கள் ஒன்பது பேர்களாய் இருந்தால் நவக்கிரகங்கள் என்று சொல்லி விடலாம். அவர்கள் அறுவராய் இருந்தாலும் நவக்கிரகங்களுக்குள்ளது போல் சத்ரு, மித்ரு, நீசம், உச்சம், வக்கிரம் முதலிய குணம் படைத்தவர்கள். ஆனால் இவர்களுக்குள் நிரந்தரமான சத்ருத்வமோ மித்ருத்துவமோ இல்லாமல் இன்னும் கொஞ்சம் விசேஷமான ரசிகத் தன்மைக்கு இடம் அளிக்கக் கூடியதாய் இருந்தது.

இந்த ஆறு சகோதரிகளில் மூத்தவள் தங்கம்மாள். அவள் பெயருக்குச் சிறப்பளிக்கும் வகையில் அவர்களைத் தங்கம்மா சகோதரிகள் என்று அழைப்பதே உத்தமமாகும். இந்த ஆறு சகோதரிகளையும் பெற்ற தாயோ, தகப்பனோ தங்களைப் பாக்கியசாலிகளென்றோ அபாக்கியசாலிகள் என்றோ நிச்சயமாக முடிவு செய்து கொள்ள முடியாமலிருந்தது. இந்த ஆறு பெண்களும் ஒற்றுமையாக இருக்கும் காலத்தில் பெற்றோர்கள் தங்களைப் பாக்கியசாலிகளாகத் தான் நினைத்திருக்க வேண்டும். அதே போல அவர்கள் சண்டை போட்டுக் கொள்ளும் சந்தர்ப்பத்தில் இந்தப் பெண்களைப் பெற்ற தங்களைப் போன்ற துர்பாக்கியசாலி உலகத்திலேயே இருக்க மாட்டார்கள் என்று தான் வருந்தியிருக்க வேண்டும். எப்படியோ அந்த ஆறு பெண்களையும் உலகத்தில் ஆறு அப்பாவிப் புருஷர்களைத் தேடிப் பிடித்துக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார்கள். அந்தவரையில் அவர்கள் மகா பாக்கியசாலிகள்தான் என்பதை ஒருவராலும் மறுக்க முடியாது. தங்கம்மாள் சகோதரிகள் ஆறு பேரும் திக்குக்கு ஒருவராகப் பல ஊர்களில் இருந்து குறைவற்ற குழந்தைச் செல்வங்களுடன் குடித்தனம் நடத்தி வந்தார்கள்.



ஒரு நல்ல ரசிகனுக்குச் சிலர் ஒற்றுமையா யிருப்பதை விடச் சண்டை போட்டுக் கொண்டிருப்பதை ரசிப்பதில் தான் ஒரு அலாதி இன்பம். ஆறு சகோதரிகளும் ஒற்றுமையாக இருந்தனர் என்று சொல்லி விட்டால் கதை எப்படி உண்டாகும்...அப்புறம் ரசிகனுக்குப் பிழைப்பேது...?

பல ஊர்களில் சிதறிக் கிடந்த இந்த ஆறு சகோதரிகளுக்கும் வருஷத்தில் ஒரு தடவையாவது ஏதாவது ஒரு ஊரில் சேர்ந்து சந்திக்கும் வாய்ப்பு கிட்டும். இந்தச் சகோதரிகளில் யாரேனும் ஒருத்தி தன் பெண்ணுக்கோ பிள்ளைக்கோ கல்யாணம் செய்வாள். அல்லது ஏதாவது விசேஷம் சேர்ந்துவிடும். அங்கே எல்லாச் சகோதரிகளும் தவறாமல் வந்து சங்கமம் ஆகி விடுவார்கள். இந்தச் சகோதரிகளுக்குள் சண்டை ஆரம்பமாவதே ஒரு விநோதமாகத் தான் இருக்கும். ஒருவரை ஒருவர் சந்தித்தபொழுது ஒருவரோடு ஒருவர் கொஞ்சிக் குலாவிக் குலாவித் தான் பேசிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் ஒற்றுமையைக் கண்டு திருஷ்டி கழிக்க வேண்டும் போல்தான் தோன்றும். ஆனால் திடீரென்று அவர்கள் யுத்தரங்கத்தில் நிற்பதும் ஒரு பெரிய அதிசயமாய்த் தான் இருக்கும். ஆரம்பத்தில் சண்டை இரண்டு பேர்களுக்குள் தான் ஆரம்பமாகும். மற்ற சகோதரிகள் பலாபலமறிந்து எந்தக் கட்சியில் சேரலாமோ அந்தக் கட்சியில் சேர்ந்து கொள்வார்கள்.

சில சமயத்தில் மும்மூன்று பேர் எதிர் எதிராக நின்று சண்டை செய்வதும் உண்டு. சில சமயம் ஒரு கட்சியில் ஐந்து பேர்கள் கூடி விடுவார்கள். தனியாக ஒருத்தியே நின்று ஐந்து பேருடனும் சண்டை போட்டுச் சமாளிப்பாள். சிலசமயம் நாலும் இரண்டுமாகக் கூட இந்தக் கிரகங்கள் பிரிந்து நிற்கும். எந்தப் படையில் சேருவது என்பது அந்தச் சமயம் யாரால் தனக்குக் காரியமாக வேண்டுமென்று படுகிறதோ அதைப் பொறுத்



தது. சிலசமயம் சில சகோதரிகள் நடு நிலைமையாக நின்றும் தத்தளிப்பதுண்டு. இரண்டு கட்சியினர் வார்த்தைக்கும் தலை அசைத்து 'ஆமாம்' போடும் அந்தப் பெண்மணியின் தடுமாற்றமான நிலைதான் எல்லாவற்றையும் விடப் பரிதாபத்துக் குரியதாய் இருக்கும்.

இதுதான் சண்டை ஆரம்பமாகும் விதம் : ஒரு கல்யாண சந்தர்ப்பம். சமையலறையில் நின்று காப்பி சப்ளை செய்யும் இலாகாவின் பொறுப்பு தங்கம்மாளிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. எப்படியோ ஒரு செய்தி தங்கம்மாவின் கடைசிச் சகோதரி வேம்பம்மாவின் காதுகளில் விழுகிறது. தங்கம்மா தன் பிள்ளைக்கு ஒரு பெரிய செம்பு நிறையக் காப்பியை ஊற்றிக் கொடுத்ததாகவும், அந்த சமயத்திலேயே, வேம்பம்மாவின் பிள்ளைக்குக் கால் சேர் காப்பியை எடுத்து அதில் அரைச் சேர் சுத்த ஜலத்தைக் கலந்து கொடுத்ததாகவும் செய்தி. இதைக் கேட்டதும் வேம்பம்மாவுக்கு அளவிற் கடங்காத கோபம் ஏற்படுகிறது. "பார்த்தயாடி அக்கா, அவள் நெஞ்சை? அவள் பிள்ளைக்குக் கொட்டைக் குழம்பு மாதிரி ஒரு குடம் காப்பியைக் கொடுத்து விட்டு என் குழந்தைக்குக் கால் சேர் காப்பியை எடுத்து அதில் அரைச் சேர் தண்ணியைவிட்டுத் தந்தாளாம்..." என்பாள் காய் கறி நறுக்கிக் கொண்டிருக்கும் இன்னொரு சகோதரியிடம். "அவள் ஏன் செய்ய மாட்டாள்? எல்லாம் செய்வாள். துளிக்கூட நெஞ்சில் ஈவு இரக்கம் பச்சாதாபமில்லாத பாவியாச்சே..." என்பாள் அவள்.

உக்கிரான அறைக்குச் சமீபமாக நின்று கொண்டிருக்கும் இன்னொரு சகோதரிக்கு இது பொறுக்காது. "அவளா! போன வருஷம் பட்டுவுக்கு நடந்த கல்யாணத்தின் போது தன் பெண்ணுக்கு எட்டு ஜாங்கிரியும் என் குழந்தை கையில் பாதி ஜாங்கிரியும் விண்டு கொடுத்தவள் தானே?" என்பாள், எரிகிற தீவட்டி அணைந்துவிடப் போகிறதே என்று ஒரு கை எண்ணெயை எடுத்து ஊற்றுகிறவள்போல். இப்படியாகத் தன் கட்சிக்கு இன்னும் இருவர் பக்கபலமாகச் சேர்ந்தவுடன் வேம்பம்மாள் விசுவரூபம்கொண்டு ஆர்ப்பரிக்கத் தொடங்குவாள். அப்புறம் ஒரே சொல்மாரிதான். அந்தக் கல்யாணம் ஒரு நாள் கல்யாணமாய் இருந்தால் ஒருநாளும், ஐந்து நாள் கல்யாணமாய் இருந்தால் ஐந்து நாளும் இருந்து சண்டை போட்டுவிட்டுத்தான் ஊருக்குப் போவார்கள். இவர்களைச் சமாதானப்படுத்த ஒருவருமே முன் வருவதில்லை. ஏனென்றால் ஒரு நாள் அவர்களே சமாதானத்துக்கு வந்து விடுவார்கள் என்று எல்லோருக்கும் தெரியும். அந்த வருஷம் ஏற்பட்ட சண்டை அப்பொழுதுஎந்தக் கைக்கு வெற்றி எந்தக் கைக்குத் தோல்வி என்று முடிவு கட்ட முடியாத நிலைமையில் நின்று விடும். அடுத்த வருஷம் அவர்கள் ஏதேனும் ஒரு விசேஷத்தில் சந்திக்கும்போது சென்ற வருஷத்தில் நடந்தவைகளையெல்லாம் மறந்து விட்டவர்கள்போல் ஆரம்பத்தில் ஒற்றுமையாய் இருப்பார்கள். சண்டை ஆரம்பித்து விட்டால் போதும். கடந்த பல வருஷங்களாக ஏற்பட்ட பல விஷயங்களும் அடி படும். ஜாங்கிரி கொடுக்காதது, காப்பி கொடுக்காதது இத்யாதி விஷயங்கள். ஆகவே சண்டை போடுவதற்கு விஷயங்களுக்குக் குறைவே இருக்காது.

அந்த வருஷம் தங்கம்மா சகோதரிகளின் மூத்த சகோதரனின் புத்திரனுக்கு உபநயனம். சாயங்காலம் வரையில் சண்டையே ஏற்படவில்லை. இப்படியே சண்டை இல்லாமல் இந்த வருஷம் ஓடி விடுமோ என்று எல்லோரும் வியப்படைந்திருந்தனர். ஆனால் நெடு நேரம் இந்த வியப்பு நீடிக்கவில்லை. நான்காவது சகோதரி அலமு, மூன்றாவது சகோதரியின் மீது ஒரு குற்றம் சுமத்தினாள். கோமளம் அலமுவின் பெண் தலையில் துளிக்கூடப் பூ வைக்காமல் எல்லாப் பூவையும் தன் பெண் தலையிலேயே வைத்து விட்டாள் என்பதுதான் குற்றம். உடனே தலைக்கொருவராக வார்த்தை நெருப்பை அள்ளி வீசச் சண்டைத் தீ பலமாகப் பற்றிக் கொண்டது.

அந்தப் பூணூல் கல்யாணம் சண்டை இல்லாததினால் சோபித மற்றுப் போய் விடுமோ என்று அந்நியவர்களுக்கெல்லாம் ஒரு மன ஆறுதலும் திருப்தியும் அப்பொழுது தான் ஏற்பட்டன. வழக்கம்போலக் கடைசி நேரம் வரையில் நடந்து சமாதானமில்லாமலேயே எல்லோரும் தங்கள் தங்கள் ஊருக்குச் சென்றனர். ஆனால் அலமுவுக்குத் தன் சொந்த ஊர் வந்த பிறகும்கூட மன ஆறுதல் ஏற்படவில்லை. இத்தனை வருஷங்களுமில்லாமல் அந்த வருஷம் தங்கள் சண்டையை விடாமல் நடத்த ஒரு நவீன முறையைக் கடைப் பிடிக்கத் தொடங்கினாள். அதாவது கடிதம் மூலமாகச் சண்டை போடுவது. இது அழகான வழியல்லவா......?

அலமு கோமளத்துக்கு எழுதிய கடிதம் :

கோமளத்துக்கு, நீ என் கூடப் பிறந்தவள் என்பதையே அடியோடு துறந்து விட்டேன். உனக்கும் எனக்கும் எவ்வித சம்பந்தமும் இனிமேல் வேண்டாம். என்னிடமிருந்து நீ எவ்வளவோ வாங்கிக் கொண்டிருக்கிறாய். முக்கியமாக, பாபுவின் கல்யாணத்தின்போது

என் பெண் உன் பெண் நாகுவுக்குத் தந்த புரூச்சை மரியாதையாகக் கொடுத்து விடு......

அலமு.

கோமளம் அலமுவுக்கு எழுதிய பதில்:

அலமுவுக்கு, நீ என்கூடப் பிறந்தவளில்லை என்று எப்பொழுதோ, தலைமுழுகி விட்டேன். உன் பெண் கொடுத்த தங்கப் புரூச்சு யாருக்கு வேண்டும்? என் பெண் உன் பெண்ணுக்கு அரை டஜன் கண்ணாடி வளையல் கொடுத்திருக்கிறாள். அதை அனுப்பினால் உன் புரூச்சைக் கொடுத்து விடுகிறேன்.

கோமளம்.

உடனே அலமு எழுதிய பதில்:

உன் பெண் கொடுத்த கண்ணாடி வளையல் உடைந்து போய் விட்டது. அதை வாங்கிக் கொடுத்து விடுகிறேன். ராமேசுவரம் போயிருந்தபோது நான் உனக்கு வாங்கிக் கொடுத்த மரத் தட்டையும் மாக்கல் சட்டியையும் மரியாதையாக அனுப்பி விடு.

அலமு.

கோமளம் இதற்குச் சளைப்பாளா? உடனே இதோ பதில்:

உன் மாக்கல் சட்டியும் மரத் தட்டும் யாருக்கு வேண்டும்? நான் உனக்கு ஸ்ரீரங்கத்தில் வாங்கிக் கொடுத்த அப்பளாக் குழவியையும் பொடி சம்புடத்தையும் உடனே அனுப்பி விடு. கோமளம்.

உன் பெண் கல்யாணத்தின்போது நான் ஓதி விட்ட கெட்டிக் கரை ரவிக்கைத் துண்டுக்கு வழி யென்ன? அலமு.

உன் பிள்ளைக்கு ஆண்டு நிறைவு நடந்த போது நான் வாங்கிக் கொடுத்த பட்டுச் சட்டைக்கு நீ முதலில் வழி சொல்லு... என் வீட்டிலிருந்து உன் சின்னப் பெண் விளையாடுவதற்காக ஒரு பிள்ளையார் பொம்மை எடுத்துக் கொண்டு போனாளே, அதைக் கொடுத்து விடு. கோமளம்.

பிள்ளையார் பொம்மை உடைந்து போய் விட்டது. உன் பேத்தி என் பேத்தியின் கிலுகிலுப்பையை வாங்கிக் கொண்டு போனாளே அதைத் திருப்பிக் கொடுத்தால் பிள்ளையார் பொம்மையை வாங்கிக்கொடுத்துவிடுகிறேன்.

அலமு.

இந்த வகையாகப் பாணத்திற்குப் பின் பாணம் விடுவதுபோல அலமுவும் கோமளமும் கடிதங்களுக்குப் பதில் கடிதங்களாக எழுதிக் கொண்டிருந்தனர். இவள் கொடுத்த பொருள் எதையாவது திருப்பிக் கேட்டால் அவள் கொடுத்த பொருள் எதையாவது திருப்பிக் கேட்பாள். பல வருஷங்களாக அவர்கள் ஒருவருக்கொருவர் கொடுத்து வாங்கிக்கொண்ட அற்பப் பொருளையும் ஞாபகத்திற்குக் கொண்டு வந்து ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கடிதம் வீதம் எழுதிக் கொண்டு வந்தனர். 'அதைக் கொடுத்தால் இதைத் தந்து விடுகிறேன், இதைக் கொடுத்தால் அதைத் தந்து விடுகிறேன்' என்று கடிதத்தில் எழுதிக் கொண்டிருந்தார்களே தவிர ஒருவர் பொருள் ஒருவருக்கு வந்து சேரவில்லை. வாரம் மூன்று கடிதத்திற்குக் குறையாது. இது தபால் இலாகாவுக்கு அதிக வருமானம்!

அந்த வருடம் திடீரென்று கொரட்டூரில் இருந்த அவர்களுடைய மாமா இறந்து விட்டார். எல்லா சகோதரிகளும் துக்கத்துக்குத் தவறாமல் வந்து விட்டனர். ஆரம்பத்தில் எல்லோரும் ஒற்றுமையாகவே தங்கள் துக்கத்தைக் காட்டிக் கொண்டனர். அலமுவும் கோமளமும் தங்கள் கடிதப் போக்குவரத்து பற்றிப் பேசிக் கொள்ளவே இல்லை. கோமளம் அதைப் பற்றி ஏதாவது பேசுவாளோ என்று அலமு எதிர்பார்த்தாள். அலமு ஏதாவது பேசுவாளோ என்று கோமளம் எதிர்பார்த்தாள்.

மற்றவர்களெல்லாம் இந்தச் சகோதரிகளுக்குள் சண்டை எப்பொழுது ஆரம்பமாகப் போகிறது என்பதை எதிர்பார்த்திருந்தனர்.

வழக்கத்திற்கு விரோதமில்லாமல் சண்டையும் ஆரம்பமாகியது. இந்த வருஷ ஜதை ஐந்தாவது சகோதரி சண்பகமும் இரண்டாவது சகோதரி வஞ்சுவும். சண்டை எப்படி ஆரம்பமாகியது என்பது பற்றிய அற்ப விஷயம் இங்கு அவசியமில்லை. சகோதரிகள் ஆறு பேரும் இரு ஜதையாகப் பிரிந்து நின்று சண்டை போட ஆரம்பித்தனர். இதில் இன்னொரு அதிசயம் என்னவென்றால் சென்ற வருஷம் சண்டை போட்டுக் கொண்ட சகோதரிகள் இருவரும் இன்று ஒரு கட்சியில் சேர்ந்து கொண்டதுதான். சென்ற வருஷம் நடந்த சண்டையை நேற்றுவரையில் கடிதம் மூலமாக அந்தச் சண்டைக்கு உயிரளித்துக் கொண்டு வந்த கோமளமும் அலமுவும் வஞ்சுவின் கட்சியில் சேர்ந்து கொண்டார்கள். தங்கம்மாவும் வேம்பம்மாவும் சண்பகத்தின் கட்சியில் இருந்தனர். வழக்கம் போல இந்தச் சண்டைக்கு ஒரு முடிவு ஏற்படவில்லை. எல்லோரும் தங்கள் தங்கள் ஊருக்குப் பயணப்படும் போது அலமு வஞ்சுவைப் பார்த்து, "இதோ பாரு! சம்பகத்தை இதோடு விட்டு விடாதே. நீ ஊருக்குப் போனப் புறம் அவளுக்கு ஒரு கடிதாக எழுதி அவள் பெண்ணுக்கு நீ வாங்கிக் கொடுத்த மூக்குத் திருகாணியைக் கேளு..." என்றாள்.

இதைப் பக்கத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்த கோமளம் "ஆமாம், அதுதான் சரியான வழி. அப்போதான் அவள் கொட்டம் அடங்கும். போனவுடனே அலமு சொன்ன மாதிரி அவளுக்கு மறக்காமல் கடிதாக எழுதிக் கேளு..." என்றாள். வஞ்சுவும் 'சரி' என்றாள்.

சண்டை போடும் விதத்தில் ஒரு புது வழியைக் கண்டு பிடித்துக் கொடுத்த அலமுவுக்கும் கோமளத்திற்கும் ஏற்பட்டுள்ள திருப்திக்கு இப்பொழுது அளவே இல்லை.

வாயில் அணிவதால் உயரும் தோற்றம் ந. 18






வாயில்

உடுத்தி பெருவாழ்வு வாழ்*

தி கடாவ் மகன்ஜி ஸ்பினிங் & வீவிங் கம்பெனி லிமிடெட்

மில்: [illegible] பம்பாய், ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்ட் பியர், பம்பாய்.

[illegible]: 216, நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் ரோட், [illegible]-1

உள்ளூர் சில்லரை விற்பனை கடை:

கடாவ் மில்ஸ் ஷோரூம்

216, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, மதராஸ்-1



## இப்பொழுது உறுதியான பற்கள்தான் . . . ஆனுல்

### ஒரு நாள் அவள்

# சிரிக்கவே அச்சப்படநேரிடலாம்!

சிறு பிராயத்தில் ஈறுகளை அசட்டைசெய்வது பிற்கால வாழ்விலுள்ள சந்தோஷங்களை அனுபவிக்க இடைஞ்சலாயிருக்கும். இந்த அபாயத்திலிருந்து சிறுவர்களை காப்பாற்ற நிச்சயமான ஒரு வழி தினமும் தவருமல் அவர்களை எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகிக்கச்செய்வதுதான். பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளை சிகிச்சை செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினேலியேட்* இந்த எஸ். ஆர். டூத்பேஸ்ட் ஒன்றில்தான் இருக்கிறது. ஆகையால் உங்கள் கடமையைச் செய்யுங்கள்— உறுதியுள்ள ஆரோக்கியமான ஈறுகளில் ஒழுங்காகவும் வெண்மையாகவும் பற்களை இருக்கச் செய்யும் எஸ். ஆர். டூத்பேஸ்டின் இரட்டிப்பு பாதுகாப்பை அவர்களுக்கு அளியுங்கள்.



**எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகிக்கச்செய்து அவர்கள் சிரிப்பை கவர்ச்சியுடையதாகச் செய்யுங்கள்**




பெரிய சைஸிலும் கிடைக்கிறது

*ஸோடியம் ரிஸினேலியேட் பாக்டீரியாவை எதிர்ப்பதோடு பாக்டீரியாவினுல் ஏற்படும் வீக்கத்தினின்றும் தடுக்கும் சக்தியையும் அளிக்கிறது.

---

ஆ. அன்டு டபிள்யூ. பெல் லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது GSR. 96-50 TM



# மூன்று முடிச்சுகள்

அக்ஷயம்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

சுந்தரத்துக்கு இடையிடையே ராகவன் குறுக்கிட்டுப் பேசுவது பிடிக்கவில்லை. எனவே, முகத்தைச் சிணுங்கிக் கொண்டு, "ராகவன் அநாவசியமாகக் குறுக்கே குறுக்கே பேசாதே! சொல்வதைக் கேள்!" என்று சொல்லி விட்டு மேலும் சொல்ல ஆரம்பித்தான் :

"'உங்கள் கண்களில் சிவப்புக் கோடுகள் கோடிட்டிருப்பதைக் கண்டால், நீங்கள் காலணா விஷயத்தை மறக்கும் முயற்சியில் இரவு கண் விழித்திருக்கிறீர்கள் என்று நன்றாகத் தெரிகிறதே! சொல்லியா தெரிய வேண்டும்! நீங்களே வேண்டுமானால் பார்த்துக் கொள்ளுங்களேன்!' என்று சொல்லி அவன் எதிரே முகம் பார்க்கும் கண்ணாடியை எடுத்து வைத்தேன்.

"அவள் அதைத் திருப்பிக் கவுண்டரில் வைத்து விட்டாள். பிறகு பத்து ரூபாய் நோட்டு ஒன்றை என் முன் நீட்டி, 'இந்தாருங்கள், உங்கள் விற்பனை வரியை எடுத்துக்கொண்டு பாக்கி ஒன்பது ரூபாய் பதினைந்தே முக்காலணா எனக்குச் சில்லறை கொடுங்கள்!' என்றாள்.

"நான் சில்லறை வைத்திருந்த டிராயரைத் திறந்து அதிலிருந்த சில்லறை முழுவதையும் கவுண்டரில் கொட்டிச் சில்லறையை எண்ணலானேன்.

"'உங்களிடம் நோட்டு இல்லையா!'. என்று நான் சில்லறை எண்ணுவதைக் கண்டதும் கேட்டாள். அப்பப்பா! அப்பொழுது அவள் முகத்தில் உண்டான கோணல்களை என்னவென்பது! அந்தக் கோணல் அவள் அழகுக்கு இன்னும் அழகு செய்ததே தவிர அதைக் கெடுக்கவில்லை.

"'நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன்!' என்று சொல்லி நான் இன்னொரு டிராயரையும் அவள் எதிரேயே இழுத்துக் காண்பித்தேன்.

"அதைப் பார்த்ததும் அவள், 'சரி, என் நோட்டைக் கொடுங்கள், இப்படி! நாளை இந்தப் பக்கம் வரும்பொழுது ஞாபகமாக உங்கள் காலணாவைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்! ஆனால் நான் வருவேன் என்று மட்டும் எதிர்பார்த்து ஏமாறுதீர்கள். நான் ஒரு வேளை மறந்து விட்டால் என்ன செய்வது!' என்று கூறி என்னைப் பார்த்து ஒரு புன் முறுவலை அள்ளி வீசினாள். ஆனால் இந்தத் தடவை அவளது உள்ளத்திலே அளவு கடந்த அன்பு பொங்கிக் கொண்டிருக்கிறது என்பதை அவளது புன் முறுவலே எனக்கு மிகமிகத் தெளிவாக எடுத்துக் காட்டியது.

"'சரி, ரொம்ப சரி! நான் உங்களைத்தான் எதிர்பார்க்க வேண்டும் என்பது என்ன! வேறு வேலை ஏதாவது செய்து கொண்டிருக்கலாம் அல்லவா!' என்று கேட்டேன்.

"'வேறு என்ன செய்வீர்களாம், நீங்கள்!'

"'உங்களை எதிர் பார்க்கத்தான் வேண்டும் என்பதில்லையே! உங்கள் நினைவாகவே இருக்கலாம் அல்லவா! ஏனெனில் கடன் சமாசாரம், பாருங்கள். இந்தக் கடன் சமாசாரம் ஆளை மறக்க விடாது. அதன் குணமே அப்படி!' என்றேன்.

"'உங்கள் கடன் பெரிய தொலையாத கடன், பாருங்கள்! மறக்குமோ! மறக்காது; மறக்காது என்றால் மறக்காதுதான்!' என்றாள் அவள்.

"'கடன் பெரியதாயிருந்தால் என்ன! சிறியதாயிருந்தால் என்ன! கடன் கடன்தானே! காலணாவாயிருந்தாலும் கடனை விட்டு விட முடியுமா! நீங்களே சொல்லுங்கள்!' என்றேன்.

"......எவ்வளவுதான் சொல்லுவேன், ராகவன்! இன்னும் எத்தனையோ பேச்சுக்கள் நடந்தன. அரை மணிக்குக் குறைச்சல் இல்லை, பேசிக் கொண்டிருந்ததாம். அவள் பேசுகிற பொழுது ஒவ்வொரு பேச்சுக்கும் பூ உதிர்வது போலிருந்தது என்றால் அவள் பேச்சு எப்படி இருக்கும் என்று நீயே ஊகித்துக் கொள். போகும் பொழுது அவள், 'நான் வருகிறேன். நாளைக்குக் கட்டாயம் உங்கள்

காலணாவைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன். காலணாவுக்காக நீங்கள் கவலைப்பட்டுச் சாகவேண்டாம்' என்று சொல்லிச் சென்றான்."

## 3

அதற்குப் பிறகு எத்தனையோ வாரங்கள் ஓடி விட்டன. ராகவன் தினமும் சுந்தரத்தின் கடைக்குப் போய் வந்தான். சுந்தரமும் தன் காதல் கதையின் புதிய புதிய சம்பவங்களை அவனுக்குச் சொல்லி வந்தான். ஒரு நாள், "அவள் ஒரு ரூபாய் நோட்டுக் கொண்டுவந்தாள். விற்பனை வரியை எடுத்துக் கொண்டு மிச்சம் கொடுங்கள் என்று கேட்டாள். என்னிடம் சில்லறை இல்லையென்று நான் சொல்லி விட்டேன்" என்பான் சுந்தரம். இன்னொரு நாள், "அவள் கொண்டு வந்த காலணா செல்லாதது. மிகவும் தேய்ந்திருந்தது. அதனால் வாங்கிக் கொள்ள முடியாது என்று மறுத்துவிட்டேன்" என்பான். இம்மாதிரியாக ஒன்றல்ல, இரண்டல்ல; ஆயிரமாயிரம் காரணங்கள் குறுக்கிட்டு விற்பனை வரிக்கான காலணா வசூலிக்கப்படாமல் அவளிடம் தங்கியே இருந்தது. இலேசில் கொடுபடவில்லை.

விற்பனை வரி கொடுபடவில்லை என்பதற்காக நாட்கள் ஓடாமல் சும்மா நிற்குமா! அவை பாட்டுக்கும் ஓடிக்கொண்டேயிருந்தன. ஒருநாள் அவள் வந்தபொழுது மற்ற வாடிக்கைக்காரர்களைச் சுந்தரம் மும்முரமாகக் கவனிக்க நேர்ந்து விட்டபடியால், அவளைக் கவனிக்க முடியாமலே போய் விட்டது. அவளும் வந்த வாடிக்கைக்காரர்கள் போகட்டும் என்று வெகு நேரம் பேசாமல் நின்று பார்த்தாள். அவள் கால்கள் கடுத்து விட்டன. ஒருவிதமாக வாடிக்கைக் காரர்கள் சென்று அவளும் அவனும் மட்டும் எஞ்சி நின்றபொழுது அவள் தன் பர்ஸைத் திறந்து ஒரு ஓட்டைக் காலணாவை எடுத்துச் சுந்தரத்திடம் நீட்டியவாறு, "இந்தாருங்கள், உங்கள் கடன்!" என்றாள்.

சுந்தரம் இரண்டு கைகளையும் கூப்பி ஒரு கும்பிடு போட்டு விட்டுக் கவுண்டரில் கைகளைப் பரப்பி, "கொண்டு வாருங்கள்!" என்றான்.

அவள் காசை அவன் கைகளில் வைக்கப்போனபொழுது சுந்தரம், அவளுடைய இரு தளிர்க் கரங்களையும் அன்புடன் பிடித்துக் கொண்டான்.

"இந்த நீண்ட நகங்களுக்கு நீங்கள் ஏன் வர்ணம் தீட்டுவதில்லை! நிஜமாகச் சொல்கிறேன். உங்கள் இந்தச் சிவந்த கைகளில் இருக்கும் இந்த நீண்ட நீண்ட நகங்கள் செப்பு வர்ணம் ஏற்றப்பட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும், தெரியுமா! என்னிடம் இதற்கு ஒரு நல்ல பாலிஷ் இருக்கிறது."

சுந்தரம் சொல்லிக் கொண்டே போனான். அவள் தலை குனிந்த வண்ணம் பேசாமல் அதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். நாணம் அவள் சிவந்த உடலை இன்னும் சிவப்பாக்கியது. ஆயினும் அவள் சுந்தரத்தின் கைகளிலிருந்து தன் கைகளை விடுவித்துக் கொள்ள முயற்சிக்கவில்லை. அன்பும் நாணமும் கலந்த பார்வையில் தலை குனிந்தவாறே சுந்தரத்தை நோக்கிக் கொண்டிருந்தாள்.

பிறகு, சிறிது நேரம் கழித்து, "......இவ்வளவு தானா! உங்களிடம் பாலிஷ் மட்டும்தான் இருக்கிறதா!" என்று கேட்டவாறே அவள் மெதுவாகத் தன் கைகளை அவனுடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள முயன்றாள்.

"நீங்கள் எது கேட்டாலும், தரத் தயார். கடை பிறத்தியாருடையதல்லவே......!" என்று கூறிய சுந்தரம் ஒரு முறை அவளுடைய கையை அன்புடன் அழுத்தி விட்டு விட்டுவிட்டான்.

"குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் தருவீர்களா!"

"தண்ணீர்தானே! வேண்டியது தருகிறேன். அதோ, பாருங்கள்! கூஜா வைத்திருக்கிறது. புஸ்தகங்களை இப்படியே வைத்துவிட்டுப் போய்க் குடித்து வாருங்கள்!" என்றான் சுந்தரம்.

புஸ்தகங்களை வைத்து விட்டு அவள் தண்ணீர் குடிக்கச் சென்றதும், சுந்தரம் அவற்றிலிருந்து ஒரு புஸ்தகத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்தான். முதல் பக்கத்திலேயே 'சுந்தரி' என்று பெயர் எழுதியிருந்தது. பெயரைப் படித்ததும் அவன் தன்னையறியாமலே அவளுடைய முகத்தை ஒரு முறை கூர்ந்து கவனித்தான்.

அவள் தண்ணீர் குடித்து விட்டு வந்ததும், "உங்கள் பெயர் வெகு அழகாயிருக்கிறதே! சுந்தரி! ஆகா! என்ன அழகான பெயர்!" என்றான்.

அவள் ஒன்றும் பதில் பேசவில்லை. ஒரு புன்முறுவலை மட்டும்தான் அவன்மீது அள்ளி வீசினாள்.

சுந்தரம் அவள் கண்களுக்குப் படாமல் அந்த ஓட்டைக் காலணாவை அந்தப் புஸ்தகத்தில் வைத்து விட்டான். பிறகு, "நீங்கள் நாளைக்கு இந்தப் பக்கம் வருவீர்களா!" என்று கேட்டான்.

"உங்கள் கடன்தான் தீர்ந்து விட்டதே!"

"உங்கள் உள்ளத்தைத் தொட்டுச் சொல்லுங்கள்!" என்றான் சுந்தரம்.

அதைக் கேட்ட அவள் சிரிக்கும் கண்களுடன் ஒரு முறை சுந்தரத்தைப் பார்த்தாள். பிறகு சிரித்த வண்ணமே அவனிடம் விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டாள்.

## 4

சுந்தரி என்ற பெயரைக் கேட்டதும் ராகவனுக்கு அப் பெயருள்ள பெண்ணைத் தான் எங்கேயோ பார்த்திருப்பது போன்ற நினைவு இடை



யிடையே எழலாயிற்று. எங்கே பார்த்தோம் என்பதுதான் அவனுக்கு நினைவு வரவில்லை. ராவ் பஹதூர் ராஜலிங்கத்தின் பெண் சுந்தரி. தங்கத்தின் தோழி. அநேகந் தடவை அவள் தங்கத்துடன் அவன் வீட்டுக்கு வந்திருக்கிறாள். ஆனால் இதுவரை ராகவன் அவளை அவ்வளவு நன்றாகக் கவனித்ததில்லை. ஆகவே, சுந்தரம் வர்ணித்த அவளுடைய கண்களின் ஆழத்தையும் வளர்ச்சியின் பெருமையையும் பற்றி அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை; உணர்ந்து அநுபவிக்கவும் முடியவில்லை. அவள் விரல்கள் செம்மை படர்ந்து எவ்வளவு அழகாக இருக்கும் என்பதையும் அவனால் கற்பனைக் கண் கொண்டு ரசிக்க முடியவில்லை. அவனுக்குத் தெரிந்தவரை அவள் ஒரு சாதாரணப் பெண்ணாகத்தான் தோன்றினாள். இருந்தாலும், அவளை அவ்வளவு நன்றாகக் கவனிக்காத அவன் சட்டென்று அப்படி முடிவுக்கு வந்து விடலாமா!

அது மட்டும் அல்ல; சுந்தரம் தன் மனத்துக்கு ஒன்று பிடித்து விட்டால் ஒரேயடியாக அளந்து விடுபவன், வானளாவப் புகழ்பவன் என்பதும் அவனுக்குத் தெரிந்த விஷயம். அவன் சொல்வதில் ஒன்றுக்குக் கால் என்ன, அரைக்கால் பங்கு கூட உண்மையாக இல்லாமல் இருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவனைப் போன்றவன் பொய் சொல்லவில்லையென்றால் அப்புறம் பொய்க்குத்தான் மதிப்பு ஏது! சுந்தரத்தைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு பெண்ணும்,—தலை மயிர் சற்று நீண்டும், அங்க அவயவங்கள் சற்று வனப்பாகவும் அமைந்து விட்டால் அழகில் ரதிதான்; அழகுத் தெய்வம்தான். அத்துடன் உடலின் நிறமும் கொஞ்சம் வெளுப்பாயிருந்து விட்டால் கேட்கவே வேண்டாம். பொன்னுக்குப் புது மணம் ஏற்றி



னாற் போலத்தான். ஆனால்......! இவள் அந்தச் சுந்தரியாக இல்லாமல் வேறு சுந்தரியாகவும் இருக்கலாம் அல்லவா! இவ்வளவு பெரிய பட்டணத்தில் சுந்தரி என்று அவள் ஒருத்தி மட்டும் தான் இருப்பாளா! எத்தனையோ ஆயிரம் சுந்தரிகள் இருக்கலாமே! சுந்தரம் சொல்வது பொய் என்று எண்ணுவானேன்! அது எப்படியாவது போகட்டும், எந்தச் சுந்தரியாகவாவது இருந்துவிட்டுப் போகட்டும். ராகவனுக்குச் சுந்தரத்தின் சுபாவம் நன்றாகத் தெரியும். இரண்டொரு மாதம் சுந்தரம் அவர்களுடன் சிரித்துப் பேசி மகிழ்வான். அப்புறம் தன் சுபாவத்துக் கேற்ப, எல்லாவற்றையும் மறந்து இன்னொரு சுந்தரியைத் தேடி அவளுக்குத் தாக விடாய் தீர்க்க முயல்வான்; வேறு ஒருத்தியிடம் விற்பனை வரி நிலுவை வசூலிக்க முயல்வான்.

அது எப்படிப் போனால் என்ன! அவனுக்கு மாதாமாதம் ஒரு புதிய பெண் எப்படியோ கிடைத்து விடுகிறாள். ஆனால் ராகவனுக்கோ இந்த இருபத்தெட்டு வருஷ வாழ்க்கையில் அப்படி ஒரு பெண் கூடக் கிடைக்கவில்லையே! ஒரு வேளை அவன் தலையில் பெண் பாக்கியமே எழுதப்படவில்லையோ, என்னவோ! இந்த எண்ணம் எழுந்ததுதான் தாமதம், அவனுக்குத் தன் மீதே எரிச்சல் எரிச்சலாக வந்தது. அவன் நம்பிக்கை யிழந்து விட்டான், தமக்கும் பெண்ணுக்கும் வெகு தூரம் என்று!

அதற்குப் பிறகு அவன் சுந்தரத்தை ஒருநாள் சந்தித்தபொழுது, அவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவன் அசந்தே போய்விட்டான்.

"ஏன், ராகவன்! நான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டால் என்ன! அவளுக்குப் பூர்ண சம்மதம்" என்று கேட்டான் சுந்தரம்.

ராகவனுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்தது. "நீ கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாயா! இந்த வார்த்தைகள் உன் வாயிலிருந்துதான் வருகின்றனவா!—எனக்கு என் காதுகள் மீதே நம்பிக்கை ஏற்படமாட்டேன் என்கிறதே!" என்றான்.

"இல்லை, ராகவன்! இப்பொழுதெல்லாம் என் மனம் மிகவும் மாறிவிட்டது. நான் இப்பொழுது பழைய சுந்தரம் இல்லை" என்று சொன்ன சுந்தரம், இலேசாகச் சிரித்துக் கொண்டு, "அவள் என்னுடன் எங்கேயாவது ஓடி வந்துவிடக் கூடத் தயாராயிருக்கிறாள்!" என்றான்.

"எங்கே போவதாக உத்தேசம்!"

"எங்கேயாவது போனால் போகிறது. உலகம் தான் விரிந்திருக்கிறதே!" என்றான் சுந்தரம்.

"ஆமாம். பெண் கொஞ்சம் இப்படி அப்படிப் பட்டவளாக இருப்பாளோ!"

"இப்படி அப்படிப்பட்டவள் என்றால்......!" இதைக் கேட்ட சுந்தரம் 'கட கட' வென்று சிரித்து விட்டான். "நீ நினைப்பதுபோல இருப்பதாகவே வைத்துக்கொள். அதனால் என்ன குடி முழுகிவிட்டது! ஆனால் நீயும் நானும் நினைப்பது போல, அவள் அப்படிப்பட்டவள் இல்லை என்று எனக்குப் பரிபூரணமாக நம்பிக்கை இருக்கிறது. காரணம் என்ன, தெரியுமா! அவளுடைய முக பாவங்கள், அவளுடைய உதடுகளின் இயல்பான வெளுப்பு, குழியும் கன்னங்களின் சாத்துவீக ஒளி எல்லாம் அவள் நல்ல குலத்தில் உதித்தவள்தான், நல்ல குணம் படைத்தவள்தான் என்பதைப் பறை சாற்றுகின்றன. அப்படியே அவள் ஒரு சாதாரணத் தாழ்ந்த குடும்பத்துப் பெண்ணாகவே இருந்து விட்டாலும் கூட, அதற்காகவும் நான்

கவலைப்படப் போவதில்லை. எங்கேயாவது வெகு தொலைவில் போய் நாங்கள் இருவரும் கல்யாணம் செய்து கொண்டு, ஆனந்தமாக வாழ்க்கை நடத்தத் தயாராயிருக்கிறோம். அவ்வளவுதானே உனக்கு வேண்டும்!'' என்றான் சுந்தரம்.

''நீ போய் விட்டால் இந்த 'மாடர்ன் ஸ்டோர்'ஸை யார் நடத்துவார்கள்!''

''நீ நடத்துகிறாய்! வேறு யார் நடத்துவார்கள்! இந்தச் சந்தர்ப்பத்தில் எனக்கு நீ இவ்வளவு கூட உதவி செய்ய மாட்டாயா!''

''அதற்குச் சொல்லவில்லை, அப்பா!'' என்று விஷயத்தின் கம்பீரத்தில் சிந்தனையைச் செலுத்திய ராகவன் மௌனம் சாதித்து விட்டான். அவன் மனம் மேலும் யோசனையில் ஆழ்ந்து விட்டது.

இந்தச் சுந்தரி ராவ்பகதூர் ராஜலிங்கத்தின் பெண் சுந்தரியாக இருந்து விட்டால், அவள் சுந்தரத்துடன் ஓடிவிட்டாள் என்னும் விஷயம் அவர் காதுக்கு எட்டிவிட்டால், என்ன ஆகும்! ஆனால் அத்துடனேயே அவன் உள்ளத்தில் இன்னொரு எண்ணமும் இடம் பெற்றது. தன் பயங்கொள்ளித் தனத்தை எண்ணி அவன் தனக்குத் தானே சிரித்துக் கொண்டான். அவனையும் சுந்தரத்தையும் தவிர, வேறு யாருக்கு இந்த விஷயம் தெரிந்திருக்கப் போகிறது! யாராவது அப்படியே வந்து கேட்டால் கூடச் சுந்தரம் ஏதோ முக்கியமான சொந்த அலுவல் காரணமாக வெளியூருக்குப் போயிருக்கிறான் என்று சொல்லி விட்டால் போயிற்று! இல்லாவிட்டால், இந்தக் கஷ்டத்திலிருந்து தப்புவதற்குக் கொஞ்ச நாட்கள் கடையையே திறக்காமல் இருந்துவிட்டால் ஆயிற்று! ஆனால் ஒன்று. அப்படிச் செய்வதனால் அவன் நண்பனுக்கு வியாபாரம் குறைந்து நஷ்டம் ஏற்படலாம். நண்பன் என்ற முறையில் அதற்கு இடம் கொடுப்பது நியாயமாகுமா! *ஆகாதுதான். ஆகவே, அவன் அந்த எண்ணத்தையும் தன் மனத்திலிருந்து களைந்தெறிந்தான். கடைசியில் அவன் உத்தியோகமும் பார்ப்பது, கடையையும் நடத்துவது என்ற முடிவுக்கு வந்து விட்டான். யாராவது கேட்டால் சுந்தரம் சுந்தரியை அழைத்துக் கொண்டு ஓடிவிட்டான் என்று தெளிவாக ஒளிவு மறைவின்றிச் சொல்லி விடுவதென்றும் முடிவு கட்டிவிட்டான். அவனைத் தேடிப் பிடிக்க விரும்புபவன் பிடித்துவிட்டுப் போகட்டுமே! அதனால் அவனுக்கு என்ன நஷ்டம்!

கடைசியில் எல்லா விஷயங்களையும் பற்றித் தீரத் தெளிய யோசித்து முடிவு கட்டிக்கொண்டு, ''நல்லது, போய் வா, நண்பா! எப்பொழுது புறப்படுவதாக உத்தேசமோ!'' என்று சுந்தரத்தைப் பார்த்துக் கேட்டான்.

''எப்பொழுது போகலாம்!''

''எப்பொழுதா!'' என்று கேட்ட ராகவன் சிறிது நேரம் யோசித்தான். பிறகு, ''சனிக்கிழமை புறப்படுவது சௌகரியமாயிருக்குமோ என்று நான் எண்ணுகிறேன். அன்று மாலை வண்டியில் புறப்பட்டுவிடு. ஞாயிற்றுக் கிழமைதான் கடைகளுக்கு விடுமுறை நாள் ஆயிற்று. அதனால் உன் கடையும் மூடியே இருக்கும். அப்படி இருப்பது எனக்கும் சௌகரியம், உனக்கும் சௌகரியம்'' என்று ராகவன் தான் தப்புவதற்கும் வழி கோலிக்கொண்டு தன் அபிப்பிராயத்தைச் சுந்தரத்தினிடம் தெரிவித்தான்.

''சரி! இன்று என்ன கிழமை!'' என்று கேட்டான் சுந்தரம்.

''இன்று செவ்வாய்க் கிழமை!''

''புதன், வியாழன், வெள்ளி இன்னும்வள்ளிசாக மூன்று நாட்கள் இருக்கின்றன. புறப்படுவதற்கு ஆயத்தம் செய்ய இந்த மூன்று நாட்கள் ஏதேஷ்டம்!'' என்றான் சுந்தரம்.

''என்ன பிரமாதமான ஏற்பாடு செய்யப் போகிறாய்! நினைத்தால் புறப்பட வேண்டியதுதானே!''

''இல்லை. அவளுக்குச் சொல்ல வேண்டும் அல்லவா! அவள் புறப்படுவதற்குத் தயாராக வேண்டும். எனக்கும் வெளியில் கொஞ்சம் ரூபாய் நிலுவை நிற்கிறது. அதையும் வசூலித்துக் கொள்ள வேண்டும். அதற்குக் கொஞ்சம் அவகாசம் இருப்பது நல்லதுதானே!'' என்று கேட்டான் சுந்தரம்.

''வாஸ்தவம். இருக்க வேண்டியது தான்!'' என்று ஆமோதித்தான் ராகவன்.

## 5

நாட்கள் ஒவ்வொன்றாக ஓடின. சிறுகச் சிறுக எல்லாக் கடனும் வசூலாகி விட்டது. புறப்படும் தினமும் நெருங்கியது. பொழுது விடிந்தால் சனிக்கிழமை. சுந்தரம் புறப்பட வேண்டிய நாள். இரவு முழுவதும் ராகவனுக்குத் தூக்கம் வரவில்லை. மறுநாள் ஆபீஸ் போக வேண்டாம், லீவு போட்டு விடலாம் என்று அவன் எண்ணினான். ஆனால் சுந்தரம் சாயந்திரம் தானே போகப் போகிறான், அதற்காக நாம் காலையிலிருந்தே லீவு ஏன் போடவேண்டும் என்று எண்ணி லீவுபோடும் எண்ணத்தை மாற்றிக் கொண்டு, ஆபீஸ் விட்டதும் நேரே ஸ்டேஷனுக்குப் போவது என்று நிச்சயித்துக் கொண்டான்.

ஆபீஸ் கடிகாரம் மணி மூன்றரை அடித்ததும் அவன் துணுக்குற்றான். ஆனால் கடிகாரத்தின் முகத்தைப் பார்த்ததும், நிம்மதியுற்று மறுபடியும் வேலையில் ஈடுபட்டான். பிறகு அவன் ஒரு முக்கியமான வேலையைக் கவனிப்பதில் ஈடுபட்டு விடவே, நேரம் போனதே தெரியவில்லை. வேலையிலிருந்து விடுபட்டுக் கடிகாரத்தைப் பார்த்தால், மணி நாலே முக்கால் ஆகியிருந்தது.

வண்டி சரியாக ஐந்து மணிக்குப் புறப்படும். எனவே, அவன் தன் மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு முழு வேகத்தில் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான். ஆயினும் அவன் ஸ்டேஷன் போய்ச் சேருவதற்குள் மணி ஐந்து அடித்துவிட்டது. அவன் பிளாட்பாரம் டிக்கட் வாங்கிக் கொண்டு பிளாட்பாரத்துக்குள் நுழைவதும், வண்டி புறப்படுவதற்கு அறிகுறியாக இரண்டாவது தடவை மணி அடிப்பதும் சரியாக இருந்தது.

எதிரிலேயே சுந்தரம் நின்று கொண்டு அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். சுந்தரத்தை இந்தமாதிரி உடையில் ராகவன் பார்த்தது இது தான் முதல் தடவை. அவன் ஒரு கடைக்காரன். ஒரு பெண்ணை ஏமாற்றி அழைத்துக் கொண்டு ஓடிக்கொண்டிருக்கிறான் என்று அப்பொழுது அவனைப் பார்க்கும் யாரும் சொல்லமாட்டார்கள். ஏன், நினைக்கவேகூட மாட்டார்கள். வெகு அழகாகச் சுந்தரம் உடை தரித்துக்கொண்டிருந்தான். மிக மிக உயர்ந்த 'காபர்டின் ஸூட்' புத்தம் புதிய ரத்தச் சிவப்பான 'டை' கன்னங் கரேல் என்று கண்களைப் பறிக்கும் கறுமை நிறம் வாய்ந்த 'கிரேப் ஸோல் பூட்ஸ்' ஆகியவை அணிந்திருந்தான். மூக்குக் கண்ணாடியின் 'பிரேம்'கூட மாறியிருந்தது. இந்தப் பகட்டான ஆடையில் அவன் எடுப்பாக நின்று கொண்டிருந்ததைக் கண்ட ராகவன் அயர்ந்து விட்டான்.

ராகவன் அருகில் வருவதைக் கண்ட சுந்தரம் இலேசாக இள நகை புரிந்தான். பிறகு, ''நீ கட்டாயம் வருவாய் என்று எனக்குத் தெரியும்!'' என்று ஆரம்பித்தான்.

''நன்றாகச் சொன்னாயே! வராமல் இருப்பேனா!''

"சரி! இதோ, பார்! நேரமோ ரொம்பக் குறைவு. உன்னிடம் பேச வேண்டியதோ நிரம்ப இருக்கிறது. இந்த விஷயம் ஒருவருக்கும் தெரியக்கூடாது. தெரிந்தால் என் பெயருடன் உன் பெயரும் கெட்டு விடும்" என்று சொல்லிய சுந்தரம் கடையின் சாவிக் கொத்தை எடுத்து ராகவனின் கையில் கொடுத்தான். பிறகு, "இன்று முதல் கடை உன்னுடையதுதான்" என்றான்.

ராகவனின் கண்களில் நீர் நிரைவிட்டது. பழைய தோஷம். பிரிவது சிரமமாயிருந்தது.

"கையில் கொஞ்சம் ரூபாய்கள் எடுத்துக் கொண்டிருக்கிறாய் அல்லவா!" என்று நாத் தழுதழுக்கச் சுந்தரத்தைப் பார்த்துக் கேட்டான்.

"அதைப் பற்றிக் கவலைப்படாதே! தேவைப் பட்டால், உனக்கு எழுதுகிறேன்."

"கடிதம் எழுதுவதாயிருந்தால் கடை விலாசத்துக்கு எழுதாதே. என் வீட்டு விலாசத்துக்கே எழுது. என்ன, புரிந்ததா!"

"சரி. ஆனால்......" என்று ஆரம்பித்த சுந்தரம் ஒரு காகிதத்தையும் பேனாவையும் ராகவனிடம் நீட்டி, "இதில் உன் விலாசத்தை எழுதிக்கொடு. உனக்கும் எனக்கும் சிநேகிதம் ஏற்பட்டு எத்தனையோ நாட்களாகி விட்டன. ஆனால் இன்று வரை உன் விலாசமே தெரியாமல் நான் இருந்து விட்டேன்!" என்றான்.

"அதற்காக என்ன!" என்று சொல்லிவிட்டு ராகவன் தன் விலாசத்தை எழுதி அவனிடம் கொடுத்தவாறே, "இப்பொழுதாவது தெரிந்து கொள்ள வேண்டுமென்று உனக்குத் தோன்றிற்றே!" என்று குத்தலாகச் சொன்னான்.

"உன் உத்தியோக விஷயத்திலேயே உழன்று கொண்டிராதே. கடையையும் கொஞ்சம் கவனித்துக் கொள்" என்றான் சுந்தரம்.

அவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே, வண்டி மூன்றாவது தடவையாக ஊதி விட்டு மெதுவாக ஊரவும் தொடங்கியது.

"நல்லது, ராகவன்! நமஸ்காரம்!" என்று கூறிக் கை கூப்பினான் சுந்தரம். "வணக்கம்!" என்று மறு வணக்கம் செலுத்திய ராகவன், "மன்னிக்கும் என் சார்பில் வணக்கத்தைச் சொல்லு!" என்றான் கை கூப்பியவாறே.

"ஓ எஸ்!" என்று சொல்லியவாறே சுந்தரம் ஒரு இரண்டாவது வகுப்புப் பெட்டியில் ஏறிக் கொண்டான். வண்டியும் மெதுவாக ஊர்ந்து சென்று பார்வையிலிருந்து மறைந்தது. சுந்தரியைக் கூட அழைத்துக்கொண்டு சுந்தரமும் மறைந்து விட்டான். அவனுக்குக் கிடைத்த அந்த வெற்றியை எண்ணி ராகவன் மிகவும் மகிழ்ச்சியுற்றான்.

வீடு வந்ததும் ராகவன் ராவ் பகதூர் ராஜலிங்கத்தின் பெண் தன் தாயாரின் அருகில் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். "அட! சுந்தரியா!" என்று கேள்வி அவன் வாயிலிருந்து வெளிவந்தது.

சுந்தரத்துடன் ஓடிப் போன சுந்தரி ராவ் பகதூர் ராஜலிங்கத்தின் பெண் இல்லை என்பதை அறிந்ததும் அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. அவனுக்கு இனிக் கவலைப் பட்டுக்கொண்டு கறட்டோணாவை விழுங்க வேண்டிய அவசியம் இல்லையல்லவா! ஆகவே, அவன் கடவுளுக்கு இருதய பூர்வமான வணக்கத்தைத் தெரிவித்தான். "ராகவ அண்ணா! தங்கம் எங்கே! இன்று அவள் காலேஜுக்குக் கூட வரவில்லையே! உங்களுக்குத் தெரியுமோ!" என்று சுந்தரி ராகவனைப் பார்த்துக் கேட்டாள்.

அதைக் கேட்ட ராகவனுக்குத் தன் காதில் யாரோ ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போலிருந்தது. தங்கத்தின் அறைக்குச் சென்று அவன் பார்த்தான். அவள் படுக்கையில் ஒரு புஸ்தகம் பிரித்தபடி கிடந்தது. அதன் முதற் பக்கத்தில் 'சுந்தரி' என்று எழுதியிருந்தது. அந்தப் புஸ்தகத்தின் கடைசிப் பக்கம் ஒன்றில் ஒரு ஓட்டைக் காலணா வைக்கப்பட்டிருந்தது. அது ராகவனைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது.

அப்புறம் அடுத்த விஷயங்களை முடிச்சுப் போட அவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. எனவே, அடுத்த முகூர்த்தத்தில் தங்கத்தின் கழுத்தில் மூன்று முடிச்சுக்களைப் போடச் சுந்தரத்துக்கும் அதிக நேரம் பிடிக்கவில்லை என்றுதான் கேள்வி.

[ஆதாரம் : அன்னிய மொழிக் கதை]

## உதவி தேவை!






அடமின்
திராவகமும் காப்ஸ்யூல்களும்
ஒருங்கே திரட்டிய
விடமின் எண்ணெய்

வளர்ச்சிக்கும்
சிறந்த
ஆரோக்கியத்திற்கும்

•

கவர்ன்மெண்ட்
ஆயில் பாக்டரி
கோழிக்கோடு

சென்னை சர்க்கார் கைத்தொழில் & வர்த்தக இலாகாவின் பிரிவு.

SISTAS-GO-17







ஸ்பென்ஸரின்
ஊக்கமளிக்கும்
பரிசுத்தமான
பானங்கள்

*

* லெமனேட்
* ஆரஞ்சு கிரஷ்
* ஜிஞ்சர் ஏல்
* கோலா
* ஜிஞ்சர் பீர்
* கொயினு டானிக்

*

தென் இந்தியா
முழுவதும்

ad4

# விரும்பிய வரம்

சாந்தினி

காமிராவும் கையுமாக ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டு, கண் கொள்ளும் காட்சிகளையெல்லாம் காமிராவில் அடைத்துக் கொண்டு போய்ப் பத்திரிகைகளுக்கு அனுப்புவதுதான் அவன் பொழுது போக்கு. அதிலும் தென்னாட்டுச் செல்வங்களான சிற்ப வேலைப்பாடுகளையும், இயற்கைக் காட்சிகளையும் போட்டோ பிடிப்பதில் அவனுக்கிருந்த ஆர்வத்தைச் சொல்லி முடியாது.

அவன் பத்து வேலி நிலத்துக்கு வாரிசாகப் பிறந்த ஒரே பிள்ளை. அவன் தன் பெயருடன், எம். ஏ. என்ற இரண்டெழுத்துக்களைச் சேர்த்துக் கொண்டபின், ஆயிரம் ரூபாய் போட்டு ஒரு அழகிய காமிராவை விலைக்கு வாங்கிக் கொண்டு, ஊர் ஊராய்ச் சுற்றத் தொடங்கி விட்டான்.

வெண்கலப்பட்டு கிராமத்துக்கு அருகில் உள்ள பவழமலைக் குன்றின்மேல் ஒரு தேவியின் சிலை இருப்பது அவன் காதில் விழுந்தது. அவ்வளவு தான்! புறப்பட்டு விட்டான் பவழ மலைக் குன்றை நோக்கி.

சாயங்கால பூஜைக்காகக் கோவில் ஆலாட்சி மணி அடிக்கத் தொடங்கியது. குன்றின்மேல் ஏறுவதற்கு வளைந்து வளைந்து சென்ற ஒற்றையடிப் பாதை மேல் ஏறத் தொடங்கினான் அவன். பூஜை மணியைக் கேட்டதும் கிராம ஜனங்கள் ஒவ்வொருவராகக் கோயிலை நோக்கி வந்தார்கள்.

கோயிலில் பூஜை தொடங்கி விட்டது. கற்பூர வாசனையும், கதம்பத்தின் நறு மணமும் சேர்ந்து அவன் மண்டையைக் குளிரச் செய்தன. அர்ச்சகரின் அர்ச்சனையும், ஆலாட்சி மணியின் ஆலாபனையும் சேர்ந்து சுவர்க்கத்துக்கு எட்ட முயன்று கொண்டிருந்தன. மேற்குப் பிராகாரத்துச் சுவரில் ஏறி உட்கார்ந்து கொண்டான் அவன்.

மனோ ரம்மியமாகப் பூமிக்குப் பின்னால் தன் மதி வதனத்தை மறைக்கத் தொடங்கி யிருந்தான் கதிரவன். அவனது பொன் மயமான கிரணங்களால் பொன் மூலாம் பூசப்பெற்று எல்லாப் பொருள்களும் மின்னிக் கொண்டிருந்தன. மலையை அணைத்தபடி ஓடியது மேகலா நதி. நதிக்கு அக்கரையில் பசும் வயல்கள் ஒளி வீசிக் கொண்டிருந்தன. நகரத்தில் வாழ்ந்த அவனுக்கு, அந்த அமைதி பேரின்பம் அளித்தது. இதற்குள் பூஜை முடிந்து எல்லோரும் வீடு நோக்கிப் போய்க் கொண்டிருந்தனர்.

பூஜை முடிகிற மட்டும் இந்த அழகில் ஆழ்ந்து விட்டோமே, இனி போக வேண்டியதுதான் என்று நினைத்துக் கொண்டே துணியைத் தட்டி விட்டு எழுந்தான் நடராஜன். ஆம், அதுதான் அவன் பெயர். ஜனங்கள் இருக்கும்போது சிலையை நன்றாக ஆராய முடியாது, அழகையும் ரஸிக்க முடியாது, போட்டோவும் எடுக்க முடியாது. இது அவன் அநுபவ பூர்வமாகக் கண்டறிந்த உண்மை.

'கோயிலுக்குள்ளே குருக்களைத் தவிர வேறு யாரும் இல்லை. நல்ல காலம்' என்று எண்ணியவாறே அவன் தேவியின் எதிரே போய் நின்றான்.

ஆஹா! என்ன அற்புதம்! சிலையின் வடிவழ

"சுவாமி! தேவிக்கு இன்னும் அருள் வரவில்லையே!" என்றது ஒரு பெண் குரல். குயிலினுமினிய அந்தக் குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் நடராஜன். அழகிய பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள்.

"அம்மா! தேவி எப்படியும் அருள் செய்வாள். இன்றைக்கு இல்லாவிட்டால் இன்னொரு நாளைக்குக் கட்டாயம் அருள் புரிந்தே தீருவாள்" என்றார் கோவில் குருக்கள்.

நடராஜனுடைய கண்கள் அவள் மேல் நிலைத்திருந்ததனால், அவன் பக்கம் திரும்பினாள் அவள். மறுகணம் அவள் 'ஓ' வென்று கத்தினாள்.

"சுவாமி! தேவி அருள் புரிந்து விட்டாள்! இதோ ரஞ்சனன் வந்து விட்டார்!" என்றவள், "என்னை மன்னித்து விடுங்கள், சுவாமி!" என்று கூறி நடராஜன் கால்களில் விழுந்தாள்.

அவள் கூச்சலைக் கேட்ட குருக்கள் 'அவனைக் கண்டு ஒருகணம் திடுக்கிட்டுவிட்டார். "ரஞ்சனா!" என்ற சொற்கள் அவர் வாயினின்றும் வெளி வந்தன. ஆனால் மறுகணம் உணர்ந்து விட்டார், அவன் ரஞ்சனன் சாயலை அப்படியே பெற்றிருந்தாலும் அவன் ரஞ்சனன் இல்லை என்று!

"அம்மா, நான் ரஞ்சனன் இல்லை" என்றான் நடராஜன்.

அவனை நிமிர்ந்து பார்த்த அவள், "தேவி! நீ அருள் புரிந்து என் ரஞ்சனனை அழைத்து வந்து விட்டாய்! நான் செய்த தப்பை மன்னித்து என்னை ஏற்றுக் கொள்ளச் சொல். நான் பண்ணின பாவத்துக்கு இத்தனை வருஷங்களாகப் பட்ட வேதனை போதாதா!" என்று கதறிக் கொண்டே அந்தச் சிலையின் பாதங்களில் விழுந்தாள்.

அவள் பேசும் போது சிலையாக நின்ற இருவரும் அவள் மூர்ச்சையுற்று விழவே, அவள் அருகில் ஓடினார்கள். குருக்கள் தம் வயதான நடுங்கும் கரங்களால் அவளைத் தூக்க முயற்சித்தார். பிறகு இருவருமாக அவளை எடுத்துக் கொண்டு போய் அறையில் கிடத்தினார்கள். என்னவோ பச்சிலையை எடுத்து வந்து மூக்கில் பிழிந்து விட்டு, 'அப்பாடா' என்று உட்கார்ந்த குருக்களை ஒரு கேள்விக் குறியுடன் ஏறிட்டு நோக்கினான் நடராஜன். அவரும் அவனுக்கு அவளுடைய கதையை விவரமாகச் சொல்லத் தொடங்கினார்.

★

தவழ்ந்து வரும் காற்றிலும் அது எடுத்து வரும் மணத்திலும் வஸந்தத்தின் சுகந்தம் 'கம்' மென்று வீசியது. ரத்னா மகிழ மரத்தடியில் உட்கார்ந்து மாலை தொடுத்துக் கொண்டிருந்தாள். மாலை தொடுத்து முடியும் தருணம்.

"யாருக்கு இந்த மாலை, ரத்னா!" என்று கேட்டவாறே அங்கே வந்தான் ரஞ்சனன். அவன் ரத்னாவின் அத்தை மகன்.

"

"என்னைத் தவிர இந்த மாலையை நீ வேறு யாருக்குப் போட்டுவிடப் போகிறாய்!"

"உன்னைத் தவிர வேறு யாருக்கும் போடக் கூடாதா! அப்படிச் சொல்ல உனக்கு ஒன்றும் அதிகாரமில்லை!" என்று சீறினாள் ரத்னா.

"நீ கோபப்பட்டால் உன் முகம் எப்படி சிவந்து போகிறது, தெரியுமா!" என்றான் ரஞ்சனன்.

"போதும், உன் விளையாட்டுப் பேச்சு!" என்று கடிந்து கொண்டாள் ரத்னா. அவள் மடியிலிருந்த மாலை கீழே நழுவி விழுந்தது. அதை வெடுக்கென்று குனிந்து எடுத்த ரஞ்சனன் அவள் கழுத்தில் போடப் போனான்.

ரத்னா மாலையை அவன் கையிலிருந்து பிடுங்கி அதைப் பிய்த்து எறிந்தாள். அவன் அதைத் தடுக்க முயன்றான். அப்பொழுது அவள் கோபத்தோடு, "இதோ பார்! நான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வேன் என்று கனவிலும் நினைக்காதே. அதோ இருக்கும் தேவியின் பேரில் சத்தியம்!" என்று கூச்சலிட்டாள்.

கல்லாய்ச் சமைந்து நின்ற ரஞ்சனன், அவள் தேவியின் பெயரை உச்சரிக்கவே, ஓடி அவள் வாயைப் பொத்தினான். பிறகு, "தேவியின் பெயரை மட்டும் இழுக்காதே. தேவி பொல்லாதவள். நீயாக இஷ்டப்பட்டால் தான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வேன். நான் இனி மணம் செய்து கொள் என்று உன்னை வற்புறுத்தவில்லை" என்று கூறிவிட்டு அங்கிருந்து அகன்றான்.

* * *

வேலையெல்லாம் முடித்து விட்டுக் கோயிலை மூடுவதற்கு வெளியே வந்தார் குருக்கள். கோயிலை நெருங்கிக் கொண்டிருக்கும் அந்த உருவத்தைக் கண்டதும் அப்படியே அசந்து போனார் அவர். நாகலிங்கச் செட்டியாரின் குமாரியை அந்த வேளையில், அந்த இடத்தில், அதுவும் தன்னந் தனியாகக் காண்பதென்றால் எவருக்கும் ஆச்சரியமாயிராதா! "என்னம்மா!" என்று கேட்டார் குருக்கள் வியப்பு மேலிட்டவராய்.

"தேவிக்கு அர்ச்சனை செய்ய வேண்டும்.—என் ஸ்வாமி! தேவி கேட்ட வரம் கொடுக்கும் தெய்வம் அல்லவா!"



"ஆமாம். கட்டாயம் கொடுப்பாள். அதுவும் இந்தத் தேவி நினைத்ததை நடத்தி வைப்பதில் பரிபூர்ண சக்தியுடையவள்."

"ஸ்வாமி, இந்தாருங்கள்! அர்ச்சனைக்கு வேண்டிய பழம், புஷ்பம்" என்று கூறிக் கூடையைக் குருக்களிடம் கொடுத்தாள் ரத்னா.

அர்ச்சனை செய்தார் குருக்கள். பிறகு கீழே வணங்கி எழுந்த அவளைப் பார்த்து, "நீ என்னம்மா வேண்டிக் கொண்டாய்!" என்று பரிவுடன் கேட்டார்.

"எனக்கும் என் அத்தானுக்கும் முடிச்சுப் போடுவதற்கு என் தாயாருடன் பேச என் அத்தை வந்திருக்கிறாள். என் அத்தானுக்கும் எனக்கும் கல்யாணம் நடக்கக் கூடாதென்று வேண்டிக் கொள்ள..." என்றாள் ரத்னா குழந்தை போல். 'ஹா!' என்று அசந்து போனார் குருக்கள்.

"இதை முன்னமேயே சொல்லி இருந்தால் நான் அர்ச்சனையே பண்ணியிருக்க மாட்டேனே!" என்றார் குருக்கள் அழமாட்டாமல்.

"தேவி வரம் தருகிறாளா என்று பார்க்கலாம், ஸ்வாமி!" என்று ரத்னா தேவியின் சக்தியை எடைபோடும் பாவனையில் சொன்னாள்.

"அம்மா! தேவி ரொம்பச் சக்தி வாய்ந்தவள்! நீ கேட்டதைக் கொடுத்து விடுவாள். ஆனால் அது நல்லதுக்கில்லையே அம்மா! சிறு பிள்ளைத்தனமாகத் தேவியின் சக்தியை எடைபோட வந்து விட்டாயே! உனக்கு நல்லது கெட்டது தெரியாத காலம் இது. இவ்வளவு பெரிய வேலையைச் செய்து விட்டாயே!" என்று பரிதாபமாகப் பிரலாபித்தார் குருக்கள்.

பிறகு குருக்கள் நேரமாகி விட்டதைக் கண்டு, "வா, அம்மா! இருட்டி விட்டது. வீட்டுக்குப் போகலாம். அப்புறம் உன்னைத் தேடப் போகிறார்கள்" என்று கூறிக் கொண்டே அவசரம் அவசரமாகக் கதவை இழுத்து மூடினார்.

வீட்டுக்கு வந்த ரத்னாவை அவள் தாய் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்து விட்டாள். "அம்மா, ரத்னா! உன் அத்தான் தேசாந்தரம் போகப் போகிறானாம். உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள அவனுக்கு இஷ்டமில்லையாம்" என்று துக்கச் செய்தியை அறிவித்தாள்.

ரத்னாவுக்கு அது எதிர்பார்த்த ஆனந்தத்தைத் தராவிட்டாலும் ஒரு அமைதியை அளித்தது. தேவி தன் பரிசோதனையில் தேறிவிட்டாள் என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் மேலோங்கி நின்றது.

* * *

மஞ்சத்தில் சாய்ந்து கொண்டிருந்தாள் ரத்னா. அவள் மனம் என்னவோ தொடர்பற்ற எண்ணங்களில் சிக்குண்டு அலைபாய்ந்து கொண்டிருந்தது.

ரஞ்சனன் ஊரை விட்டுப் போய் ஒரு வருஷம் ஓடிவிட்டது. சதா பெண் பிள்ளைபோல் தன்னையே சுற்றிச் சுற்றித் திரியும் குழந்தைக் குணம் படைத்த ரஞ்சனனுக்குத் தேசாந்தரம் செல்லும் துணிவு எப்படி ஏற்பட்டது! தன்னை விட்டு, அரை நிமிஷம் கூடப் பிரிய மனமில்லாத அவன், இப்பொழுது கடல் கடந்து செல்கிறானே, திரும்பி வருவோம் என்ற நிச்சயம் கூட இல்லாமல்! இதை நினைத்த ரத்னாவுக்குத் தேவியின் சக்தியில் அபார நம்பிக்கை விழுந்து விட்டது.

ஆனால் நாட்கள் செல்லச் செல்ல அவள் மனம் அமைதியை இழந்தது. என்றாலும் அவள் அவ

னுக்காக ஏங்குகிறாள் என்பதை அவ
னுடைய அகங்கார மனம் ஒத்துக்கொள்
ளச் சிறிதும் தயாராக இல்லை.

தேசாந்திரம் சென்றிருந்த ரஞ்சனன்
வந்து விட்டான் என்ற செய்தி அவ
ளுக்குக் காலையிலேயே எட்டி விட்டது.
ஆனால் மாலை ஐந்து மணி ஆகியும் அவன்
அவள் வீட்டுக்கு வரவில்லை. அவள்
நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது.

காலையில் வந்தவன் மாலை ஆகியும் வர
வில்லை! அவளுக்கு இதயத்தின் பட
படப்பு அதிகரித்து விட்டது. ஒரு வேளை
அவன் வராமலே இருந்து விட்டால்! ...
இந்த எண்ணம் அவளை வாட்டி வதைக்
கத் தொடங்கியது. அவள் எண்ணியது
போலவே, அவன் வராமலும் இருந்து
விட்டான். அதே கவலையில் அவள்
படுத்த படுக்கையானாள்.

ஜலம் மண்ணில் கொட்டிப் போன
பின் அதைக் குடிக்க வேண்டும் என்ற
அவா ஏற்படுவது போல் அல்லவா
அவள் நிலைமை ஆகிவிட்டது!

★

குருக்கள் கதையை முடித்துவிட்டுத்
தம் கண்களில் வழிந்த நீரைத் துடைத்து
விட்டுக் கொண்டார். பிறகு, "படுத்த
வள் அப்புறம் இரண்டு மாதம் எழுந்
திருக்கவேயில்லை. அவள் பிழைப்பதே
துர்லபம் என்று ஏற்பட்ட போதுதான்
தான் பச்சிலை மருந்து கொடுத்து அவ



னைப் பிழைக்கவைத்தேன். என் மருந்து பிழைக்க வைத்ததோ அல்லது என் வார்த்தைகள்தான் பிழைக்க வைத்தனவோ! ஏனென்றால் எனக்குத்தான் தெரியும், அவன் மனத்தில் மறைந்து கிடந்த வேதனை. தேவியை வேண்டிக் கொண்டால், ரஞ்சனன் திரும்ப வருவான் என்று தினமும் சொல்லிக் கொண்டிருந்தேன். அந்த நம்பிக்கை, அவனைப் பிழைக்க வைத்து விட்டது. எப்படியோ பிழைத்து விட்டான். ஆனால் எனக்குத்தான் ஏன் பிழைக்க வைத்தோம் என்று இருக்கிறது. அவன் படும் மௌன வேதனை என் நெஞ்சைப் பிழிகிறது. தேவிக்குத்தான் மனம் இரங்கவில்லை'' என்றார்.

"அந்த ரஞ்சனன் என்ன ஆனான்!" என்று கேட்டான் நடராஜன்.

"அவன் சமாசாரம் யாருக்கும் தெரியவில்லை. இவள்தான் தினமும் கோவில் வாசலில் வந்து பழியாகக் கிடக்கிறாள். என்றைக்காவது திரும்பி வரமாட்டானா என்ற நப்பாசையில்!"

"தேவிக்கு மனம் இரங்காதா, சுவாமி!" என்று கேட்டான் நடராஜன்.

"தான் கொடுத்த வரத்தைத் தானே மாற்றலாமா, அப்பா! அது தேவியின் சக்திக்கே புறம்பானது அல்லவா! அழிந்து விட்டதை எப்படித் திரும்ப ஆக்க முடியும்! நம் இஷ்டத்திற்கு ஆட்டி வைக்கத் தேவி நம் கைப் பொம்மையா! அகில அண்டத்தையும் ஆட்டிப் படைக்கும் ஆற்றல் படைத்த அகிலாண்டேசுவரி அல்லவா அவள்!" என்று கூறிய குருக்கள் பக்தியினால் துளிர்த்த கண்ணீரைத் துடைத்து விட்டுக் கொண்டார்.

புரண்டு படுத்தாள் ரத்னா. ஓடிப் போய்க் கோவில் தீர்த்தத்தைக் கொண்டு வந்து அவள் வாயில் ஊற்றினார் குருக்கள். ரத்னா கண்களை விழித்தாள். பிறகு, "எங்கே அவர், சுவாமி!" என்று மிரள மிரள விழித்தவாறு கேட்டாள்.

நடராஜனைப் பார்த்துக் கண் ஜாடை காட்டிப் பேசாமலிருக்கும்படி சொல்லிவிட்டு, "இதோ!" என்று கையைக் காட்டினார் அவர். நடராஜன் மிரண்டு உட்கார்ந்திருந்தான்.

நடராஜனின் கைகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்ட ரத்னா, "சுவாமி, தேவி அருள் புரிந்து விட்டாள்! அந்த வரத்தையும் அவள் பூர்த்தி செய்தாள். இந்த வரத்தையும் பூர்த்தி செய்து விட்டாள். தேவி மகா சக்தி வாய்ந்தவள்!" என்று கூறித் தன் கண்களைப் பரிபூர்ண சந்தோஷத்துடன் மூடிக் கொண்டாள். ஏதோ ஆனந்தக் கனவில் ஆழ்ந்திருப்பது போல் சிரித்துக் கொண்டிருந்தது அவள் முகம்.

"ஆம், தேவி அருள் புரிந்து விட்டாள், தம்பி! உன்னைப் பார்த்தால் எனக்குக்கூட ரஞ்சனனைப் பார்ப்பது போலவே இருக்கிறது. எனவே..." என்று பாதியில் நிறுத்தினார் குருக்கள்.

"தான் கொடுத்த வரத்தை மாற்ற முடியாது என்று சொன்னீர்களே, சுவாமி!" என்று தன் சந்தேகத்தை வெளியிட்டான் ஒரு முடிவுக்கு வந்த நடராஜன்.

"நான் சொன்னது உண்மைதான், அப்பா! அதே ரஞ்சனனைப் போல உன்னைப் படைத்து இத்தனை வருஷங்களுக்குப் பிறகு இவ்விடம் வருவித்து இருக்கிறாளே, அது தேவியின் அருள் இல்லையா! தன் முந்தின வரத்தையும் மாற்றாமல் அடுத்த வரத்தையும் அளித்து விட்டாள், பார்!" என்றார் குருக்கள்.

அப்பொழுது "ரஞ்சனன்!" என்ற அன்பு தோய்ந்த அழைப்பு ரத்னாவின் வாயிலிருந்து வந்தது. நடராஜனும் அவளுடைய மனத்தைக் கவர்ந்த ரஞ்சனனாக அவளை அணுகினான்.

## எப்படி நம்புவது?



போட்டோ பிடிப்பதைத்
தொழிலாகக் கொண்டவர்கள்
போன்று கெவாபாக்ஸில்

# GEVABOX

படம் பிடியுங்கள்
"ஸின்க்ரோ 52" பிளாஷ் இணைப்புடன்
இப்போது கிடைக்கிறது




இரு விதங்களில் உபயோகமுள்ள புதிய **கெவாபாக்ஸ் காமிரா மற்றும் கெவாபான்** பிலிமினால் நீங்கள் கட்டை விரலை அமுக்குவதின் மூலம் இப்பொழுது வெற்றிகரமாக உட்புறத்திலும், வெளிப்புறத்திலும் படங்களை எடுக்கலாம். இந்த உலகப் பிரசித்திபெற்ற பாக்ஸ் காமிரா கீழ்க் காணும் சகல விசேஷ அம்சங்களுடன் கூடியது.

★ $2\frac{1}{4}'' \times 3\frac{1}{4}''$ அளவில் கெவாபான் அல்லது கெவாக்ரோம் பிலிம் 120 சைஸில் 8 எக்ஸ்போஷர்கள் எடுக்கிறது.

★ மூன்று அப்பர்ச்சர்கள் - f/8, f/11, மற்றும் f/16.

★ மூன்று பாயின்ட் போகஸிங் ஸ்கேல் - (5-13 அடி, 13-20 அடி மற்றும் 23 முதல் இன்பினிடி வரை)

★ இரு பிரகாசமான வியூபைண்டர்கள்.

★ இன்ஸ்டன்டேனியஸ் அல்லது டைம் எக்ஸ்போஷர்கள்.

★ பிளேக்ஸிபிள் ரிலீஸுக்கான ஒரு ஸ்க்ரூ திரேட்டுடன் கூடிய பிரஷர் ஷட்டர் ரிலீஸ்.







கெவாபாக்ஸைப் பற்றிய முழு விவரங்களும் அடங்கிய
இலவச பிரசுரத்திற்கு கீழ்க்காணும் விலாசத்திற்கு எழுதுக

**Allied Photographics Limited**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்
(கெவர்ட் டிபார்ட்மெண்ட்)
கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்
கிளை ஆபீஸ்கள்: பம்பாய், கல்கத்தா, மதராஸ், நியூ டில்லி

# புண்படுத்தும் உஷ்ணத்தின் தொல்லையை ஒழிக்க






கால்கேட் பிரிக்லி ஹீட் பவுடரை உபயோகியுங்கள் அதில் சேர்ந்துள்ள அற்புதமான சக்தி வாய்ந்த ஒரு பொருள்

1. புண்படுத்தும் உஷ்ணத்தால் அரிச்சல் ஏற்படாமல் தடுக்கிறது; ஏற்பட்டாலும் உடனே குணம் படுத்துகிறது
2. சருமத்திற்கு இதமும் குளிர்ச்சியும் அளிக்கிறது
3. குழந்தைகள், பேபிகளுக்குக்கூட பத்திரமானது. பயன் தருவது!

## கால்கேட்
### பிரிக்லி ஹீட் பவுடர்

**இன்றே ஒரு டப்பா வாங்கி நாளையே இதம் பெறுக!**

---

# விச்ராந்தியாக இருங்கள்...







DPX 14A TM

## டன்லப்பில்லோ

லேடெக்ஸ் நுரை மெத்தைகள், தலையணைகள், திண்டுகள் — குருமை, சௌகரியம், சுகாதாரம், நாற்றமில்லாமை முதலிய குணங்களுடன் அளாதி உழைப்பும் கூடியவை.



இப்பொருது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது.
டன்லப் ரப்பர் கம்பெனி (இந்தியா) லிமிடெட்,
57/B, ப்ரீ ஸ்கூல் தெரு, கல்கத்தா-16.
4/29, மவுண்ட் ரோடு, சென்னை-2.






மோகன் வழக்கப்படி அதி ஆவலாய் ஸ்டேஷனுக்கு ஓடி வந்தான். ஏதோ ஆபீஸ் தபாலைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்த மங்கேஷ்ராவ் அவனைக் கண்டதும் வெடுக்கென்று எழுந்தார். "இனிமேல் ஸ்டேஷன் பக்கம் தலையைக் காட்டாதே! இந்தப் பக்கம் வராதே!" என்று முதுகில் 'பளார் பளார்' என்று நாலு அறைகள் வைத்தார். "இல்லை, அப்பா! இல்லை அப்பா!" என்று கத்திய படியே பையன் ஓடினான், பாவம்! அவர் அத்தனை ரௌத்ராகாரமாய் இருப்பாரென்று அவன் எதிர்பார்க்கவே யில்லை.

லீலா நகர் என்று பெயர் பெரிதாயிருந்தும், அந்த ரயில்வே ஸ்டேஷன் என்னவோ மிகச் சிறியதுதான். டிக்கட்டு கொடுக்கவோ, வாங்கவோ, ரயிலுக்குச் சாவி எடுத்துக் கொடுக்கவோ எல்லாவற்றுக்குமே ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவர்தான்.

ஸ்டேஷன் மாஸ்டர் மங்கேஷ் ராவ் சமீபத்தில்தான் அங்கு மாற்றலாகி வந்திருந்தார். இத்தனை வருஷங்களாகப் பகல் டியூட்டி இரவு டியூட்டி என்று பார்த்துப் பார்த்து அவர் உடம்பு மிகவும் ஓய்ச்சலடைந்திருந்தது. என்ன செய்வது? வயிற்றுப் பிழைப்புக்காக அதையும் இதையும் செய்து கொண்டு அல்லாடிக் கொண்டுதானிருந்தார்.

மோகன் அவருக்கு ஒரே மகன். பையன் பார்ப்பதற்கு ஏதோ கச்சலாயிருந்தாலும் படு சமர்த்து. கவனமாகப் படித்து அதிலும் முதல் மார்க்கு வாங்கிச் சீக்கிரத்திலேயே எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து விட்டான். மேல் படிப்புக்கு அனுப்ப அப்பாவால் ஆகவில்லை. வேலை ஏதாவது தேடுவோம் என்று பார்த்தாலோ மோகனுக்கு இன்னும் வயதும் ஆகவில்லை. என்ன செய்வது?

மோகனைப் பக்கத்து ஊர் லலிதா நகருக்கு அனுப்பித் தினமும் டைப்ரைட்டிங்கும் சுருக்கெழுத்தும் கற்றுவர ஏற்பாடு செய்திருந்தார் மங்கேஷ் ராவ். அது என்ன? ஒரு மணி நேரத்து வேலை. ஒரு வண்டியில் போய் மறு வண்டியில் திரும்பி விடுவான் மோகன். மிகுந்த பொழுதெல்லாம் அப்பாவுடன் ஸ்டேஷனிலேயேதான் கிடப்பான்.

அப்பா செய்யும் வேலையனைத்தையும் தினம் கவனித்து வந்த அவன், நாளடைவில் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு விட்டான்.

"இப்படி நகரு, அப்பா! நான் டிக்கட்டு கொடுக்கிறேன்" என்பான். 'டக் டக்' என்று டிக்கட்டு அடித்து அத்தனை பெரிய கும்பலையும் ஒரு நிமிஷத்தில் ஊதித் தள்ளி விடுவான். வண்டி போகவிட்டுக் கணக்குப் பார்த்தால் பணமும் சரியாகவே யிருக்கும். மங்கேஷ் ராவ் ரயிலுக்குச் சாவியெடுக்கப் போகும்போதும், "நான் எடுத்துப் பார்க்கிறேனே, அப்பா!" என்று அவர் பின்னாலேயே ஓடுவான். உடனே அப்பா செய்வது போல் 'பிளாக்' பண்ணிச் சாவியும் எடுத்து விடுவான். பையன் சமர்த்தை மங்கேஷ் ராவ் மனத்துள் மெச்சிக் கொண்டாலும், "ஏய், இதையெல்லாம் தொடப்படாதுடா, நீ!" என்று பிரியமாய்க் கண்டிப்பார்.

மோகனுக் கென்னவோ, அதையும் இதையும் செய்யக் கொள்ளை ஆவல். எப்பொழுதும் ஸ்டேஷனிலேயே ஏதோ டியூட்டி பார்ப்பதுபோல் சுற்றிக் கொண்டிருந்தான்.

வண்டி வரும்பொழுது கைகாட்டி இறக்குவதற்குக் கூட 'நான்' என்று போய் நிற்பான். லிவரைப் பிடித்துத் தன் பலம் கொண்டவரைக்கும் இழுத்து 'கரெக்டாக'க் கையை இறக்கி விடுவான். அதுமாதிரியே வண்டி போன பிறகும், அவனே கையைத் தூக்கியும் விடுவான்.

இப்படி சிறுகச் சிறுக மோகன் ரயில் வேலை அத்தனையும் கற்றுக் கொண்டு விட்டதால், லீலா நகர் ஸ்டேஷனுக்கு அவன் இன்றியமையாதவனாகி விட்டான். ஒரு பக்கம் அப்பாவுக்கு உதவி; மற்றொரு பக்கம் சமயத்தில் பாயிண்ட்ஸ்மேன்களுக்கும் உதவி.

வேறு வேலை யில்லாத மோகனுக்கும் காலம் தமாஷாகப் போய்க் கொண்டிருந்தது.

மோகனை இம்மாதிரி அனுமதிப்பது சட்டப்படி தப்பிதமாயிற்றே என்று மங்கேஷ்ராவுக்குத் தெரியாமல் இல்லை. இருந்தும் அவன் உதவியால் அவர் வேலை சற்று லகுவாய்ப் போய்க் கொண்டிருந்ததல்லவா? அதனால் பேசாமல் இருந்து வந்தார்.

★

அன்று லிலா நகர் ஸ்டேஷனில் இரண்டு ரயில்கள் சந்திப்பு. முதல் வண்டி வந்து நின்று விட்டது. இரண்டாவது வண்டிக்காக லயன் மாற்றிக் கை இறக்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது முதல் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்த ரயில்வே சூப்பரிண்டு, வண்டி சற்று அதிக நேரம் நிற்கவே இறங்கினார்; நேரே ஸ்டேஷனுக்குள் வந்தார்.

மங்கேஷ் ராவ் அடுத்த வண்டிக்குச் சாவியெடுத்துக் கொண்டிருந்தார். மோகன் 'டக் டக்' என்று டிக்கட்டு அடித்துக் கொண்டிருந்தான்.

அப்பொழுதுதான் கையுங் களவுமாக அகப்பட்டுக்கொண்டார் ஸ்டேஷன் மாஸ்டர்.

"யாரது, அங்கே டிக்கட்டு அடிப்பது?" என்று கேட்டார் சூப்பரிண்டு.

"நம் பையன்தான், சார்! கையில் 'நகச்சுத்தி' எனக்கு; டிக்கட்டு அடிக்க முடியவில்லை" என்று சுனசுரத்துடன் சொல்லிக் கைவிரலையும் காட்டினார் மங்கேஷ்ராவ்.

"நோ, நோ! அதற்காகப் பையனை விட்டு டிக்கட்டு அடிக்கச் சொல்கிறதா?" என்று கர்ஜித்தார் சூப்பரிண்டு. ஸ்டேஷன் மாஸ்டர் தலை குனிந்து நின்றார். அதற்குள் நேரமாகி விடவே சூப்பரிண்டு ரயிலேறி விட்டார்.


**கல்கி**

(வாரப் பதிப்பு)

**சந்தா விவரம்**

| | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா, சிலோன் | ரூ. 13-0-0 | 6-8-0 |
| பர்மா, மலேயா, வெளிநாடு | ரூ. 14-10-0 | 7-5-0 |

குறிப்பு:—வி. பி. பி. மூலம் அனுப்புவது கிடையாது. தயவு செய்து முன் பணம் அனுப்ப வேண்டும். சிலோன் நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தாத் தொகையைச் செலுத்தலாம்.

கடிதம் எழுதும்போது சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர் - கல்கி காரியாலயம் - சென்னை


ஆபீசுக்குப் போனதும் போகாததுமாகச் சூப்பரிண்டு முதல் வேலையாக மங்கேஷ் ராவுக்கு 'சார்ஜ் ஷீட்' அனுப்பி வைத்தார்.

ஸ்டேஷன் மாஸ்டருக்கு ரொம்பவும் வருத்தம். அப்பொழுதே பையனை வெளியிலனுப்பி விட்டதாகவும், இது குறித்துத் தம்மை மன்னித்து விடும்படியும் ரொம்ப தூரம் வளைத்து வளைத்துப் பணிவாகப் பதில் எழுதினார். ஆபீசர் அதைப் படித்துப் பார்த்தார். ஆயினும் அடுத்த தபாலிலேயே 'ஆறு மாதம் சம்பள உயர்வு கிடையாது'. என்று மங்கேஷ் ராவுக்குத் தண்டனை வந்துவிட்டது. அதைப் படித்துப் பார்த்துவிட்டுத் தலையிலடித்துக் கொண்டார் ஸ்டேஷன் மாஸ்டர். அந்த நிமிஷத்திலிருந்தே மோகன் ஸ்டேஷன் பக்கம் வராமல் அடியோடு கிறுத் தப்பட்டு விட்டான்.

இருந்தும் பையனைப் பார்க்கும் பொழுதெல்லாம், "உன்னைக் கண்டால் எனக்கு ஆறு நான்கு இருபத்து நான்கு ரூபாய் ஞாபகம் வருகிறதடா!" என்று அடிக்கடி சலிப்புடன் சொல்வார் ஸ்டேஷன் மாஸ்டர்.

மங்கேஷ் ராவ் தமக்கு வந்த தண்டனையைக் குறித்து மேல் அதிகாரிக்கு 'அப்பீல்' பண்ணினார். "உமக்குக் கொடுத்திருக்கும் தண்டனையே மிகக் குறைவானது" என்று கடச்சுட பதில் வந்து விட்டது.

★

அன்று அப்பாவுக்குச் சம்பள தினம். ரகசியமாக அம்மாவிடம் பணம் வாங்கிக் கொண்டு மோகன் லலிதா நகருக்குச் சினிமா பார்க்கச் சென்று விட்டான். மின்சாரக் கோளாறினால் படம் நின்று நின்று ஓடியது. ஆட்டம் விட வெகுநேரம் ஆகிவிடவே, பத்து மணி ஷட்டில் கூடப்போய் விட்டது.

திரும்பிவர வண்டியே யில்லை. நல்ல பால் போன்ற நிலவு காயவே, ரயில்வே லயன் ஓரமாக நடக்க ஆரம்பித்தான் மோகன். இரவு வெகுநேரம் ஆகிவிட்டிருந்தது. கண்ணுக் கெட்டின தூரம் ஒருவரையுமே காணோம். மோகன் பல சினிமாப் பாட்டுகளை வாய் விட்டுப் பாடிக்கொண்டே நடந்தான்.

பாதி தூரத்தில் ஒரு 'லெவல் கிராசிங்' இருந்தது. அந்த வழியாக நிறைய அரிசி மூட்டைகள் ஏற்றிய லாரி ஒன்று கடந்து செல்லும் பொழுது, டயர் வெடித்து லயனுக்குக் குறுக்கே அப்படியே உட்கார்ந்து விட்டது. டிரைவரும், கூடவந்த ஆட்களும் கூடி என்னென்னவோ செய்து பார்த்தார்கள். லாரியை இப்படியும் தள்ள முடியவில்லை; அப்படியும் தள்ள முடியவில்லை. மோகனும் அவர்களுக்கு உதவியாக வந்து சேர்ந்தான். அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

அதற்குள் தூரத்தில் வெளிச்சம் தெரிந்தது. அது போட்மெயில் வரும் வேளையல்லவா? "ஐயையோ!" என்று கத்திக் கொண்டே ஓடிவிட்டான் லாரி டிரைவர்.

மோகன் பரபரப்புடன் அங்கிருந்த அறையை எட்டிப் பார்த்தான். அங்கு கேட்டுக்காரனைக் காணோம். ஆனால் சிக்னல் விளக்கும் வெடி டப்பாவும் இருந்தன.

கையோடு வெடி டப்பாவை யெடுத்துக் கொண்டு சிக்னல் விளக்குடன், வண்டி வரும் திக்கை நோக்கி ஓடினான் மோகன். அவனுக்குத்தான் இம்மாதிரி அபாய சமயத்தில் என்ன செய்ய வேண்டுமென்று நன்றாய்த் தெரியுமே! வெகு தூரம் ஓடிச்சென்று வெடிகளை யெடுத்து வரிசையாக லயனில் வைத்துக் கட்டினான். அதோடு அபாய அறிவிப்புக்காக 'சிக்னல்' விளக்கில் சிகப்பு வெளிச்சத்தைப் போட்டுக்கொண்டு நின்றான். அதற்குள் ரயிலும் வந்து விட்டது. மேலே ஓடினதும் 'பட் படார்' என்று வெடிகள் வெடித்தன. அதோடு என்ஜின் டிரைவரும் அபாய அறிவிப்பைக் 'கண்டு' 'பிரேக்' போட ஆரம்பித்தான். அதிவேகமாய் வரும் வண்டியை உடனே நிறுத்த முடியுமா? ஏதோ லாரியை மோத வந்தது போல் ஓடிவந்து மயிர் இழை தூரத்தில் நின்றது ரயில்.

உடனே டிரைவர், கார்டு எல்லாரும் இறங்கி வந்தார்கள். தான் செய்ததை மோகன் அவர்களுக்கு விளக்கினான். அனைவரும் சிறுவனை மிகவும் மெச்சி, முதுகைத் தட்டிக் கொடுத்தார்கள். அப்புறம் லாரி வெளியே நகர்த்தப் பட்டது. ரயிலும் எவ்வித அபாயமுமில்லாமல் புறப்பட்டது.

ரயில்வே நிர்வாகத்தார், அபாயத்தைத் தவிர்த்த மோகனுக்குப் பரிசு வழங்க அழைத்திருந்தார்கள். மங்கேஷ் ராவ்தான் பையனை அழைத்துக் கொண்டு போயிருந்தார். அவன் கையில் ஒரு பணப் பையைக் கொடுத்து, வயது ஆனதும் ரயில்வேயிலேயே வேலை கொடுப்பதாயும் உறுதியளித்தார் ஜெனரல் மானேஜர். உமது பையனுக்கு எல்லா வேலைகளையும் இப்பொழுதே கற்றுக் கொடுத்து வைத்திருக்கிறீரே என்று ஸ்டேஷன் மாஸ்டரையும் வெகுவாகப் புகழ்ந்தார்.

அதே சமயம், சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் முன்பு தமக்கு வந்த தண்டனையை ரத்து செய்து விடும்படி கேட்டுக் கொண்டார் மங்கேஷ் ராவ். "சரி, ஆகட்டும்" என்று நல்ல பதிலையே சொல்லியனுப்பினார் துரை.

அவர் சொன்ன படியே மறு நாளுக்கு மறு நாளே தண்டனை ரத்து ஆனதாக ஆபீஸிலிருந்து கடிதமும் வந்து விட்டது.

"முன்புதான் என்னைக் காணும் பொழுதெல்லாம் ஆறு நான்கு இருபத்து நான்கு ரூபாய் ஞாபகம் வந்ததாகச் சொல்வாய். இப்பொழுது என்ன அப்பா ஞாபகம் வருகிறது, என்னைப் பார்த்ததும்?" என்று குத்தலாகக் கேட்டான் மோகன்.

"போடா, போக்கிரிப் பயலே!" என்று அவனைப் பிரியமாய் அடிக்கக் கையை ஓங்கினார் மங்கேஷ்ராவ். அதுவரை அங்கு நிற்க மோகனுக்கு என்ன பைத்தியமா?

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 56. ஜானுசிர்ஷாசனமும் பெண்களும்

ஜானுசிர்ஷாசனமானது பெண்களுக்கு மிக மிக அவசியமானது. அவர்களை என்றும் எப்பொழுதும் ஆரோக்கியமாய் வைத்திருக்கும். கர்ப்ப சம்பந்தமாகவும் வீட்டு விலக்கு சம்பந்தமாகவும் எந்தவிதக் கோளாறுகளும் வராது. அப்படி வந்தவர்களும் செய்தால் குறைகள் நீங்கிச் சுகமடையலாம். பெண்களுக்கு ஓவரீஸ் என்ற இரண்டு கோளங்கள் அடி வயிற்றில் இரண்டு பக்கங்களில் இருக்கின்றன. அக்கோளங்களிலிருந்து இரண்டு பக்கமும் நரம்புகள் வந்து கர்ப்பப் பையுடன் இணைகின்றன. பெண்களுக்கு இந்த ஓவரீஸ் என்ற கோளங்களும் அதன் வழி நரம்பும் கர்ப்பப் பையும் எதுவரை ஆரோக்கியமாய், சுகமாய், சுத்தமாய், இருக்கின்றதோ அதுவரை யாதொரு தொந்தரவும் இருக்காது. இவைகளில் ஏதாகிலும் கோளாறு ஏற்பட்டால் மாதவிடாய் சம்பந்தமான நோய்கள் பல உண்டாகும். ஓவரீஸ் கோளங்களும் பாதிக்கப்படலாம். அதன் வழி நரம்புகள் அழன்றும் பாதிக்கப் படலாம். கர்ப்பப் பையும் பலவிதத்தில் பாதிக்கப் படலாம். இவைகள் பாதிப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. முக்கியமாய்ச் சரியான தேகப்பயிற்சி இன்மையே, இம்மாதிரி கோளாறுகளில் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு வருவதற்குக் காரணம் எனலாம். மீதி பத்து பங்கு மற்றக் காரணங்களால் வரும் என்று சொல்லலாம். எது எந்தக் காரணத்தால் வந்தாலும் இந்த ஜானு சிர்ஷாசனத்தைச் செய்து போக்கடித்துக் கொள்ளலாம். ஒரு கோளாறும் இல்லாதவர்கள் ஜானு சிர்ஷாசனத்தைச் செய்தார்களானால் என்றும் எந்தக் கோளாறும் வராமல் நிம்மதியாய், ஆரோக்கியமாய் வாழலாம். ஒரு குடும்பத்தில் ஆனந்தம், மகிழ்ச்சி, ஆரோக்கியம், சுகம், முதலியவைகளெல்லாம் பெண்கள் கையில் இருக்கின்றன. சிலர் "குடும்பங்களில் பெண்கள் அழகாக இருந்தால்தான் ஆனந்தமாய் இருக்கும்" என்பார்கள். சிலர் "நல்ல கல்வி அறிவுடைய பெண்களால்தான் குடும்பம் முன்னுக்கு வரும்" என்பார்கள். சிலர் "நல்ல ஐஸ்வரியத்துடன் பெண்கள் கிடைத்தால்தான் குடும்பத்தில் சுகமாய் நாள் கடத்த முடியும்" என்பார்கள். சிலர் குழந்தைகள் பல இருந்தால்தான் குடும்பம் நிறைந்து காணும் என்பார்கள்.

இவர்கள் சொல்லும் அத்தனையும் இருந்துவிட்டு அக் குடும்பங்களிலுள்ள பெண்களுக்கு ஆரோக்கியம் மட்டும் இருக்கவில்லை யென்றால், அழகு, பணம், கல்வி, கல்வி, குழந்தைகள் முதல் எதுவுமே இன்பமளிக்காது. பட்டவர்களுக்கல்லவா அதன் கஷ்டம் தெரியும்! கண்ணிறைந்த மனைவி யிருப்பாள். ஆனால் எந்நேரமும் உடல் அசௌகரியம் என்றால் என்ன செய்வது! பணம் நிறைய இருக்



"நவீன விஞ்ஞான அபிவிருத்தி காரணமாக என் வாழ்நாளில் ஒரு வருஷம் வீணாகப் போய் விட்டது!"

"ஏன்? உங்களுக்கு ஏதாவது ஆப்பரேஷன் தவறாகச் செய்துவிட்டார்களா?"

"இல்லை, இல்லை. என் கை ரேகைகளை நிபுணர்கள் சரியாகக் கண்டு பிடித்து விட்டதன் காரணமாக நான் ஒரு வருஷம் சிறையில் இருக்க வேண்டி நேர்ந்து விட்டது!"

கிறது. ஆனால் இல்லாளுக்குச் சதா நோய் என்றால் என்ன செய்ய முடியும்? கல்வி, அறிவு, அடக்கம், புத்திசாலித்தனம் முதலிய பெண்களுக்கு உண்டான சகல அம்சங்களும் பூரணமாய் அமைந்திருக்கிறது மனைத் தலைவியிடம். ஆனால் ஆரோக்கியம் கெட்டு எந்நேரமும் மருந்துடன் வாழ்க்கை நடத்த வேண்டி யிருக்கிறது என்றால் அக் குடும்பத்தில் பூரண இன்பம் காண முடியுமா! குழந்தைகள் நிறைய இருக்கின்றன. ஆனால் அவைகளும் நோய் கொள்ளுகின்றன. மனையாட்டியும் நோய்ப் படுக்கையில் இருக்கிறாள் என்றால் அக் குடும்பத்தில் சாந்தி நிலவுமா! இன்பம் காண முடியுமா! எல்லாவற்றிற்கும் ஆரோக்கியம் அடிப்படையாக இருந்தால்தான் பூரணமாய் அமையும். இல்லறமும் நல்லறமாகும்.

சில காலத்திற்கு முன்பெல்லாம் பெண்கள் புஷ்பவதி ஆகும் வரை, படித்து அதன் பின் கலியாணம் ஆகும்வரை வீட்டில் தாயாருக்குத் துணையாக இருந்து, வீட்டு வேலை, வீட்டு நிர்வாகம் குழந்தை வளர்ப்பு முதலியனவெல்லாம் கற்றுக் கொள்வார்கள். அத்துடன் கூடத் தையல் வேலை பலவித பூ வேலைகள் செய்து வீட்டை அலங்கரிப்பார்கள். கலியாணம் ஆவதற்குள் பெண்கள் ஒரு குடும்பத்தை ஏற்று நடத்தக்கூடிய திறமையை அடைந்து விடுவார்கள். பிறகு சிறிது நாகரிகம் ஏற்பட்டது. பாடத் தெரியுமா என்று கேட்க ஆரம்பித்தார்கள். அதைவிட நாகரிகம் ஏற்பட்டதும் உயர்தர ஆங்கிலக் கல்வி தெரியுமா! என்று கேட்க ஆரம்பித்தார்கள். இப்பொழுது அந்த நாகரிகம் முற்றி ஆடத் தெரியுமா என்றும் கேட்க ஆரம்பித்து விட்டனர். ஆனால் எந்த கணவனோ, மாமியாரோ, பிற ஆடவர் முன், தன் மனைவி, மாட்டுப் பெண் ஆடுவதைக் கண்டு பூரிப்பார்கள் என்று சொல்ல முடியுமா! இதைத் தவிர முன்பெல்லாம் பெண்களுக்குப் பரியம் கொடுப்பது உண்டு. இப்போது ஆண்களுக்குப் பரியம் கொடுக்கும் காலமாய் இருக்கிறது. இதற்குப் பயந்து பெண்கள் சுயமாகச் சம்பாதிக்கும் அளவு படிக்க வைத்து விடுவது என்று படிக்க வைக்கின்றனர். இவர்களின் படிப்பு ஏற ஏற அதற்குத் தகுந்த மாப்பிள்ளையும் தேட வேண்டியதாய் இருக்கிறது. கிடைக்க வில்லையானால் வேலை கையில் இருக்கவே இருக்கிறது. இப்படிப் பெண்கள் போட்டி, போட்டுக் கொண்டு படித்தால் அறிவு உலகம் ஒருவழியில் முன்னேறினாலும், அவர்களின் ஆரோக்கியம் கெடத்தான் செய்கிறது. எவ்வளவு படிப் பெறுகின்றதோ அவ்வளவிற்கும் தடுக்கினால் விழுந்து விடுவதைப் போல் இருப்பார்கள். இவர்களிடம் மேல் அலங்காரங்கள் தவிர உடல் உறுதி, உடல் ஆரோக்கியம் காண்பது அரிது. இப்படி இருப்பவர்களின் உடல் ஆரோக்கியத்தைச் சோதித்தால் பல கோளாறுகள் இருக்கும். இத் தனைக்கும் சரியான தேகப் பயிற்சி இல்லாத கோளாறே காரணம் ஆகும்.

இவை எல்லாம் விட்டுப் பெண் நல்ல ஆரோக்கியமாய் இருக்கிறாளா! அவள் ஒரு குடும்பத்தை ஏற்று நடத்தக்கூடிய உடல்திடம் படைத்தவளா! என்று முதல் குறிப்பாகப் பார்த்து மற்றவைகளைப் பின் பார்க்க ஆரம்பித்தால் நல்லது. பெண்ணுக்கு க்ஷயம் உள்ளுக்கு இருக்கும். பட்டாடை கட்டி, நகைகளை அணிவித்து முன் நிறுத்தினதும் பெண் நன்றாய் இருக்கிறாள் என்று தீர்மானித்து விடுவார்கள். பிறகு குடும்பம் நடக்கும் போது அந்த நோய் அப்பெண்ணுடன் மட்டுமா போகும்! புருஷனுக்கு மல்லவா பாயும்! பிறகு பிறக்கும் குழந்தைகள் என்ன ஆவது! குளிக்கப் போய்ச் சேற்றை வாரிப் பூசிக் கொண்டதற் கொப்பாகும். ஆகவே பெண்கள் ஆரோக்கியம் தான் மிக முக்கியம். அவர்கள் உடலுறுதியுடன் ஆரோக்கியத்துடன் இருந்தால்தான் நல்லது. அதற்கு இந்த ஜானு சிர்ஷாசனம் தீவிரமாய்ச் செய்ய வேண்டும். அத்துடன் சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம் செய்தால் அதற்குத் துணையாய் அமையும். கருப்பப்பை உறுதியுடன் இருந்தால் கருச் சிதைவுகள் உண்டாகாது. நல்ல திடமான குழந்தைகள் நிறை மாதத்தில் பிறக்கும். குழந்தைகளுக்கு வேண்டிய பாலும் சுரக்கும். குழந்தைகளும் ஆரோக்கியமாய் இருக்கும். இவைகளுக்கு ஜீவாதாரமான ஓவரீஸ் கோளங்களும் அதன் சம்பந்தப்பட்ட நரம்புகளும் கருப்பப் பையும் நன்கு அழுத்தப்படுவதால் அவை சுறு சுறுப்பெய்தி ஆரோக்கியமாய் இருக்கும். சில ஆண்கள் செய்யும் கோரச் செயல்களால் அவர்களுக்கு நோய்கள் வந்து தாங்கள் கஷ்டப் படுவது மல்லாமல், அதைத் தங்கள் மனைவிகளுக்கும் பரிமாறி விடுகின்றனர். இதனாலும் பெண்கள் அவயவங்கள் கேடு அடைவதுண்டு. இம்மாதிரியானவர்களுக்குப் பல கோளாறுகள் உண்டாகும். அவை அத்தனைக்கும் இந்த யோகாசனங்கள்தான் சிறந்த நிவாரணம் ஆகும். இளம் பெண்களும் இந்த ஜானு சிர்ஷாசனத்தையும் மற்றும் சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனத்தையும் செய்வார்களானால் எதிர் காலத்தில் தாயார் ஸ்தானம் வகிப்பதற்குச் சரியான குடும்பத் தலைவி ஆவதற்கு இப்பொழுதிருந்தே அஸ்திவாரம் போட்டவர்களாவார்கள். இவர்கள் புகும் இல்லம் சுவர்க்கமே யாகும். இவர்களைக் கொள்ளும் கணவன் பெரும் பாக்கியவானாவான். இவர்களை மருமகளாகப் பெறும் மாமியார் புண்ணியவதி ஆவாள். எனவே 'பாடத் தெரியுமா! ஆடத் தெரியுமா! பரியம் எவ்வளவு கிடைக்கும்! நகை எவ்வளவு போடுவீர்கள்! சீர் என்ன செய்வீர்கள்' என்று கேட்பதற்குப் பதிலாகப் பொதுவாய் யோகாசனங்கள் செய்யத் தெரியுமா! என்று கேட்கும் பழக்கத்தையும் ஏற்படுத்திக் கொண்டால் நன்றாய் இருக்கும். (தொடரும்)

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்

•

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் **நீரிழிவு (DIABETES)** என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ள வரை சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள், சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்தினின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறுநீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறு நீரும் குறைகிறது. 3-வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்குமேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் கிடையாது; இன்ஜக்ஷன் கிடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

•

**50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0**

(பாக்கிங், தபால் செலவும் இனம்)

•

**வீனஸ் ரிஸர்ச் லாபரட்டரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**



## பிரஸிடெண்ட் வெஜிடெபிள் ஹேர் ஆயில்





பிரபல ஸினிமா நக்ஷத்திர நடிகை ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரி கூறுவது: "நான் பிரஸிடெண்ட் வெஜிடபிள் ஹேர் ஆயில் உபயோகித்ததில் அது கேசத்திற்கு சிறந்த கூந்தல் தைலம் என்பதை அறியலானேன். இது கேச வளர்ச்சியை அபாரமாக அளிப்பது மட்டுமின்றி தேகத்திற்குக் குளிர்ச்சியையும் அளிக்கிறது."

தயாரிப்பவர்கள்:

**ரத்தோட் டிரேடிங் கம்பெனி**

**மதராஸ்-1**



PBT-11-TAM



**பைல் பீன்ஸ் உங்களை ஒல்லியாகவும் யௌவனமாகவும் இருக்கச்செய்கிறது**

உலக முழுவதிலுமுள்ள மக்கள் முறைப்பிரகாரம் பைல் பீன்ஸ் சாப்பிடுவதால் யௌவனமும் இளமையும் ஒல்லியுமாக ஆரோக்கியமான தோற்றத்துடன் இருக்கிறார்கள். டாக்டர்கள் அங்கீகாரம் பெற்ற பைல் பீன்ஸ் என்னும் டானிக் மலக்கட்டு மருந்து மலச்சிக்கலுக்கு சிறந்த நிவாரணியாகும். மேலும் அஜீரணம் மற்றுமுள்ள பல நோய்களை அது தீர்க்கும். இன்றே பைல் பீன்ஸை நியமமாக உட்கொள்ள ஆரம்பியுங்கள்.

டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொண்டு வாழ்க்கை இன்பத்தை பூரணமாகப் பெறுங்கள்.




**பைல் பீன்ஸ்**

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மதராஸிற்கு சோல் ஏஜண்டுகள்: தாதா & கோ., பார்க்டவுன்

# பெற்ற மனம்

சௌரி

ஆறு வயதுப் பாலகனிடத்தில் போய்த் தன் அதிகாரத்தையும், உரிமையையும் காட்டி இப்படி இளக்காரமாகப் பேசுகிறோமே என்பதைப் பவானி சிறிதுகூட உணர்ந்து கொள்ளவில்லை.

"எப்போதான் பணம் கொடுக்கிறதாக எண்ணம்! மாசம் நாலு ஆச்சு என்பது உன் அம்மாவுக்குத் தெரியாதா!" பவானி கண்கள் சிவக்க இரைந்து கொண்டிருந்தாள்.

எதிரில் குறுகிப்போய் உட்கார்ந்திருந்த சிறுவன் கண்ணன் திணறித் திக்கிக் கொண்டே, "வந்து, வந்து. இன்னும் பத்து நாளில் கொடுக்கிறேன்னு, அம்மா சொன்னாங்க" என்றான்.

"மாசா மாசம் இதே எப்புத்தானே! இந்தத் தடவை கொடுக்காமல் இருக்கட்டும், அப்புறம் சொல்றேன். பணம் கொடுக்க வழி இல்லாவிட்டால் 'ட்யூஷன்' வைக்கக்கூடாது. கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்றால் என்ன செய்வது! நான் மட்டும் ஏமாந்தவளாக்கும்!" என்று இரைந்து விட்டு, "சரி, சரி, பாடத்தை எடு" என்று வெறுப்புடன் சொன்னாள்.

கண்ணன் ஏதோ படிப்பதாகப் பாவனை செய்து விட்டு எழுந்தான். அவளும் வேண்டா வெறுப்பாக எதையோ சொல்லி அவனை அனுப்பினாள். கண்ணனுக்கு இது புது அநுபவமில்லை. பவானிக்கும் அப்படித்தான். இருந்தாலும் கண்ணன் குடும்பத்துடன் அவளுக்கு இன்று நேற்று பழக்கமா! இருந்தென்ன! பணம் என்று வந்தால் பரிவு எல்லாம் பறந்தோடி விடாதா!

* * *

பவானி ஒரு பெண்கள் ஹைஸ்கூலில் உபாத்தியாயினி. அவள் கணவர் ஒரு பத்திரிகை ஆபீசில் குமாஸ்தா. இருவரும் உழைத்துச் சம்பாதித்ததால் பட்டண வாழ்க்கையை அதிகக் கஷ்டமில்லாமல் ஓட்ட முடிந்தது. விவாகமாகி ஏழு வருஷங்களாகியும் அவர்களுக்குச் சந்ததியில்லை. ஆரம்பத்தில் 'குழந்தை இல்லாமலிருப்பதே தேவலை' என்றிருந்த பவானிக்கு, சில வருஷங்கள் சென்றதும் குழந்தை இல்லாத குறை அவளை வாட்டத் தொடங்கியது.

சென்ற வருஷம் பவானியின் தமக்கை நாலைந்து குழந்தைகளை அநாதையாக விட்டு விட்டுக் கண்ணை மூடிவிட்டாள். அவர்களில் ஒரு பெண்ணையும், பிள்ளையையும் தான் வளர்ப்பதாக அழைத்து வந்து விட்டாள். வீட்டில் அவளது விதவை மாமியாரும் மிகப் பலவீனமாகி அடிக்கடி சுரமாகப் படுக்கத் தொடங்கி விட்டாள். பவானிக்குப் பள்ளி வேலையுடன் வீட்டு வேலையையும் கவனிக்க வேண்டியிருந்தது. செலவுக்குப் பணம் போதாத நிலை ஏற்படவே, வீட்டிலேயே சில டியூஷன்களும் வைத்துக் கொண்டாள்.

சிறு வயதிலிருந்தே பவானிக்குக் குழந்தைகள், சிறுவர்களிடத்தில் பிரியம் அதிகம். அவளுடைய இனிமையான குணத்திலும், பேச்சிலும் ஈடுபட்டுப் பல மக்கு, முரட்டுக் குழந்தைகள்கூட அவளிடம் நன்றாகப் படிக்கத் தொடங்கின. பல பணக்காரர்களும் தம் குழந்தைகளைப் பவானியிடம் அனுப்பினார்கள். அவள் சில ஏழைக் குழந்தைகளுக்கும் குறைந்த தொகைக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வந்தாள். அந்த முறையில்தான் கண்ணனும் அவளிடம் இரண்டு வருஷங்களாகப் படித்து வருகிறான்.

கண்ணனின் தாய் கமலம்மாள் ஏழை. அவள் கணவர் ஹோட்டலில் சமையற்காரர். இரண்டு பெண்களுக்குப் பிறகு அருமையாகப் பிறந்தான் கண்ணன். கமலம்மாள் எப்படியோ சிரமப்பட்டு இரண்டு பெண்களையும் சுமாரான இடத்தில் கலியாணம் செய்து கொடுத்து விட்டாள். கொஞ்ச நஞ்சமிருந்த நகை, பூர்வீக ரொக்கமெல்லாம் கரைந்து விட்டது. இந்த நிலையில் கண்ணன் ஆறு வயதை அடைந்தான். அவன் படிப்புக்காக மிகக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த போதுதான், தற்செயலாகச் சந்தித்த பவானி ஒருநாள் சொன்னாள், "என்னிடம் அனுப்புங்கள். மூன்று வருஷத்தில் அவனை இரண்டாம் பாரத்தில் சேரத் தயார் செய்து விடுகிறேன். உங்கள் சக்திப்படி கொடுக்கிறதைத் திருப்தியாய்க் கொடுங்கள். வாங்கிக் கொள்கிறேன்" என்றாள். கமலம்மாளுக்கு வித்யா தேவியே பிரசன்னமாகி வந்து வரம் அருளியது மாதிரி இருந்தது. மாதம் மூன்று ரூபாய் கொடுப்பது என்று நிச்சயமாயிற்று.

இந்த நிலையில்தான் ஒன்றரை வருடம் கடந்தது. பவானிக்கு வீட்டில் செலவினம் ஏறி, தொந்தரவும் ஏற்பட்ட மாதிரி கமலம்மாளுக்கும் சிரமமான நிலை ஏற்பட்டது. அவள் கணவர் டைபாயிட் சுரத்தில் படுத்துக் கொண்டார். அரைச் சம்பளம்தான் வந்தது. மூத்த பெண் பிரசவத்துக்கு வந்திருந்தாள். வீட்டில் பணக் கஷ்டம் சொல்லி முடியாது. இந்த நிலையில் நாலு மாதமாகப் பவானிக்குப் பணம் கொடுக்க முடியவில்லை. ஒரிரு செல்வந்தர் வீட்டில் சமை



யல் செய்தாவது பவானிக்குப் பணத்தைக் கொடுத்து விடத் தீர்மானித்திருந்தாள்.

* * *

**ப**வானி இப்போது பூர்ண கர்ப்பவதியாகியிருந்தாள். பள்ளிக்கு நீண்ட லீவைப் போட்டுவிட்டு, வீட்டிலேயே கொஞ்சம் அதிக டியூஷன் வைத்துக் கொண்டாள். பணமுடை அதிகமாயிருந்தது. கண்ணன் பணம் இப்போது இருபது ரூபாய் பாக்கி நின்றது. கமலம்மாள் நேரில் வந்து பவானியின் காலில் விழுந்து கெஞ்சியதால், அவள் கண்ணனுக்குச் சொல்லிக் கொடுப்பதை நிறுத்தவில்லை. பவானி மட்டும் முடைப் பட்டபோதெல்லாம் கண்ணனை அதட்டி, வைது பணம் வாங்கி வரத் தூண்டுவாள். எப்படியோ சிரமப்பட்டு ஒன்று, இரண்டு என்று கையில் கிடைத்ததைக் கமலம்மாளும் அனுப்பி வைக்கத் தவறுவதில்லை.

முதல் பிரசவமாதலால் பவானியை ஆஸ்பத்திரியிலேயே கொண்டு வந்துவிட வேணுமென்று டாக்டர் சொல்லி விட்டார். "ஒரு மாதமாவது தங்க வேண்டியிருக்குமே! வீட்டை யார் கவனித்துக் கொள்வது!" என்ற கவலை பவானியை வாட்டியது. கணவர் தைரியம் சொன்னதும் சரியென்று ஆஸ்பத்திரிக்குப் போனாள். ஒரு வாரத்தை எப்படியோ பவானியின் கணவர் ஓட்டிவிட்டார். இரண்டு குழந்தைகள், வியாதிக்காரியான தாய் இவர்களைக் கவனிப்பதோடு, பவானியின் டியூஷன்களையும் கவனிக்க வேண்டும். இவைகளோடு தினம் ஆஸ்பத்திரிக்குச் சாப்பாடு எடுத்துப் போக வேண்டும். ஆபீஸ் வேலைகளையும் கவனித்துக் கொள்ள வேண்டும். அவரால் சமாளிக்க முடியவில்லை. குறைந்த சம்பளத்தில் ஓர் சமையற்கார அம்மாள் வேண்டுமென்று பலரிடமும் சொல்லி வந்தார். வீட்டுக்கு வரும் டியூஷன் மாணவர்களிடம்கூட இதைப்பற்றிச் சொல்லி வைத்தார்.

ஒரு வாரம் எங்கு தேடியும் சமையற்காரி கிடைக்கவில்லை. ஒரு நாள் சற்று வயதான அம்மாள் ஒருத்தி தாமாகவே பவானி வீட்டுக்கு வந்து கொடுக்கிற சம்பளம் போதுமென்று வேலைக்கு அமர்ந்தாள். பவானியின் கணவருக்கு ஆச்சரியமும் ஆனந்தமுமாக இருந்தது.

பவானிக்கு நல்ல தினத்தில் ஆண் மகவு பிறந்தது. எல்லோருக்கும் மகிழ்ச்சி தாங்கவில்லை. அன்று சமையற்கார அம்மாள் குதூகலத்துடன் பெரிய விருந்தே செய்துவிட்டாள். தினம் பவானியிடம் அவள் கணவர் அந்த அம்மாவின் பெருந்தன்மை, பொறுப்பு முதலிய நற்குணங்களை வாயாரப் புகழ்ந்து வந்தார். வீட்டுக்கு வந்ததும் அந்த அம்மாவுக்கு மனப்பூர்வமாய் நன்றி செலுத்தி, நல்ல புடவை ஒன்றும் வாங்கிக் கொடுக்க வேணுமென்று பவானி எண்ணிக் கொண்டாள்.

பிள்ளை பிறந்ததும் பவானியின் உள்ளத்தில் ஓர் பாசத் தொடர் விரிந்து கொண்டிருந்தது. 'தன் கண்மணி எப்படி வளர வேண்டும், என்னென்ன படிக்க வேண்டும், பெரிய பெரிய பதவிகளெல்லாம் பெற்று, பொருளும், புகழுமாகப் பெருகி வாழ வேண்டும். அதையெல்லாம் கண்ணாரக் கண்டு பூரிக்கும் இன்பம்தான் பேரின்பம்......' இப்படியெல்லாம் பவானி தன் இனம் கண்மணியின் வருங்கால வாழ்வைப் பற்றிப் பலப் பல திட்டங்களை உருவாக்கிக் கொண்டிருந்தாள். அப்போதுதான் தாயுள்ளத்தின் பண்பையும், பெருமையையும் அவளால் உணர முடிந்தது.

பவானிக்கு வீட்டுக்குப் போக ஒரு வாரம்தான் இருந்தது. நாள் நெருங்க நெருங்க அவளுக்குச் சிறிய நேரமும் யுகமாக இருந்தது. இதற்கிடையில்தான் எதிர் பாராமல் பவானிக்கு ஜுரம் வந்து விட்டது. பூர்ண குணமான பிறகுதான் வீட்டிற்குப் போகலாமென்று டாக்டர் சொல்லி ஆஸ்பத்திரியிலேயே பவானியைத் தங்கும்படி செய்து விட்டார்.



ஒரு மாதமானதும் பவானியின் கணவர் பத்து ரூபாயைச் சமையற்கார அம்மாளிடம் கொடுக்கப்போனார். "பவானி நல்லபடியாக வந்து சேர்ந்ததும், அவள் கையாலேயே வாங்கிக் கொள்கிறேன். இன்னும் கொஞ்ச நாள்தானே. அவள் வந்த பிறகும் கூட உடம்பு தேறுகிறவரை நான் வந்து போகிறேன்" என்று அந்த அம்மாள் உறுதியாகச் சொல்லி விட்டாள். இதையறிந்ததும் பவானிகூட அந்த சமையற்கார அம்மாவை வாழ்த்தினாள்.

இரண்டுமாத காலத்து ஆஸ்பத்திரி வாழ்க்கையிலிருந்து விடுதலை பெற்றுப் பவானி வீடு வந்து சேர்ந்தாள். வந்ததும் முதற் காரியமாகச் சமையற்கார அம்மாளைக் காண அவள் உள்ளம் பறந்து கொண்டிருந்தது. புழக்கடை கிணற்றடியில் அந்த அம்மாள் பாத்திரங்களைத் துலக்கிக் கொண்டிருந்தாள். பவானி அன்பும், ஆர்வமும் அலைமோத அங்கே சென்றாள்.

அந்த அம்மாளைப் பார்த்ததும் பவானி சிலைபோல நின்று விட்டாள்.













பச்சாத்தாபம், இரக்கம், மதிப்பு, கூச்சம் முதலிய பல மாறுபட்ட உணர்ச்சிகள் அவளைச் சிறிது நேரம் செயலற்று நிற்கச் செய்து விட்டன. அங்கே இருந்தவள் வேறு யாருமில்லை. சிறுவன் கண்ணனின் தாய் கமலம்மாள்தான்.

வெட்கமும், அவமானமும் பவானியைக் குன்றச் செய்து விட்டன. இரண்டு மாதங்களாகியும் பணம் வாங்கிக் கொள்ளாமல் உள்ளன்போடு பணிபுரியும் கமலம்மாளை நிமிர்ந்து பார்க்கவே பவானிக்குக் கூச்சமாக இருந்தது.

அப்பொழுது அவள் மனக் கண்முன் தன்னுடைய பழைய செய்கைகள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக வந்தது. தான் ஏழை என்றும் எளியவர்கள் என்றும் பாராமல் அவர்களுடைய கஷ்ட நஷ்டங்களை எல்லாம் சிறிதுகூட உணராமல் பணம் வேண்டும் என்று படுத்திய இரக்கமற்ற செய்கைகள் நினைவுக்கு வந்தன.

சிறுவன் கண்ணன் தாயாரின் தாய் உள்ளத்தை உணராமல் அவளிடம் மாதம் தவறாமல் பணம் வாங்கியதையும், அவள் தன் காலில் வந்து விழுந்து பல்லைக் காட்டியதையும் நினைத்தாள். அவள் தன் குழந்தையின் நல் வாழ்வுக்காக தன்னுடைய சுய மரியாதையை மறந்து தன்னிடம் நடந்து கொண்டதை நினைத்தாள். அவள் இதயத்தில் பொங்கிப் பூரித்திருந்த தாய்மை உணர்ச்சி, தன் குழந்தையிடம் இருந்த அன்பு, அவன் பெரிய மனிதனாக அறிவுள்ளவனாக விளங்குவதற்கு அவள் எடுத்துக் கொண்ட முயற்சி எல்லாவற்றையும் நினைத்தாள். பவானியின் இதயத்தில் ஒரு துடிப்பு ஏற்பட்டது. அவள் கண்கள் கலங்கின.

இது எல்லாவற்றையும் விட, தான் ஆஸ்பத்திரியில் படுத்த படுக்கையில் கிடந்தபோது தன்னுடைய சுக சௌகரியங்களை எல்லாம் மறந்து தன் குழந்தைக்குக் கல்வி புகட்டிய ஒரே காரணத்துக்காக நன்றி புணர்ச்சியுடன் நடந்து கொண்ட அவள் பண்பு அவளுக்குத் தன் வாழ் நாளிலேயே இதுவரையில் எந்தப் பள்ளிக்கூடமும், படிப்பும் சொல்லிக் கொடுக்காத உயர்ந்த அறிவைப் புகட்டி விட்டது. அதை எண்ணி அப்படியே தன்னை மறந்து நின்று விட்டாள்.

"நல்ல வேளையிலே பெற்றுப் பிழைத்து வந்து சேர்ந்தாயே, எனக்கு எவ்வளவு ஆனந்தம் தெரியுமா! இன்னும் இரண்டு மாதம் கழித்துத் தான் சமையலறையை உன்னிடத்திலே ஒப்படைப்பேன், தெரிந்ததா! அதுவரை நீ விச்ராந்தியாய்க் குழந்தையைக் கவனித்துக் கொண்டிருக்கணும்" என்று சிரித்துக் கொண்டே சொன்ன கமலம்மாவின் வார்த்தை அவளுக்கு உணர்வை யூட்டியது.

பவானி கமலம்மாளின் பாதங்களைத் தொட்டு வணங்கினாள். "மன்னிக்கணும், அம்மா! நீங்கள் சாதாரண மனுஷி இல்லை. இனிமேல் எனக்கு என் சின்னக் கண்ணன் வேறு, உங்கள் கண்ணன் வேறில்லை. ஏதோ அறியாத்தனம். நான் அலட்சியம் செய்ததை யெல்லாம் மன்னித்தேன் என்று சொல்லுங்கள்......!" என்று குரல் தழுதழுக்க, கண்கலங்கிப் பவானி கெஞ்சியது கமலம்மாளை உருக்கி விட்டது. பவானியைப் பாசம் பொங்க அப்படியே கட்டி அணைத்துக் கொண்டாள்.

"நான் பெற்ற பெண்ணுக்கு நீ குறைந்தவ ளில்லை, பவானி! சகல சௌபாக்கியத்தோடு நீ நெடுங்காலம் சிறப்பாய் வாழணும்."

பெற்ற மனத்தின் தூய்மை, பண்பு எல்லாவற்றையும் பவானி அப்போது கண்டு விட்டாள்!

# சிறந்தது




சகல உபயோகங்களுக்கும்
ராபின்ஸன்ஸ் பெர்ல் பார்லி

கஞ்சி, கூழ், பாயசம், கறி, பார்லித் தண்ணீர் இவைகளுக்கு புதிய ருசிகரமான சத்துள்ள பெர்ல் பார்லி மிகச் சிறந்தது.



**இப்போது எங்கும் கிடைக்கும்**

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
தபால் பெட்டி 664,
கல்கத்தா-1.

ARPX 2A-TH

---

# ஜலதோஷமும் குளிரும்



**'பெப்ஸ் அருந்துங்கள்' என்று டாக்டர் சொல்லுகிறார்**



ஜலதோஷம், குளிர், இருமல், தொண்டைப் புண், இன்ஃப்ளுயென்ஸா, சளி, அல்லது வேறு தொண்டை மார்பு சம்பந்தமான எந்த நோயிருப்பினும் பெப்ஸ் சாப்பிடுங்கள். நீங்கள் பெப்ஸ் சாப்பிடும்போது நோய்தீர்க்கும் மருந்துச் சத்துள்ள ஜீவரஸங்கள் உங்கள் மார்புக்குள்ளும், சுவாசகோசங்களுக்கும் போய்ச்சேருவதை உணரலாம். பெப்ஸ் அபாயகரமான விஷக்கிருமிகளை அழிக்கிறது. புண்ணைத் தணியச்செய்கிறது. எரிச்சலைப்போக்கடிக்கிறது. டாக்டர்கள் பெப்ஸைச் சிபார்சு செய்கிறார்கள். இன்சுவையளிக்கும், தொண்டை, மார்பு நோய்தீர்க்கும் மாத்திரை அது.

பெப்ஸ் நன்கு அருந்துங்கள்

**PEPS**



தொண்டை, மார்பு வலி, நிவாரண மாத்திரைகள்

மதராஸிற்கு ஸோல் ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, பார்க் டவுன்



பல வருஷங்கள்
அவஸ்தையின் பின்னர்
கீல்வாயு அறவே
அகன்றுவிட்டது

"பல வருஷங்கள் கீல் வாதத்தினால் துன்புற்று நிலைமை வர வர மோசமாகியும் வந்தது. கடைசியில் "க்ருஷனை" உபயோகித்துப் பார்க்குமாறு சொன்னார்கள். எனக்கு அது பூரண குணத்தை அளித்ததோடு வலி முதலியவைகளின்றி எனது வேலைகளைச் சரிவரச் செய்யுமாறும் செய்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கீல் வாயுவினால் அவதியுறும் ஒவ்வொருவருக்கும் "க்ருஷனை"யே எப்பொழுதும் நான் சிபார்சு செய்வேன்."—W. T. A.

சாதாரணமாகக் கீல் வாயுவானது, சிறுநீரிலுள்ள வண்டல்கள் எலும்புச் சந்திகளிலும் (பூட்டுகள்) தசைகளிலும் தங்கி விடுவதாலேயே ஏற்படுகிறது. "க்ருஷனி"ன் ஆறுவித உப்புக்கள் இத்தேக்கங்களைக் கலைத்து மூத்திர கோசங்களையும் குடல்களையும் நன்கு தூண்டி அக்கழிவு பதார்த்தங்களை வெளித்தள்ளும்படிச் செய்கிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்", ஜலத்திலோ, டீயுடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்று விடுபட்டவராகச் செய்யும்.

**"க்ருஷன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் இன்றியமையாத உதவி

KSM—4

# வாழ்வளித்த வாசு

ஜயலக்ஷ்மி

சருகைப் புடவையென பரந்து விரிந்து கிடந்த ஆகாயத்தில் அஷ்டமிச் சந்திரன் அழகாக ஜ்வலித்துக் கொண்டிருந்தான். வைரங்களை அள்ளித் தெளித்தாற்போல் நட்சத்திரக் கூட்டங்கள் மினு மினுத்துக் கொண்டிருந்தன.

இரவு மணி எட்டு இருக்கும். மொட்டை மாடியின் மேல் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு வானில் தெரியும் தாரகைகளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் வாசுதேவன். அவன் மனம் சிந்தனைச் சுழலில் சிக்கித் திசை தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தது.

அவனுடைய மௌனத்தைக் கலைக்கும் எண்ணத்துடன் அவன் ஆருயிர் நண்பன் ரமணி, "என்ன வாசு! நான் கேட்டதற்கு ஒன்றும் பதில் இல்லையா!" என்றான்.

"ரமணி! நீ கூடவா, என் மன நிலையை அறியாமல் என்னை இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளும்படி சொல்லுகிறாய்!"

"உன் மன நிலையை அறிந்து கல்யாணம் அவசியம் என்று உணர்ந்துதான் சொல்லுகிறேன்."

"என் உள்ளத்தை நீ உள்ளபடி அறிந்து கொள்ளவில்லை. என் மனைவி கௌரி இருந்த இடத்தில் இன்னொருத்தியா! அது ஒருகாலும் முடியாது. அவளைப் போன்ற குணவதி எனக்கு இனி கிடைக்க மாட்டாள்! வீண் தொல்லையை விலைக்கு வாங்கிக் கொள்வதில் எனக்கு விருப்பம் இல்லை. என்னைத் தொந்தரவு செய்யாதே!"

"வாசு! இப்படியே இன்னும் கொஞ்ச நாட்கள் நீ தனிமையில் இருந்தால் கூடிய சீக்கிரம் உனக்கு மூளையே கலங்கிவிடும். என் நண்பனை உயிருடன் இழக்க நான் விரும்பவில்லை. அதனால் தான் உன்னை இவ்வளவு தூரம் வற்புறுத்துகிறேன். இன்று நீ ஒரு முடிவு சொல்லத்தான் வேண்டும்" என்ற ரமணியின் வேண்டுகோளில் உண்மையும் அன்பும் கலந்திருந்தன.

ஒரு கணம் கம்மாயிருந்து விட்டு, சோகம் ததும்பும் முகத்துடன் ரமணியை ஏறிட்டு நோக்கினான் வாசு. பிறகு, "ரமணி! இன்று என்னை விட்டுவிடு. நாளைக்கு என் முடிவான பதிலைக் கூறி விடுகிறேன்" என்றான். அவன் முகத்தில் ஒரு இனந் தெரியாத ஏக்கம் தெரிந்தது.

"சரி! வாசு! நான் நாளை இரவு உன்னைச் சந்திக்கிறேன். உன் முடிவு மங்களகரமாய் இருக்கட்டும்" என்று கூறி அவனிடம் விடை பெற்றுச் சென்றான் நண்பன் ரமணி!

ரமணி சென்றதும் வாசுவின் மனம் அப்பாடா! என்று விகசித்தது. மூன்று வருஷ காலமாக இப்படித்தான் இரண்டாவது கல்யாணம், இரண்டாவது கல்யாணம் என்று பிடுங்கித் தின்கிறான் ரமணி. நாளைக்கு தம் முடிவை அவனுக்குக் கூறி விட வேண்டும் என்று தீர்மானித்து விட்டான்.

அவன் அந்தராத்மா "ஆமாம்! ரமணி கூறுவதும் உண்மைதானே! எவ்வளவு நாட்களுக்கு இப்படி கௌரி விரதமிருக்க முடியும்! உனக்கும் வாழ்வு உண்டு! கௌரியும் உன்னைக் கட்டாயம் கல்யாணம் செய்து கொள்ளும்படி கேட்டுக் கொண்டாளே! அவள் ஆத்மா சாந்தியடைய வேண்டுமானால் நீ இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளத்தானே வேண்டும்!" என்றது.

"கௌரி! என் சந்தோஷ வாழ்க்கைக்காக என்னை இன்னொரு கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டாளே யன்றி, அவள் பெண் உள்ளம் அவளுக்கு உரிய ஸ்தானத்தை இன்னொருத்தி பெறுவதை எப்படி விரும்பியிருக்க முடியும்! அது பெண் குலத்தின் பிறவிக் குணமாயிற்றே" என்றது வாசுவின் இன்னொரு மனம்.

"அதுதான் இல்லை. கௌரி, பெண் குலத்தின் மாணிக்கம். உன் சந்தோஷத்தையே தன் சந்தோஷமாகக் கருதும் சற்குணவதி. அவளுக்கு உள்ளும் புறமும் ஒன்றே. அவள் உயிரோடு இருந்தால் கூட உன் இன்பத்திற்கு உகந்த பணியாற்றுவதில் பூரண விருப்பம் கொண்டவள். அவள் உயிரை இழந்த பின் உன் சந்தோஷமான வாழ்க்கையை விரும்ப மாட்டாள் என்று நினைப்பது தவறு. தவிரவும் உனக்குக் குழந்தை பிறந்து, அதை யெடுத்து நீ கொஞ்சிக் குலாவ வேண்டும் என்று விரும்புகிறாயே அதற்கு இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளாவிடில் முடியுமா! பிறருடைய குழந்தை உன்னுடைய குழந்தையாகுமா! சற்று அதை யோசித்துப் பார்!" என்றது அவன் அந்தராத்மா.

அடுத்த கணம் வாசுவின் கண்ணெதிரில் கௌரி தன் மரணப் படுக்கையில் கண்களில் கண்ணீர் வழியக் கூறிய காட்சி திரைப் படம்போல் கருள் கருள் சுருளாக விரிந்தது. வாசுவின் கரத்தை அன்போடு எடுத்துத் தன் கன்னத்தில் வைத்துக் கொண்டு "நான் இறந்து விட்டால் தாங்கள் இப்படியே இருந்து விடாதீர்கள். தாங்கள் தங்கள் தாயாருக்கு ஒரே பிள்ளை. நம் குடும்பம் தங்களுடன் நின்றுவிடக் கூடாது.




ஆள் :—சம்பந்திகள் வீட்டில் அசோகா பாக்குத் தூள் ஆகி விட்டதாம், வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்கள்.

கல்யாண வீட்டுக்காரர் :- கல்யாணந்தான் ஆகிவிட்டதே? போயிட்டு வரச் சொன்னாங்க என்று சொல்.

அது தழைத்துப் பூத்துக் குலுங்க வேண்டும். ஆகையால் தாங்கள் கட்டாயம் இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும். என்னால் தங்கள் குழந்தை ஆசையைப் பூர்த்தி செய்ய முடியவில்லை. அந்த ஆசையைத் தங்களுக்கு வரப்போகும் என் சகோதரிதான் நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்.

"தவிர என் ஆசையொன்று. தாங்கள் மணம் செய்து கொள்ளப் போகும் பெண் அழகும், இளமையும் உள்ளவளாகத்தான் இருக்கவேண்டும் என்று விரும்பாதீர்கள். அவர்களை மணக்கும் வாலிபர்கள் எவ்வளவோ பேர்கள் உண்டு. ஆனால் ஏழையும் வாழ்வற்றவளுமான அநேக பேதைகள் உலகில் விமோசனமின்றித் தவிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குத் தாங்கள் வாழ்வளியுங்கள். என் வேண்டுகோளை மறந்து விடாதீர்கள்!" என்று கேட்டுக் கொண்டாள். அதற்குப் பிறகு அவள் ஒன்றும் வாய்திறந்து பேசவில்லை.

"எந்த மகப் பேற்றை விரும்பினேனோ அந்த மகப்பேறே என்னருமை மனைவியை என்னிடமிருந்து பிரித்து விட்டது. தாய்க்கு யமனாய் வந்து முளைத்த அந்த துரதிருஷ்டக் குழந்தையும் உயிர் தரிக்கவில்லை!" என்று ஏங்கினான் வாசு.

மீண்டும் அவன் மனத்தில் போராட்டம். "பார்த்தாயா! கௌரியின் கடைசி வேண்டுகோளை நீ பூர்த்தி செய்ய வேண்டும். கல்யாணம் செய்து கொள்வதாக ரமணியிடம் தெரிவித்து விடவேண்டியதுதான். அவன் அதற்கு ஆவன செய்து விடுவான்" என்றது அவன் உள்ளம்.

வாசு தன் மனச் சாட்சியின் கட்டளைக்கு அடி பணிந்தான். தன் மனைவியின் கடைசி வேண்டுகோளை நிறைவேற்றத் தீர்மானித்து விட்டான். அவனுக்கு எதிரில் சுவரில் மாட்டியிருந்த கௌரியின் புகைப் படம் அவன் தீர்மானத்தை ஆதரித்து மகிழ்வது போலப் புன்னகை புரிந்த வண்ணம் காட்சி அளித்துக்கொண்டிருந்தது.

## 2

மறுநாள். ரமணியின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் வாசு.

மாடிப் படியில் யாரோ தடதடவென்று ஏறி வரும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்ப்பதற்குள் ரமணி ஓடிவந்து வாசுவின் எதிரில் நின்றான்.

அவனுடைய அளவு கடந்த ஆர்வத்தினால் உணர்ச்சி வசப்பட்ட வாசு, ஒரு கணம் வாயடைத்துப் போய் விட்டான்.

வாசுவின் மௌனம் ரமணியைச் சிரமப் படுத்தியது. "என்ன வாசு! நீ இன்னும் முடிவு செய்யவில்லையா? ஏன் இப்படி மௌனம் சாதிக்கிறாய்!" என்று பதற்றத்துடன் கேட்டான்.

அவன் கைகளை அன்போடு பற்றிக்கொண்டு "ஏன் அவசரப்படுகிறாய், ரமணி! உன் விருப்பம் போல் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன்" என்றான் வாசு.

வாசுவின் பதிலைக் கேட்ட ரமணிக்கு உற்சாகத்தினால் வான வெளியில் பறப்பது போலிருந்தது. அவன் மகிழ்ச்சி பொங்க வாசுவின் முகத்தைப் பார்த்தான். அவனுக்கு ஒன்றுமே பேசத் தோன்றவில்லை.

"ரமணி! என் கல்யாணத்துக்கு ஒரு நிபந்தனை. என் மனைவியின் கடைசி வேண்டுகோள்படி, ஏழையாகவோ, ஆதரவற்றவர்களாகவோ, அல்லது இந்த உலகில் நாம் வாழ முடியுமா என்று ஏங்கித் தவிக்கும் பேதைப் பெண்களாகவோதான் எனக்கு வரப் போகும் மனைவி இருக்க வேண்டும்" என்றான் வாசு.

வாசுவின் இந்த நிபந்தனை ரமணியை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது. "என்ன சொன்னாய்! இது நடக்கக் கூடிய காரியமா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

"நடத்துபவன் விரும்பினால் ஏன் நடக்காது!"

"அப்போது சமூகம் உனக்கு அளிக்கும் கௌரவம் எப்படி இருக்கும் தெரியுமா!"

"எனக்கு அதைப் பற்றிக் கவலை யில்லை!"



"நீ இப்பொழுது உணர்ச்சி வேகத்தில், ரத்தத்தின் இளமையில் இப்படிச் சொல்லி விடலாம். எதிர்காலம், உனக்குப் பிறக்கப் போகும் குழந்தைகள் எல்லாவற்றையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சமூகத்தில் உன் அந்தஸ்து குறைந்தால் உன் வாழ்வு பயனற்றதாய்ப் போகும். ஆகவே நான் உனக்கென்று பார்த்து வைத்திருக்கும் ராவ் பகதூரின் மகளையேதான் மணந்து கொள்ள வேண்டும்" என்றான் ரமணி.

"பணமும் பட்டமும் பெற்றவர்கள் பெண்களுக்கு மாப்பிள்ளைகளுக்கா பஞ்சம். நான் ஒரு இளம் விதவையையே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்" என்றான் வாசு.

"விதவையையா! கணவனை இழந்தவளையா!"

"ஏன் இப்படி வியக்கிறாய்! நீகூட ஒரு முறை என்னிடம் சொல்லி வருத்தப்பட வில்லையா, உன் தங்கை இளமையிலேயே விதவையாகி விட்டதைக் குறித்து. உன் தங்கைக்குச் சம்மதமானால் நான் அவளை மணந்து கொள்வதற்குத் தயாரா யிருக்கிறேன்" என்றான் வாசு.

ரமணிக்கு ஒரு கணம் ஒன்றுமே தோன்றவில்லை. ஏதோ இயந்திரம்போல் உணர்ச்சியின்றி வாசுவை அழைத்துக் கொண்டு தன் வீட்டுக்குப் போனான்.

இவர்களைக் கண்டதும் ஏதோ புஸ்தகம் படித்துக் கொண்டிருந்த ரமணியின் தங்கை விமலா எழுந்து உள்ளே போகத் தொடங்கி விட்டாள். அவளைப் பின் தொடர்ந்த ரமணி, "விமலா! ஒரு சந்தோஷ சமாசாரம். வாசு, மறுமணம் செய்துகொள்ளச் சம்மதித்து விட்டான்" என்று கூறி அவள் முகத்தை ஆர்வத்தோடு நோக்கினான்.

"அப்படியா, அண்ணா! ரொம்ப சந்தோஷம். அந்த அதிர்ஷ்டசாலி யாரோ!" என்று கேட்டுக் கொண்டே உள் கூடத்துக்கு வந்தாள் விமலா.

ரமணி ஒரு கணம் வாசுவின் முகத்தையும், விமலாவின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தான். பிறகு "விமலா! அங்கேதான் ஒரு விசித்திரம். அவன் ஒரு பால்ய விதவையை மணந்து கொண்டு அவளுக்கு விமோசனம் அளிக்கப் போகிறானும்."

அதைக் கேட்ட விமலா, ஒரு நிமிஷம் ஆச்சரியத்தால் வாயடைத்து நின்றாள். பிறகு ஒருவாறு தன்னைச் சமாளித்துக்கொண்டு "அண்ணா! அப்படி ஒரு பெண் அகப்பட்டு, அவள் விருப்பமும் கிடைத்தால் வரவேற்க வேண்டியதுதான். ஆனால்...... விதவா விவாகம் ஒரு சமூக சீர்திருத்தம்தான்" என்று வார்த்தையை முடிக்காமலே நிறுத்தினாள்.

"வாசுவே மனம் விரும்பி வாழ்விழந்த ஒரு பெண்ணுக்கு வாழ்வளிக்க முன் வரும்போது அந்தப் பெண் கூட மறுப்பாளா!" என்றான் ரமணி தன் அருமைத் தங்கை விமலாவின் உள்ளக் கிடக்கையை அறியும் எண்ணத்துடன்.

"அண்ணா! என்னிடமே இந்தக் கேள்வியைக் கேட்கிறீர்களே! நான் என்னத்தைச் சொல்வேன். பதி பக்தியில் சிறந்த பத்தினிகள் தோன்றிய நாடு நம் பாரத நாடு. துரதிருஷ்டவசமாக கணவனை இழந்துவிட்டாலும், அந்த உத்தமிகள் இன்னொரு புருஷனுக்கு மாலையிடவே மாட்டார்கள். வெளியுலகுக்கு வேண்டுமானால் அவள் கணவனற்ற விதவையே தவிர அவள் இதய அரங்கில் அவன் கமங்கிலியே. புருஷனை இழந்து ஜீவனம் செய்யக் கஷ்டப்பட்டாலும் இன்னொருவனை மணந்து மகிழ்வது என்பது இயலாது. அதற்கு அவள் மனமும் இடம் கொடுக்காது."

"ஆமாம். ரமணி! உன் தங்கை கூறுவதும் உண்மைதான். பெண்கள் உள்ளம் பவித்ரமானது. அதைப் பலவிதமாக மாற்றியமைக்க முடியாது. என் எண்ணத்தை மாற்றி யமைத்துக் கொள்ள வேண்டியது தான்" என்றான் வாசு.

ரமணியின் மனம் சிந்தனையில் சுழன்று கொண்டிருந்தது. சற்று நேரம் அங்கு நிசப்தம் நிலவியது. பிறகு, "விமலா! யாராவது நமக்குத் தெரிந்தவர்களின் பெண்கள் இருக்கிறார்களா, வாசுவின் இந்தச் சீர்திருத்த விவாகத்துக்குத் தகுந்தபடி!" என்று கேட்டான்.

அவன் உள்ளத்தை ஒருவாறு புரிந்து கொண்ட விமலா "அண்ணா! உங்கள் நண்பரின் சீர்திருத்த விவாகத்துக்குத் தகுந்தபடி ஒரு பெண் இருக்கிறாள். அவள் அழகானவள்தான். ஆனால் ஏழை! தவிர அவளுக்கு அழகைக் கொடுத்த கடவுள் ஒரு கண்ணைக் கொடுக்கத் தவறி விட்டான். இன்னொரு கண்ணும் இலேசாகத்தான் தெரியும். சுருங்கச் சொன்னால் அவள் பிறவிக் குருடி என்றுதான் சொல்ல வேண்டும். அவளை மணக்க மூன்றும் தாரகிழவர்கூட முன் வரவில்லை. வயது இருபது ஆகிவிட்டது" என்று அவள் கூறி முடிப்பதற்குள் "அந்தப் பெண் யார்! அவள் பிறவிக் குருடியாக இருந்தாலும் பரவாயில்லை. எனக்குச் சம்மதம். உடனே கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் கவனி, ரமணி!" என்று ஆவலுடன் கூறிவிட்டு நிர்மலாவைப் பார்த்தான்.

"என் மைத்துனரின் பெண் ரேவதியைத் தான் அண்ணா சொல்கிறேன். இவர் விரும்பினால் என் மைத்துனர் ஏன் தடை சொல்கிறார்! உடனே விவாகத்தை முடித்துவிடத் தயாராக இருப்பார்" என்று கூறி அண்ணனின் முகத்தை ஆர்வத்துடன் நோக்கினாள் விமலா.

"வாசு, நீ போயும் போயும் ஒரு குருடியையா மணந்து கொள்ளப் போகிறாய்! என் மனம் இதை நினைத்துக் கூடப் பார்க்கத் தயங்குகிறதே" என்று மனம் கலங்கினான் ரமணி.

"ரமணி! நீயேன் வருத்தப்படுகிறாய்! நான் குருடியை மனப் பூர்வமாய் நேசித்து மணந்து கொள்கிறேன். என் கௌரியும், இந்த விவாகத்தினால் ஆத்ம திருப்தி பெறுவாள். ஒரு அபலையும் என்னால் வாழ்வு பெறுவாள்" என்று உற்சாகத்துடனும் உணர்ச்சியுடனும் கூறினான் வாசு.

## 3

காலதேவன் இதற்குப் பிறகு இரண்டு வருஷத்தை உருட்டி விட்டுச் சென்றான். வாசு



"என் பையன் காலேஜில் நன்ருகப் படிக்கிருன். அவனிடமிருந்து எனக்குக் கடிதம் வந்தால் நான் அகராதியைத் தேடிக் கொண்டு போக வேண்டியிருக்கிறது!"

"உங்கள் பாடு சௌகரியம், ஸார்! என் பையனும் காலேஜிலே தான் படிக்கிருன். அவனிடமிருந்து கடிதம் வந்தால் நான் பாங்கியை யல்லவா தேடிக் கொண்டு ஓடவேண்டியிருக்கிறது!"

வுக்கு இரண்டாவது கல்யாணமும் ஆகிவிட்டது. மொட்டை மாடியில் வழக்கம் போல் சாய்ந்திருந்தான் வாசு. அவன் மடியில் ஒரு ஆண் குழந்தை தவழ்ந்து கொண்டிருந்தது.

பூர்ண சந்திரன் வான வீதியில் உல்லாசமாகப் பவனி வந்து கொண்டிருந்தான். வாசு தன் குழந்தை ரவியைத் தூக்கிக் கையிலெடுத்துக் கொண்டு, "அதோ பார், ரவி! அம்புலி மாமா" என்று வானத்தைச் சுட்டிக் காட்டினுன்.

அம்புலியைக் கண்டு மகிழ்ந்த ரகு குதூகலத்துடன் 'வா! வா!' என்று தன் பிஞ்சு கையால் சந்திரனை அழைத்தான். மைந்தனை வாரியணைத்த வாசு மனைவியின் பக்கம் திரும்பினுன்.

அவனுக்கு அருகில் உட்கார்ந்திருந்த ரேவதி வானத்தை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள். பார்வையற்ற அவள் கண்கள் எதனுலோ கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தது. அவளுடைய அந்த நிலையைக் கண்டு மனம் நெகிழ்ந்த வாசு, "ரேவதி! ஏன் கண்ணீர் விடுகிருய்!" என்ருன்.

"ஒன்றுமில்லை" என்று கூறிய ரேவதி புடவைத் தலைப்பால் பார்க்கும் சக்தியற்ற தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"நம் ரவியை, ஆசை மைந்தனை கண்களால் பார்த்து மகிழ முடியவில்லையே, என்ற வருத்தமா, ரேவதி!" என்று கேட்டான் வாசு.

"அதொன்றும் இல்லை......! வருத்தமே கிடையாது. முழுப் பார்வையையும் இழந்து பிறவிக் குருடியாகிய எனக்குப் பெண்களுக்குரிய இல்லற வாழ்வே கிடையாது என்று நிர்மானித்திருந்தேன். எனக்கு இன்ப வாழ்வளித்த தன்னலமற்ற தியாக மூர்த்தியாகிய தங்களைக் கண் குளிரக் கண்டு களிக்கக் கொடுத்து வைக்காத பாவியான நான், குழந்தை ரவியை மட்டும் பார்த்து மகிழ வேண்டும் என்று விரும்ப முடியுமா!" என்ருள் ரேவதி.

"பைத்தியமே! இதற்காகவா வருந்துகிருய்! உனக்குக் கண்கள் இல்லாததால்தான் உன்னை மணந்து கொண்டேன். உன் போன்றவர்களைக் காக்க வேண்டியது 'என்போன்ற ஆண்களின் கடமையல்லவா! ரேவதி, வருந்தாதே! உனக்கு நான் ஒரு கண்! ரவி ஒரு கண்! உன்னை மலர் போல் வைத்துக் காப்பாற்றி வருவோம்" என்று அன்பு ததும்பக் கூறிய வாசு ஒரு கையால் மனைவியையும், ஒரு கையால் மகனையும் ஆசையுடன் அணைத்துக் கொண்டான்.

வான வெளியில் மேகத் திரையிலிருந்து விடுபட்ட சந்திரன், இந்த ஆதர்ச குடும்பத்தின் ஆனந்தத்தை மிகைப்படுத்தும் நோக்கத்துடன் பன்மடங்கு எழிலுடன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். அந்த வெளிச்சத்தில் ஏதோ நிழல் உருவம் போலத் தெரிந்த தன் கணவனையும் குழந்தையையும் பார்த்து மகிழ்ந்தாள் ரேவதி!

# வட்ட மேஜை

சென்ற வாரக் கல்கியில் தஞ்சை கலைவிழாக் காட்சியைப் பற்றித் தங்கள் இயற்கை நடையில், கலையையும், சிலையையும் பற்றி வெகு அழகாக படிப்போர் மனம் அவைகளில் அழுந்துமாறு எழுதி யிருக்கிறீர்கள். பண்டையக் கலைகளையும், மறந்து விடப்பட்ட சிலைகளையும் பொதுமக்கள் கவனத்திற்குக் கொண்டு வந்திருப்பதற்கு மனமார்ந்த நன்றி கூறுகிறேன்.

பழைய கலைகளையும், சிலைகளையும், மலைபோன்ற கோபுரங்களையும் காட்டிக் காட்டியே இந்தியா நாளது வரையில் பெருமை பாராட்டி வருகிறது.

பண்டைய கோபுரங்களைப் போலும், அழகே உருக்கொண்ட சிலைகளைப் போலும், செய்யும் ஆற்றலுடையவர் தென்னாட்டில் இரண்டொருவரேனும் உண்டாவென்பது தங்கள் சிந்தனைக்குரிய தொன்றும். நீலகிரி மலை வாசிகளான தோதுவர்களைப் போல் இச் சிற்பங்களின் எண்ணிக்கை குறைந்துவிட்டது. இக்காலத்தில் கோவில் திருப்பணிகளோ அருகிவிட்டன. கல் கொத்துபவர்களையும், அம்மி, திரிகை அடிப்போரையும். சிற்பிகளெனவும், கல்தச்சர்களெனவும் குழப்பிக் கொள்ளும் நிலைமை நமக்கு ஏற்பட்டு விட்டது.

எனவே, சிற்பத்தை எவ்வளவு அழகுபட, உண்மையாக, தாங்கள் யாத்துள்ள நூல்களிலும், கல்கியிலும் நிலைநாட்டி வரும் தாங்கள், சிற்பம் தழைத்தோங்க, சிற்பங்கள் மீண்டும் உயிர் பெற்று எழ ஆவன புரியுமாறு கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது சிறுர்கள் பொம்மைகளை வைத்து அழகு பார்த்து விளையாடுவது போல், பழைய சிலைகளை மண்ணினின்றும் தோண்டியெடுத்து அவைகளைச் சேகரித்து, கலைக் காட்சிகளெனக் கொண்டாடி வருகிறோம். ஒரு அழகிய பழைய நடராசர் விக்கிரகம் பழுதடைந்து விட்டால் வேறு செய்து தரக்கூடிய வன்மை பெற்றவர்கள் அடுத்த தலைமுறையில் இல்லாமற் போய்விடுவார்கள் என்பதைச் சென்ற நாற்பது ஆண்டுகளாகக் கலைச் சமூகத்தின் தலைமை வகித்து வரும் நான் திட்டமாகக் கூறுவேன்.

ஆகையினுல் அற நிலையப் பாதுகாப்பு இலாகாவின் மூலம் சிற்ப நூல் பயிற்சியை அமைக்கப் பாடுபடுவீர்களாயின், தங்கள் சிற்பத் தொண்டு நாட்டு மக்களால் என்றும் நினைக்கப்படுவதாகும்.

சென்னை
5—5—53

தி. மு. தெய்வசிகாமணி



எல்லாவித பல்வலிகளுக்கும்

பல் வெண்மை தரும்.....

ஈறுகளுக்கு வலு தரும்

உபயோகியுங்கள்

**குரங்கு மார்க்**
**கருப்பு பல்பொடி**
(REGD)

ஸ்வாசத்திற்கு மணம் தரும்.

எங்கும் கிடைக்கும்

3 விதமான சைசுகள்

**NOGI & CO.,**
87, CHINA BAZAAR Rd, MADRAS-1



**கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்**
(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

தலைமை ஆபீஸ்: கள்ளிக்கோட்டை | கிளை ஆபீஸ்: 9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

எங்கள் மே மாத சீட்டு வரிசை - சுலப குறைந்த காலத் திட்டம்

மாதாந்திர சீட்டு வகைகள்

20 மாதங்கள் | 4வது ஞாயிறு ஏலங்கள் | 20 சந்தாதாரர்கள்

சந்தா செலுத்தும் கடைசி தேதி 22-5-53 வரை நீடிக்கப் பட்டுள்ளது.

முதல் ஏலத் தேதி: 24-5-53

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| C | ரூ. 100/- | ரூ. 2000/- |
| D | ரூ. 50/- | ரூ. 1000/- |
| E | ரூ. 25/- | ரூ. 500/- |
| F | ரூ. 20/- | ரூ. 400/- |
| G | ரூ. 15/- | ரூ. 300/- |
| H | ரூ. 10/- | ரூ. 200/- |

முக்கிய கவனிப்பு:

1. நீங்கள் எவ்வூரிலும், எந்நாட்டிலும், ஆங்காங்கே இருந்து கொண்டே சந்தாதாரர்களாக சேர்ந்து கொள்ளலாம்.
2. ஆங்காங்கு இருந்துகொண்டே, தபால் மூலமோ அல்லது வேறு யார் மூலமாகவோ, ஏலத் தேதிகளில் ஏலம் கேட்கலாம்.
3. உங்களூரிலிருந்தபடியே எங்கள் பண்ட் ரூல்கள் 21, 34 படி உங்கள் ஏலத் தொகையை பெற்றுக் கொள்ளலாம்.

விலாசத்தைத் தெளிவாக எழுதி மனுச் செய்து கொள்பவர்களுக்கு விதிகளும், நிபந்தனைகளும் இலவசமாக அனுப்பப்படும். மற்ற விதிகள் வழக்கம்போல். சீட்டில் சேர்ந்துக் கொள்ளும் உரிமை கம்பெனியைச் சேர்ந்தது.
(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்

தபால் பெட்டி: 1395 போன்: 83596

தந்தி: 'KALLIFUNDS'

3 வாசனைக் கலாரத்னங்கள்

**கம் கம் ஜவாஜ் * கம்பால் * கமகர்**

அகர்பத்திகள்

டி.எஸ்.சுகந்தாலயா,
வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

CBG/12A

அருணோதயம் முதல்
நட்சத்திரம் உதிக்கும்
வரையில் - நாள் முழுவதும்
இனிய வாசனையோடிருப்பீராக



டால்கம் பவுடர்



பள பளவென்று ஜொலிக்கும் புதுமைக்கு காஷ்மீர் புக்கே டால்கம் பவுடரை உங்கள் மேல் தாராளமாகத் தூவுங்கள். அது அதிகக் கசிவை உறிஞ்சுகிறது . . . எரிச்சலையும் அரிப்பையும் அடங்கச் செய்கிறது . . . உங்களைக் குளிமையுடனும் இனிய வாசனையுடனும், நாள்முழுவதும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.

# காஷ்மீர் புக்கே

## மாணிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்

1806லிருந்து கோல்கேட் உயர்ந்த சுகந்திற்குப் பெயர்போனது.

# அல்பேனியா

(முன் தொடர்ச்சி)

ஜெயமணி

இரும்புத் திரைக்கு உள்ளே இருக்கும் அல்பேனியா, இரும்புத் திரையைப் பிளந்து கொண்டு வெளியே சென்ற யூகோஸ்லேவியாவை வாயளவில் தாக்க முற்பட்டதுடன் நிற்க வில்லை; அதன் மீது பகிஷ்கார நடவடிக்கைகளையும் கைக்கொண்டது. அதனால் ஆத்திரமடைந்த யூகோஸ்லேவியா அல்பேனியா மீது பொருளாதார, அரசியல் பாணங்களைப் பிரயோகிக்கத் தொடங்கியது.

அதன் காரணமாக அந்த இரு நாடுகளுக்கும் போர் மூண்டு விடுமோ என்றும் தோன்றியது. அல்பேனியாவை ருஷ்யா பூரணமாக ஆதரித்து நின்றது. யூகோஸ்லேவியா இரும்புத் திரையைப் பிளந்து கொண்டு வெளியேறியதால் மகிழ்ச்சியடைந்த பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகள் யூகோஸ்லேவியாவுக்குப் பக்க பலமாக இருந்தன. எனவே, அல்பேனியாவுக்கும் யூகோஸ்லேவியாவுக்கும் போர் மூண்டால், அது உலக யுத்தமாக மாறக் கூடும் என்ற பீதியும் நிலவியது. நல்ல வேளையாக நிலைமை அவ்வளவு தூரத்துக்கு மிஞ்சி விடவில்லை.

அல்பேனியாவில் பலர் கம்யூனிஸ்டு சர்க்காருக்கு விரோதிகள் என்று குற்றம் சாட்டப்பட்டு மரண தண்டனை அடைந்தார்கள்.

எனவே, அல்பேனியாவுக்குச் சுதந்திரத்தை ஈட்டிய தலைவர் என்வர் ஹோஷாவின் இன்றைய ஆட்சியைக் களங்கமற்ற சுதந்திர ஆட்சி என்று கூறுவதற்கில்லை.

* * *

மத்திய தரைக் கடலின் ஒரு இணையான அட்ரியாடிக் கடற்கரையில் அல்பேனியா அமைந்திருக்கிறது. எனவே, மத்திய தரைக் கடலைச் சுற்றியுள்ள நாடுகளைப் போல் அல்பேனியாவையும் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருத வேண்டும்.

10,630 சதுர மைல் விஸ்தீரணம் உள்ள அல்பேனியாவின் ஜனத் தொகை பதினொரு லட்சத்துக்கு மேல் இல்லை. அதாவது அல்பேனியா தேசம் ஜனத் தொகையில் சென்னை மாநகரைக் காட்டிலும் சிறியது!

அவ்வளவு குறைந்த ஜனத் தொகைக்குக் காரணம் அந்த நாட்டின் பெரும் பகுதியும் கரடு முரடான மலைப் பிரதேசங்களாகவும் பாறைகள் நிறைந்த பள்ளத் தாக்குகளாகவும் அமைந்து இருப்பதுதான்.

அல்பேனியாவில் சமவெளி என்று சொல்லக் கூடிய இரண்டே பிரதேசங்கள்தான் இருக்கின்றன. அந்தப் பிரதேசங்கள் இராவிடில், அல்பேனியா மனிதர் வாழ்வதற்கே தகுதியற்ற இடமாக இருக்கும். மேற்படி சமவெளிப் பிரதேசங்கள்தான் அல்பேனியாவின் செழுமைக்கும் செல்வத்துக்கும் முக்கிய காரணமாக இருக்கின்றன.

அங்கு ஏராளமாக சோளம், புகையிலை, கோதுமை, நிலக்கரி, ஆலிவ் எண்ணெய் முதலியவை உற்பத்தியாகின்றன.

மலைப் பிரதேசங்கள் ஆடு மாடுகள் மேய்வதற்கு வசதியாக இருப்பதால், அல்பேனிய மக்களில் பலர் கால் நடைப் பண்ணைகள் வைத்துக் கொண்டு ஜீவனம் செய்கிறார்கள்.

அந்த நாட்டுக் கம்பளியிலிருந்து செய்யப்படும் கரடு முரடான போர்வைகள் வெளி



அல்பேனியாவைச் சேர்ந்த பீரட் நகரிலுள்ள புராதனக் கோட்டை

காடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வருகின்றன.

மலைச் சரிவுகளில் ஏராளமான காடுகள் இருப்பதுடன், அங்கு உலோகச் சுரங்கங்களும் இருக்கின்றன. எனினும் போக்குவரத்து வசதி இல்லாததால், சுரங்கங்கள் அபிவிருத்தி செய்யப் படவில்லை.

அல்பேனியாவில் உள்ள ரயில் பாதையின் நீளம் இருபத்திரண்டு மைல்கள்தான். ரஸ்தாக்களின் நீளமோ ஆயிரத்து ஐந்நூறு மைல்கள்தான். இதிலிருந்து அந்த நாட்டில் போக்கு வரத்து வசதி எவ்வளவு பிற்போக்காக இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.



அல்பேனியப் பெண்மணி

ரஸ்தா இல்லாத மலைப் பிரதேசங்களில் பிரயாணம் செய்யக் கழுதைகளையோ மட்டக் குதிரைகளையோ உபயோகிக்கிறார்கள்.

அல்பேனியாவில் ஏழு எட்டு நகரங்களுக்கு மேல் இல்லை. ஒவ்வொரு நகரிலும் சற்றேறக் குறைய பத்தாயிரம் ஜனங்கள்தான் வசித்து வருகிறார்கள்.

தலை நகரான டிரானாவில் மாத்திரம் முப்பதினாயிரம் ஜனங்கள் வசிக்கிறார்கள். மேற்படி நகர் யூகோஸ்லேவியாவுக்கும் கிரீஸுக்கும் இத்தாலிக்கும் மத்தியில் இருப்பதால், அது மிகவும் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப் படுகிறது.

* * *

ஆதியில் அல்பேனியர்கள் எந்த மதத்திலும் சேராத மலைவாசிகளாக இருந்தார்கள். பிறகு அன்னியர் ஆதிக்கத்தின் கீழ் அவர்கள் கிறிஸ்துவர்களாக மாறிவிட்டனர்.

பல நூற்றாண்டுகள் வரையில் அல்பேனியா துருக்கி சாம்ராஜ்யத்தின் கீழ் இருந்த போது, துருக்கியர்கள் வழக்கம் போல் பலாத்கார முறைகளைக் கைக் கொண்டு அல்பேனியர்களை முஸ்லிம்களாக மாற்றினர். அதனால்தான் இன்று அல்பேனியர்களில் பெரும்பாலோர் முஸ்லிம்களாக இருக்கிறார்கள்.

துருக்கி சாம்ராஜ்யம் மிகுந்த செல்வாக்குடன் இருந்த காலத்தில், துருக்கியர்கள் தாங்கள் ஆக்கிரமித்த சகல நாடுகளிலும் அடிப்படையான ஒரு முக்கிய கொள்கையை அனுஷ்டித்து வந்தார்கள்.

அதாவது, தாங்கள் ஆக்கிரமித்துக் கொண்ட நாட்டின் ஜனநாயக அமைப்பு எப்படி இருந்தாலும் சரி, அந்தந்த நாட்டு மக்களின் பிறப்பு, பாஷை முதலியன எதுவாயிருந்தாலும் சரி, அவர்கள் முஸ்லிம்களாக மாறி விட்டால், துருக்கியர்களைப் போல் அவர்களுக்குச் சகல உரிமைகளும் வழங்கி வந்தனர். முஸ்லிம்களாக மாறாத ஜனங்களை, மதத் துரோகிகளாகக் கருதி அவர்களை அடிமைகளைப் போலவே நடத்தி வந்தார்கள்.

அத்தகைய "துரோகிகளை"க் கொள்ளை யடிக்கவும், அவர்களுக்கு எத்தகைய தீங்கு இழைக்கவும் முஸ்லிம்களுக்கு உரிமை இருந்தது. மேற்படி கொடுமைகளுக்குப் பயந்தே பலரும் அக் காலத்தில் முஸ்லிம்களாக மாறி விட்டார்கள்.

அல்பேனியாவில் துருக்கி சாம்ராஜ்யத்தின் ஆதிக்கம் ஏற்பட்ட போது, அந்த நாட்டில் கிறிஸ்துவ மதம் அவ்வளவாக வேரூன்றவில்லை. எனவே, அல்பேனியர்களைப் பயமுறுத்தி முஸ்லிம்களாக மாற்றுவது துருக்கியர்களுக்கு எளிதாயிற்று.

அவ்விதம் மதம் மாறிய பல அல்பேனியர்கள் துருக்கி சாம்ராஜ்யத்தில் கீழ் உயர்ந்த பதவிகளுக்கு வந்தார்கள். ஒரு காலத்தில் எகிப்து பாஷாவாக விளங்கிய பிரசித்தி பெற்ற முகமது அலி அல்பேனியாவைச் சேர்ந்தவர்தான். துருக்கியின் இணையற்ற தலைவராக விளங்கிய கெமால் பாஷாவின் பெற்றோர் அல்பேனியர்களே.

அல்பேனியர்கள் தங்களுடைய சொத்துக்களையும் வாழ்க்கை உரிமைகளையும் பாதுகாத்துக் கொள்வதற்காக மதம் மாறினார்கள். எனினும், அவர்கள் கடைசி வரையில் துருக்கியர்களின் அரசியல் ஆதிக்கத்தை எதிர்த்துப் போர் புரிவதை நிறுத்த வில்லை!

அல்பேனிய மக்களில் பெரும்பாலோர் முஸ்லிம்களெனினும், அங்கு இஸ்லாம் மதம் அரசாங்க மதமாக இல்லை. அதாவது அல்பேனிய சர்க்கார் மதத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை.

அல்பேனியர்கள் மற்றத் துறைகளில் இருப்பது போல் கல்வித் துறையிலும் மிகவும் பிற்போக்கான நிலையில் இருந்து வருகின்றனர். அங்கு கட்டாய ஆரம்பக் கல்வி முறை பெயரளவில் அமுலில் இருக்கிறது. ஆனால் அதைச் செயலில் கொண்டு வருவதற்குப் போதிய பள்ளிக்கூடங்கள் இல்லை.

அந்த நாட்டில் ஒரு கலாசாலைகூட இல்லை.

இவ்விதம் கல்வித் துறையில் பிற்போக்காக இருப்பதாலேயே, அல்பேனியர்கள் சரீர பலம் உள்ள வீரர்களாயினும், இன்னும் நாகரிகமற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்களிடையே நவீன நாகரிகம் பரவுவதற்கு அந்த நாட்டில் உள்ள மலைகளும் காடுகளும் பள்ளத்தாக்குகளும் பெரும் முட்டுக்கட்டைகளாக இருந்து வருகின்றன.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

# உங்கள் குஜராத்தி ஜடைச்சிங்காரத்தின்

# அழகை பூர்த்திசெய்ய

## நீடித்து நிற்கும் பரிமளத்தோடுகூடின

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்

★ கூந்தல் தைலம் உபயோகியுங்கள்

**தினம்!**

இந்த ஜடைச்சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத்தரும் துண்டுப்பிரசுரம் நெ. 5க்கு விளம்பர இலாகா, தபால்பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென் பதை குறிப்பிடவும். மற்ற ஜடைச் சிங்காரங்களை விவரிக்கும் துண்டுப்பிரசுரங்களுக்கு வரவிருக்கும் விளம்பரங்களை கவனிக்கவும்.

இன்னுமொரு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்பு



இராஸ்மிக் கம். லிட., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

CBP. 12-X30 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள
கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக்
காப்பாற்றிக்கொள்ளுங்கள் ...



# லைப்பாயின்

# பாதுகாக்கும் நுரையினால்!




நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவறாமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது. உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.



# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான கிருமிகளிலிருந்து நிதமும் உங்களைக்காப்பாற்றுகிறது

L. 229-50 TM